


# அம்மா ஆ ஆ ஆ ஆ

அவனுடைய வேதனையைப் போக்கி அவனைச் சிரிக்கச் செய்யுங்கள், உட்வர்ட்ஸ் கிரைப் வாட்டர் கொடுப்பதன் மூலம். இப்பொழுது ஒரு நூற்றாண்டுக்கு மேலாகக் குழந்தைகள் (லட்சக்கணக்கில்) வாயு, வயிற்றுக் கோளாறு மற்றும் பல் முளைக்கும் போதுள்ள வேதனைகள் முதலியவைகளிலிருந்து நிவாரணம் அடைந்திருக்கின்றன. இத்தகைய நிவாரணத்தை உட்வர்ட்ஸ் மட்டுமே அளிக்கிறது. தலைமுறை தலைமுறையாகத் தாய்மார்கள் செய்தது தவறாகவே இருக்கமுடியாது!

## உட்வர்ட்ஸ்
## 'கிரைப் வாட்டர்'

100 வருஷங்களுக்கு மேலாக உலகெங்கிலும் உபயோகிக்கப்படுகிறது.



அங்கீகரிக்கப்பட்ட ஏஜெண்டுகள்: ஹெர்பர்ட்ஸன்ஸ் லிட். பம்பாய், கல்கத்தா, & லக்னோ ● டி. டி. கிருஷ்ணமாச்சாரி & கோ. மதராஸ், எம். ஜி. ஷஹானி & கோ. (டில்லி) பிரைவேட் லிட்., டில்லி.

Aiyars AT. 357-TM.

கல்கி

# பொருளடக்கம்

சோபகிருது, புரட்டாசி 20 ★ அக்டோபர் 6



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



பட விளக்கம்: 8—ம் பக்கம் ''என்ன சேதி''யில் பாருங்கள்

புகைபிடிக்கும் இங்கிதம்

# புகை விடு தூது!

காரியத்துடன் ஒருவரை அவரது அலுவலகத்தில் காண நேரும்போது, உங்கள் வரவை அறிவிக்கப் பெரியதொரு புகைப்படலம் எழுப்பிக் காட்டவோ, வந்ததற்கு அறிகுறியாக கணக்கற்ற சிகரெட்டுத் துணுக்குகளையும் தீக்குச்சிகளையும் சிதறவிட்டுச் செல்லவோ தேவையே இல்லை.



உயரிய பண்போடு உபயோகிப்பதற்கும் உதவுவதற்கும் உகந்தது

**பனாமா**

Panama

20

CIGARETTES

இழுக்க இழுக்க இன்பம் இறுதிவரை

விசேஷக் கலவை செய்வோர்:
கோல்டன் டுபாக்கோ கம்., ப்ரைவேட் லிட்.
பம்பாய்-56.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT. 615 TAM. Greens' Advtg.



மலர் 23 ☸ தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் ☸ இதழ் 10

# சாயம் வெளுத்தது!

'திராவிட முன்னேற்றக் கழகத்தின் செல்வாக்கைக் கண்டு பயந்து அதற்கு ஒரு பரிகாரமாகத்தான் ஸ்ரீ காமராஜ் அவர்கள் தமது திட்டத்தைக் கொண்டு வந்திருக்கிறார்' என்று ராஜாஜியும், அண்ணாதுரை அவர்களும் கூறியபோது காங்கிரஸ்காரர்கள் அதைக் காரசாரமாகக் கண்டனம் செய்தார்கள். காங்கிரஸின் தியாக உணர்ச்சிக்கு அவர்கள் இழுக்குக் கற்பிப்பதாகக் கட்சிப் பத்திரிகைகள் எழுதின; கேலிச் சித்திரங்கள் தீட்டின.

அப்படிச் செய்தவர்கள் முகத்திலெல்லாம் இன்று ஸ்ரீ எஸ். கே. பாட்டீல் அவர்கள் கரியைப் பூசிவிட்டார். 'தி. மு. க.வை முறியடிப்பதற்காகவே காமராஜ் தாம் பதவியிலிருந்து விலகிக் கட்சியைப் பலப்படுத்துவதாக முன்வந்தார். அதுதான் காமராஜ் திட்டம் என்ற பெயரில் அகில இந்திய ரீதியில் உருவாயிற்று. இதைப் பயன்படுத்தி வேண்டாதவர்களை யெல்லாம் வெளியேற்றும் படலம் நடைபெறுகிறது' என்று விண்டு கூறி, பொத்தைப் பூசணிக்காயை உடைத்தேவிட்டார் நேற்றுவரை மத்திய மந்திரியாக இருந்த ஸ்ரீ பாட்டீல் அவர்கள். பதவியில் இருந்தபோதைவிட பதவிலிருந்து விலகியபின் காங்கிரஸ்காரர்களுக்கு விவேகம் அதிகமாகிறது என்று முன்னொருமுறை ராஜாஜி கூறியதை ஸ்ரீ பாட்டீல் மெய்ப்பித்து விட்டார். இனியேனும் காங்கிரஸ்காரர்களும், அவர்கள் சொல்லிக் கொடுத்தபடி ஒப்பிக்கும் கிளிப்பிள்ளைகளும் பதவியிலிருந்து விலக்கப்பட்ட மந்திரிகளைப் புத்தராகவும், பட்டினத்தாராகவும் வர்ணித்து மாபெரும் முன்னோர்களின் பெருமைக்கு இழுக்கு உண்டாக்காமல் இருப்பார்கள் என நம்புகிறோம்.

இன்னும் பல விஷயங்களையும் ஸ்ரீ பாட்டீல் பட்டவர்த்தனமாக எடுத்துக் கூறியிருக்கிறார். 'எப்போதோ ஸ்வராஜ்யாவுக்கு நான் எழுதிய கட்டுரையைத்தான் மீண்டும் வாசிக்கிறேனோ என்று கண்களைக் கசக்கிக்கொண்டு ஸ்ரீ பாட்டீலின் அறிக்கையைப் படித்தேன்' என்று ராஜாஜி குறிப்பிடும் அளவுக்குக் காங்கிரஸின் ஒழுங்கீனத்தைப் பற்றி மனம் கசந்து பேசியிருக்கிறார் ஸ்ரீ பாட்டீல். காமராஜ் திட்டத்தோடு நில்லாமல் சுதந்திரத் தொழில் உரிமையையும் வற்புறுத்திப் பேசியிருக்கிறார் அவர். இதிலிருந்தே காங்கிரஸ் ஆட்சியில் மக்களின் தொழில் சுதந்திரம் எவ்வளவு நசுக்கப்பட்டிருக்கிறது என ஊகிக்கலாம். தனியாரின் தொழில் சுதந்திரத்தைவிடக் காங்கிரஸுக்குப் பிடிக்காத விஷயம் கட்சி அங்கத்தினர்களின் கருத்துச் சுதந்திரம். இதனால்தான் பாட்டீலின் பேச்சைக் கேட்டு இந்திரா காந்தியார் கலங்கிப் போகிறார். இன்னும் சில காங்கிரஸார் பாட்டீல் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்கவேண்டும் என்கிறார்கள். காங்கிரஸ் பொதுக் காரியதரிசி, 'காமராஜ் திட்டத்தைக் கண்டனம் செய்பவர்களைத் தண்டிப்போம்' என்று கட்சியினருக்கு வாய்ப் பூட்டு போடப் பார்க்கிறார். இனி எது நடந்தாலும் பல உண்மைகளை அம்பலப் படுத்தி விட்ட ஸ்ரீ பாட்டீலுக்கு நாடு நன்றி தெரிவிக்கிறது.

காமராஜ் திட்டத்தால் ஒருமாத காலமாக நாட்டின் மத்திய சர்க்காரும் ராஜ்ய அரசாங்கங்களும் ஸ்தம்பித்து விட்டன என்று அவர் கூறியிருக்கிறார். எதிரி எல்லையைச் சூழ்ந்துகொண்டிருக்கும் சமயத்தில், மந்திரிகள் எல்லாரும் தங்களின் சொந்த எதிர்காலத்தை நினைத்துக் கொண்டு நிர்வாகத்தைச் செயலற்றதாக்கியிருக்கிறார்கள். இந்தியாவைத் தவிர வேறெந்த ஜனநாயகத்திலாவது இப்படி நடக்குமா? 'தேசத்தின் நிர்வாகம் சீரழிந்து கொண்டே வருகிறது. மக்களுக்குக் கட்சிகளைப் பற்றிக் கவலை ஏதுமில்லை. நல்ல நிர்வாகம் வேண்டுமென்பதில்தான் அவர்களுக்கு அக்கறை உள்ளது' என்று ஸ்ரீ பாட்டீல் கூறியிருக்கிறார். ஆனால் காங்கிரஸ் கட்சிக்கு நிர்வாகத்

தைப் பற்றிக் கவலையே இல்லை. செயல் துடிப்போ, ஆக்கத் திறனோ உள்ளவர்களை யெல்லாம் கட்சிப் பிரசாரத்துக்கு இழுத்துக்கொண்டு, இரண்டாந்தரமானவர்களைக் கொண்டு நிர்வாகத்தை நடத்த வேண்டுமென்பது அதன் கருத்து.

வெளியேறிய மந்திரிகள் என்ன மாய மந்திரம் செய்து கட்சியைப் பலப்படுத்தப் போகிறார்கள் என்று மக்கள் பேசிக்கொள்ளுகிறார்கள். அசத்தியமும் அநீதியும் ஊடுருவிய வியாதிக்கு இந்த மந்திரம் பலிக்காது. பதவியிலிருந்த போதும் இவர்கள் நிர்வாகத்தை விடக் கட்சியில்தான் அதிகக் கவனம் கொண்டிருந்தார்கள். உதாரணமாக ஸ்ரீ காமராஜ் அவர்கள் நிர்வாகத்தை ஸ்ரீ பக்தவத்ஸலத்திடம் கொடுத்து விட்டு அதில் அதிகம் தலையிடாமல் கட்சிக் காரியங்களில்தான் ஈடுபட்டிருந்தார். அவரது தலையீடு அதிகம் இல்லாததால்தான் ஓரளவுக்கேனும் தமிழகத்தில் நிர்வாகம் நன்றாக நடைபெற்று வந்தது என்றுகூட எதிர்க் கட்சி அரசியல் பிரமுகர் ஒருவர் கூறியுள்ளார். இப்போது காமராஜ் அவர்களும், மற்ற மந்திரிகளும் பதவியிலிருந்து வெளியேறிய தற்கு ஒரே காரணம்தான் உண்டு. சற்றுக் கடுமையாகத்தோன்றினாலும் அந்தக் காரணத்திலேதான் உண்மை அடங்கியுள்ளது. காங்கிரஸ் தேர்தல் நிதிக்குப் பதவியில் இருப்பவர்களை விட, பதவியிலிருந்து விலகியும் மந்திரி சபையை ஆட்டி வைப்பவர்கள் கூச்சமில்லாமல் பொருள் திரட்ட முடியும். மாளவியா விவகாரம்போல் எதுவும் நிகழாமல், கெய்ரோனுக்கு ஏற்பட்டது போன்ற அபக்கியாதி எதற்கும் ஆளாகாமல், நிர்வாகத்துக்குக் கெட்ட பேரில்லாமல், நிர்வாகத்துக்கு வெளியே இருப்பதாகக் காட்டிக் கொள்பவர்கள் யதேச்சையாகப் பண வேட்டை ஆடுவதற்குத்தான் காமராஜ் திட்டம் பயன்படும்.

# நமது வாழ்த்துக்கள்

'காங்கிரஸ் குழுவினரில் இவரைவிட நல்ல முதன் மந்திரி கிடைக்க முடியாது' என்று நாம் சொல்லக் கூடியவர் ஸ்ரீ எம். பக்தவத்ஸலம் அவர்கள்.

தேச பக்திக்கும் தெய்வ பக்திக்கும் பெயரெடுத்த கௌரவம் வாய்ந்த குடியில் பிறந்தவர்; மெத்தக் கற்றவர்; 1937ம் ஆண்டு ராஜாஜியின் முதன் மந்திரிசபையில் பார்லிமெண்டரி காரியதரிசியாகப் பதவியேற்றதிலிருந்து, தமிழகத்தில் தோன்றிய எல்லா மந்திரி சபைகளிலும் தப்பாமல் இடம் பெற்றவர்; போலீஸ், உணவு, நிதி, கல்வி முதலிய எல்லா முக்கியமான துறைகளிலும் பணியாற்றிய அநுபவசாலி ஸ்ரீ பக்தவத்ஸலம் அவர்கள்.

இந்தத் துறைகளை எல்லாம் விட அவர் முக்கியமாகக் கருதக்கூடிய ஒரு துறையும் உண்டு. அதுதான் அறநிலையப் பாதுகாப்பு. சநாதன தர்மத்திலும் பாரதத்தின் சமய சம்பத்திலும் அயராத நம்பிக்கை கொண்ட ஸ்ரீ பக்தவத்ஸலம் அவர்கள் இந்தத் துறையை நிர்வகித்த தன் பயனாகத் தமிழகத்தில் பல ஆலயங்கள் புதுப் பொலிவு பெற்றுள்ளன. தெய்வத் திருமேனிகள் முறைப்படி பூஜைகள் பெற்றுள்ளன. இதனால் நமது ஆஸ்திகப் பெருமக்களின் ஆசியை வெல்



லாம் பெற்றிருக்கிறார் அவர். அவை அவருக்கு என்றும் துணை நிற்கும்.

ஸ்ரீ பக்தவத்ஸலம் அவர்கள் அமைதியும், நிதானமும் படைத்தவர். போதனா மொழி விஷயத்தில் அவர் உணர்ச்சி வசப்படாமல், தமிழர்கள் பாரதமெங்கிலும் மற்றோருடன் சம வாய்ப்புப் பெறுவதற்கு உகந்த ஒரு வழியைக் கடைப்பிடிப்பதற்காகத் தமிழ் நாட்டின் எதிர்காலப் பிரஜைகள் அவருக்கு நன்றி கூறவேண்டும்.

இதே துணிச்சலுடன் அவர் தமது முதன் மந்திரி பதவியை வகிக்க வேண்டும் என்று விரும்புகிறோம். தமிழர்கள் மற்றவர்களுடன் சம வாய்ப்புப் பெற ஆங்கிலம் எவ்வளவு அவசியமானது என்பதை உணர்ந்த அவர், தமிழ் நாட்டில் ஆங்கிலத்தை எதிர்ப்போருக்கு இளகிக் கொடுக்காதது போலவே தில்லியில் ஆங்கிலத்தை எதிர்த்து ஹிந்திக் கொடியைத் தூக்குவோரிடமும் தமது ராஜ்ய மக்களின் சார்பில் முழு ஆற்றலுடன் போராட வேண்டும்.

பொதுவாகவே, ராஜ்ய சர்க்காரை மத்திய சர்க்காரின் கைப்பாவையாக நடத்தும் இழி நிலைக்கு ஸ்ரீ பக்தவத்ஸலம் அவர்கள் இடமளிக்காமல் தமிழகத்தின் கௌரவத்தை நிலைநாட்ட வேண்டுமென விரும்புகிறோம்.

காங்கிரஸ் ஆட்சியில் அதிகபட்சமாக என்ன நன்மைகளை அடைய முடியுமோ அவற்றை ஸ்ரீ பக்தவத்ஸலத்தின் ஆட்சியில் தமிழ்நாடு அடையும் என்ற ஆசையுடன் நமது புதிய முதன் மந்திரியை வாழ்த்தி வரவேற்கிறோம்.

# இது போதாது

**ப**ழைய மந்திரிகள் செய்த தவறுகள் புது மந்திரிகளுக்குத் தெரிந்தாலும் அவற்றை அடியோடு மாற்றுவதற்கு அவர்கள் தயங்குகிறார்கள். இதனால் பழைய மந்திரிக்குக் கெட்ட பெயர் வரும்; அல்லது எல்லா மந்திரிகளின் காரியங்களுக்கும் பொறுப்பேற்கும் பிரதமருக்குக் கெட்ட பெயர் வரும் என்றெல்லாம் அவர்கள் நினைப்பது இயற்கையே. ஆனால் நண்பர்களின் பெயரைக் காப்பாற்றுவதற்காக நாட்டு மக்களைத் தொடர்ந்து இன்னலுக்கு ஆளாக்குவது நியாயமாகாது.

பழைய ஏற்பாட்டை மாற்றவே கூடாது என்று நினையாமல் அதில் சில மாற்றங்களைச் செய்திருக்கிறார் நிதி




மந்திரி ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரி யார் அவர்கள். அந்த அளவுக்கு நம் பாராட்டைப் பெறுகிறார் அவர். கட்டாயச் சேமிப்பிலிருந்து குறைந்த சம்பளக்காரர்களுக்கெல்லாம் விலக்களித்து அவர்களுக்கு ஆறுதல் அளித்திருக்கிறார். பழைய பொன் நகைகளை மாற்றிப் புதிதாகச் செய்யும்போது பதினாலு காரட்டைவிட உயர்ந்த தரத்திலும் செய்யலாம் என்று புதுக் கொள்கை வகுத்திருக்கிறார். பொன் விற்கும் விலையில் புதிதாகத் தங்கம் வாங்காமல் அநேகமாகப் பழைய நகைகளையே புதுப்பிக்கும் மக்களுக்கு இது நல்ல செய்திதான். இனி தங்களுக்குரிய நகைகளையே திருட்டுச் சொத்துப் போல் பயந்து காப்பாற்ற வேண்டியதில்லை.

எனினும் மொரார்ஜி திட்டத்தில் எவ்வளவு மாறுபாடுகள் செய்தாலும் அது முற்றிலும் சீராகி விடாது. தன்னிச்சையாகச் செய்ய வேண்டிய சேமிப்பை நிர்ப்பந்தத்தில் கொண்டு வருவது யார் விஷயத்திலுமே முறையற்ற செயல்தான். நிர்வாக ஊழலைக் குறைப்பதாலும் உதவாக்கரைத் திட்டங்களை ரத்துச் செய்வதாலும் கட்டாயச் சேமிப்பில் கிடைக்கக் கூடியதொகையை நிச்சயமாக ஈடுசெய்ய முடியும். ஸ்ரீ டி. டி. கே. இவ்விஷயத்தில் கவனத்தைச் செலுத்த வேண்டும்.

பழைய நகைகளுக்கு ஒரு மாற்று, புது நகைகளுக்கு ஒரு மாற்று என்று வைத்து சாமானிய பொற்கொல்லர்களுக்கெல்லாம் பெர்மிட்டுகள் தருவது என்கிற முறையில் பல புதிய ஒழுங்கீனங்கள் நிகழும். அவற்றைத் தடுக்க வேண்டும் என்பதில் மிகவும் துடிப்பாக இருந்தால் அதுவே அடக்குமுறை தர்பாராகிவிடும். புதுக் குழப்பங்களை உண்டாக்கும் தங்கச் சட்டத்தையும், மொரார்ஜியின் பழைய தங்கக் கட்டுப்பாட்டோடு ரத்துச் செய்துவிட்டு முன்போல் நாட்டில் பொன்னும் அத்துடன் மனச்சாந்தியும் ஒளிர வழி செய்ய வேண்டும். பாதிக்கிணறு தாண்டிப்பயனில்லை.

# என்ன சேதி?

## அசோக் மேத்தாவுக்குப் பதவி

ஸ்ரீமான் அசோக் மேத்தா, திட்டக் கமிஷனின் துணைத் தலைவராக நியமிக்கப்பட்டிருக்கிறார். எதிர்ப்புகளை விழுங்கிவிட இன்றைய காங்கிரஸ் அரசாங்கம் இப்படியெல்லாம் செய்கிறது.

சில நாட்களுக்கு முன் பி. சோ. கட்சியின் முக்கியமான தலைவர்களில் ஒருவரும், கேரள மந்திரி சபையின் முதன் மந்திரியாகவும் இருந்த ஸ்ரீ பட்டம் தாணுப் பிள்ளை அவர்களுக்கு பஞ்சாப் கவர்னர் பதவி நல்கியது நினைவிருக்கலாம்.

இப்படி பி. சோ. தலைவர்களை காங்கிரஸ் ஸ்வீகரித்துக் கொண்டால், இனி பி. சோ. கட்சியினால் சர்க்காரை எப்படிக் குற்றம் கூறமுடியும்? இப்போதே பி. சோ. கட்சியில் பிளவு ஏற்பட்டுவிட்டது. அசோக் மேத்தா திட்டக் கமிஷன் துணைத் தலைவர் பதவியை ஒப்புக் கொண்டது சரி, என்று சிலரும் தவறு என்று வேறு சிலரும் அக்கட்சியில் கூறு



## சென்னையில் ராஷ்டிரபதி

சமீபத்தில் சென்னைக்கு விஜயம் செய்த டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்கள் சென்னை உயர்நீதி மன்றத்தில் முன்னாள் பிரதம நீதிபதி ஸ்ரீ பி. வி. ராஜமன்னார் அவர்களுடைய உருவச் சிலையினைத் திறந்து வைத்தார். அடுத்தாற்போல் திருவான்மியூரில் அமைந்துள்ள கலாக்ஷேத்திரத்தின் புதிய மன்றத்தைத் திறந்து வைத்தார். 1-5: பிரதம நீதிபதி ராஜமன்னாரின் உருவச் சிலை திறப்பு விழாப் படங்கள். 6-11: கலாக்ஷேத்திரத்துக்கு ராஷ்டிரபதி வருகை தந்து சிறப்பித்த காட்சிகள்.

கிறார்கள். தானும் சரியாக ஆட்சி நடத்த காங்கிரஸ் மறுக்கிறது. வளரும் எதிர்க் கட்சிகளை நசுக்க எல்லாவித அஸ்திரங்களையும் பிரயோகிக்கிறது. ஒரே கட்சியின் எதேச்சாதிகார ஆட்சியை நிலை நிறுத்தி ஜனநாயகத்தைக் குழி தோண்டிப் புதைக்கும் திட்டம் இது.

## ருஷ்ய — அமெரிக்க உறவு

அமெரிக்க - ருஷ்ய உறவில் ஒரு புதிய அத்தியாயம் தொடங்கி யிருக்கிறது. க்யூபாவிலிருந்து ருஷ்யப் பிரதமர் க்ருஷேவ் தமது ராணுவத் துருப்புக்களை வாபஸ் பெற்றதிலிருந்தே இந்த நல்ல திருப்பம் ஏற்பட்டது என்று சொல்ல வேண்டும். இந்தச் சுமுகமான உறவின் நல் வளர்ச்சி காரணமாகவே, இரு வல்லரசுகளிடையே அணு ஆயுத சோதனை நிறுத்த உடன்படிக்கை ஏற்பட்டு, இன்று உலகம் ஓரளவு நிம்மதிப் பெருமூச்சு விடுகிறது.

இந்த உடன்படிக்கைக்குப் பின்னும் ருஷ்யா, அமெரிக்காவுடன் தனது நேச உணர்ச்சியைப் பலப்படுத்திக்கொள்ள விரும்புகிறது என்பதை ருஷ்யாவில் உள்ள அமெரிக்கப் பத்திரிகை நிருபர்கள் கூறுகிறார்கள். அமெரிக்காவில் தற்போது நடைபெற்று வரும் நீக்ரோக்களின் சம உரிமைப் போராட்டம் பற்றி ருஷ்யா குற்சிதமாக பேசாமலிருப்பதும் ஒரு நல்ல சூசகம். ருஷ்யாவின் இந்த நேச உணர்ச்சியை உணர்ந்துகொண்ட அமெரிக்காவும் தனது உபரி கோதுமையை ருஷ்யாவுக்கு விற்கத் தயாராக இருப்பதாகக் கூறுகிறது. நேற்றுவரை விரோதமாக இருந்த இரு வல்லரசுகள் இன்று ஒன்றுக்கொன்று நேசக் கரம் நீட்டி நட்பு கொண்டுள்ளன.

சீன ஆக்கிரமிப்பை எதிர்க்க அமெரிக்காவிடமிருந்து பலத்த ராணுவ உதவியைக் கோரிப் பெற்றால் ருஷ்யா அதை வரவேற்கவே செய்யும் என்று ராஜாஜி அன்றைக்கே சொன்னார். அது உண்மை என்று உலக ராஜதந்திரிகள் யாவரும் இன்று கருதுகிறார்கள்.

## உவகையூட்டிய உபத்திரவக்காரர்

'விவேகத்துக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொண்ட ஓர் உபத்திரவக்காரர் இங்கு அடக்கமாகியிருக்கிறார்' என்று என் கல்லறையில் எழுதுங்கள்— இவ்வாறு கூறிய உலகப் பிரசித்தி பெற்ற கேலிச் சித்திரக்காரர் ஸர் டேவிட் லோ இன்று கல்லறையில் கண்ணயர்ந்து விட்டார்.

'தீவிரவாதம்' எனப்படும் அரசியல் மனச்சார்புள்ள டேவிட் லோ பழைமைவாதியான பீவர்ப்ருக் பிரபுவின் 'ஈவினிங் ஸ்டார்' ஏட்டில் சர்வ சுதந்திரமாக இருபத்து மூன்றாண்டுகளுக்குக் கார்ட்டூன் வரைந்திருக்கிறார். தமது முதலாளியான பீவர்ப்ருக்கையே கேலி செய்து சித்திரிக்கும் அளவுக்குத் துணிச்சல் பெற்றவர் அவர். இரண்டாம் உலக மகாயுத்தத்தின்போது அவர் தமது கார்ட்டூன் மூலமே மக்களிடம் வீர எழுச்சியை உண்டாக்கினார். லோவின் கார்ட்டூன்கள் ஸ்டாலினின் போஜன அறை உள்படப் பல இடங்களை அலங்கரித்தன. பாராட்டைப் போலவே கண்டனமும் நிறையப் பெற்றவர் லோ. முஸலினி, ஹிட்லர் ஆகியோர் இவரது கார்ட்டூன்களுக்காகவே பத்திரிகைகளைத் தடை செய்ததுண்டு.

பெருமை வாய்ந்த 'ஸர்' பட்டம் பெற்ற டேவிட் லோ கார்ட்டூன் கலைஞர்களின் மதிப்பையே உயர்த்தி விட்டார். அவரது படைப்பான கர்னல் ப்ளிம்ப் இன்று வெற்றுவேட்டு ஆசாமிகளுக்கெல்லாம் ஓர் உருவகமாக உலக அரங்கில் இடம் பெற்றுவிட்டார். லோவும் உலகில் நகைச்சுவை பொருந்திய எல்லோருடைய உள்ளத்திலும் இடம் பெற்றுவிட்டார். இவரது புகைப்படத்தையே இவ்விதழ் பொருளடக்கப் பகுதியில் வெளியிட்டு மரியாதை செய்கிறோம்.


## அடுத்த இதழில்

வைட. சுப்பிரமணியம் எழுதும் நெடுங்கதை
**உயிர்ப் பொம்மை**

நாடாண்ட நங்கையர் — விக்டோரியா மகாராணியார்
கலைவளர்க்கும் கோயில்கள் — குடும்பக் கலைக் கல்லூரி
சிறப்புக் கட்டுரை — அதிசய மனிதரின் அரிய சாதனைகள்

தினப்படி உடுப்பதற்கு மனங்கவர்

# பின்டெக்ஸ்

கைநெசவுப் புடவைகள்.

**பின்னி** மேற்பார்வையில்

தயாராகி அவர்களால் விற்பனையாவது

பின்டெக்ஸ் கைநெசவுப் புடவை உடுக்கும் ஒவ்வொரு நாளும் உங்களுக்கு விசேஷ நாள் தான். பின்டெக்ஸ் புடவைகள் நம்பிக்கைக்கு உகந்தவை. ஏனெனில், பின்னியின் மேற்பார்வையில், ஒரே சீரான தரத்தில் தயாராகும் இவைகளில் மிகச் சிறந்த நூலே பயன் படுகிறது. நீடித்த உழைப்புக்கும் கெட்டிச் சாயத்திற்கும் புகழ் பெற்றவை இப்புடவைகள்.




உங்களுக்குத் தேவையான பின்டெக்ஸ் கைநெசவுத் துணிகளை இந்த அடையாளம் காணும் அனுமதி பெற்ற பின்னி விற்பனையாளரிடமிருந்தே வாங்குங்கள்.



பின்னி & கம்பெனி (மதரூஸ்) லிமிடெட்,
மதரூஸ்

FWT/BY/BX-2323

## அவள் அழகி...அவள் பாண்ட்ஸ் உபயோகிக்கிறாள்

### உங்கள் முக சருமத்திற்கு மினுமினுப்பும் இளமை வசீகரமும் அளிக்க எண்ணெய்ப்பசையற்ற உன்னத

# பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம்




பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் முக சருமத்தை பூப்போல மென்மையாகவும், மினுமினுப்பாகவும், மனோகரமாகவும் வைக்கிறது. முகத்திலுள்ள சிறு பருக்கள் போன்றவை நீங்க வழி செய்கின்றது. இதைத் தடவி பவுடர் போட்டுக் கொண்டால் பவுடர் ஒரே சீராக மணிக்கணக்கில் படிந்திருக்கும். உங்கள் முக வனப்புக்கு மெருகூட்ட பாண்ட்ஸ் ஃபேஸ் பவுடர் உபயோகியுங்கள். அது சீராகப்படிகிறது, முகத்திலுள்ள சிறு குறைகளை மூடி மறைக்க உதவுகிறது.

**பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம் :**



தினமும் இரவில் உங்கள் முகத்திலும், கழுத்திலும் பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம் தடவுங்கள். இரண்டு நிமிஷங்களுக்குப் பிறகு அதிகப்படியான க்ரீமைத் துடைத்து விடுங்கள். நுரைத்திரள் சுத்தம் செய்யமுடியாதபடி சருமத்தினுள் அடைந்து கிடக்கும் அழுக்கு முதலியவைகளை அது வெளியேற்றும்.

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேட்டட்

(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பட்டது)






தேவாசுரப் போட்டியிலே கடல் கடைந்ததைப் பாடுகிறார் பேயாழ்வார்:

மலைமுகடு மேல்வைத்து
வாசுகியைச் சுற்றி

[மலைமுகடு - ஓங்கிய சிகரத்தையுடைய மந்தர பருவதத்தை. மேல் வைத்து - தன் முதுகின் மீது வைத்துத் தாங்கிக் கொண்டு. வாசுகியைச் சுற்றி-வாசுகியை அந்த மலையிலே தாம்புக் கயிறாகச் சுற்றி.]

ஆமையாகக் கடலில் மூழ்கி நின்று மந்தர மலையைத் தன் முதுகின்மேல் தாங்கி வாசுகியை அந்த மலையிலே கயிறாகச் சுற்றி.

தலைமுகடு தான்ஒருகை
பற்றி

[தலைமுகடு - மேலே வைத்த மலைச் சிகரத்தை. தான் ஒரு கை பற்றி-பிறழ்ந்து விடாதபடி ஒரு கையால் பிடித்துக்கொண்டு.]

— அலைமுகட்டு
அண்டம்போய் நீர்தெறிப்ப
அன்று கடல் கடைந்தான்

[அலைமுகட்டு-கடலைக் கடைந்த சுழற்சியில் அலைகளின் சிகரங்கள். அண்டம் போய் நீர் தெறிப்ப-அண்டமெங்கும் தண்ணீர் சிதறும் படியாக. அன்று கடல் கடைந்தான் - அன்றொரு நாள் கடலைக் கடைந்தான்.]

அலைத் தண்ணீர் அண்டமெங்கும் போய்ச் சிதறும்படியாகக் கடலைக் கடைந்தவன் யார்?

பிண்டமாய் நின்ற
பிரான்

[பிண்டமாய் - ஜகத்காரணமாய். நின்ற - அமைந்துள்ள. பிரான் - எம்பெருமானாகிய சுவாமி.]

'பிண்டமாய் நின்ற' என்பதில் அடங்கியிருக்கும் பொருள் என்னவென்றால், பல்வேறு அவதாரங்கள் ஒரு புறம் இருக்க, சர்வேசுவரனே ஜகத்தும், ஜகத்துக்குக் காரணமும் இரண்டும் ஆவான்! பிண்டம் என்றால் உருவம் இல்லாத உருவம்; மாவு முதலில் பிண்டமாக இருந்து பிறகு அடையாகவும் மற்றும் வேறு பண்டங்களாகவும் ஆவதுபோல்! ஆனால் மாவைப் பிசைவதும் பண்டம் ஆக்குவதும் அவனே!

தேவாசுரப் போராட்டம் ஆவது, சிருஷ்டியில் உண்டான நன்மைக்கும் தீமைக்கும் இடையே நடக்கும் போர். கடல் என்பது உயிர்களுக்குச் சாதனமாக அமைந்திருக்கும் சகல பொருள்களையும் குறிக்கும். நன்மை ஒரு புறமும் தீமை ஒரு புறமும் இந்தக் கடலைக் கடைகின்றன. கடைந்ததன் பயனாக விஷமும் அமிருதமும் இன்னும் பலவும் விளைகின்றன. விஷத்தைப் பருகி அடக்கி மக்களைக் காப்பவன் இறைவனே. இதுவே நீல கண்ட மூர்த்தியில் அடங்கியுள்ள உருவகத்தின் பொருள்.

நம்முடைய சமயத்தில் உபதேசிக்கப் பட்ட தத்துவங்கள் வெறும் தத்துவங்களாகவே இருந்திருப்பின், இத்தனை காலம் நிலைத்திருப்பது முடியாது. மக்கள் உள்ளத்தில் பதியும் வண்ணம் அவற்றிற்கெல்லாம் உருவம் கொடுத்து, தேவாசுரப் போராகவும், கடல் கடைந்த கதையாகவும், பொங்கிய விஷத்தைப் பருகிய நீலகண்டனாகவும் அமைத்திருக்கிறபடியினால்நீடித்து நின்று மக்களுக்கு உதவுகின்றன.

மலைமுகடு மேல்வைத்து
வாசுகியைச் சுற்றி
தலைமுகடு தானொருகை
பற்றி — அலைமுகட்டு
அண்டம்போய் நீர்தெறிப்ப
அன்று கடல்கடைந்தான்
பிண்டமாய் நின்ற
பிரான்!

ராஜாஜி - சோமு






எடுப்பான ஆடைகள் - எங்கும் அணிந்து செல்லத்தக்கவை! எடுப்பான ஆடைகள் - எங்கும் அணிந்து செல்லத்தக்கவை!



## சக்தி ஸில்க்குகள் மற்றும் ஸூட்டிங்குகள் • ஒரு போதார் தயாரிப்பு

அணிவதற்கு ஆனந்தம், துவைப்பதற்கு சுலபம்—சக்தி ஸில்க்குகள்! நொடியில் உலரக்கூடிய இவை எத்தனை முறை துவைத்தாலும் சுருக்கம் விழாமல் புதுமைப் பொலிவுடன் விளங்குபவை!- நீடித்து உழைக்கும், மடிப்புக் கலையாத சக்தி ஸூட்டிங்குகளை அணிந்து, நாள் முழுவதும் மலர்ந்த முகத்துடனும், தன்னம்பிக்கையுடனும், திகழுங்கள்!

SHILPI-SM-347A TAM

அந்தக் கடையில் அவர் பொருள்கள் வாங்கிக் கிட்டத் தட்ட ஒரு வருடம் ஆகிவிட்டது. எத்தனையோ முறை ஆள் அனுப்பியும் அவர் பணம் தரவில்லை. அந்தப் பில் வசூலாகாமல் போய்க் கொண்டிருப்பதைக் காண அந்தக் கடைக்காரருக்கு ஒரு வேடிக்கை தோன்றியது. கடிதம் ஒன்றை எடுத்தார். "தங்கள் பில்லுக்கு இன்றோடு ஓர் ஆண்டு பூர்த்தியாகிறது. என்ன செய்வதாக உத்தேசம்?" என்று எழுதித் தபாலில் சேர்த்தார்.

மறு நாளைக்கு மறு நாள் பதில் வந்தது: 'பில்'லுக்கு ஓராண்டு நிறைவேறுகிறது என்னும் விஷயத்தை நினைவுபடுத்தியமைக்கு என் நன்றி. ஏழை எழுத்தாளனான நான் வேறு என்ன செய்ய முடியும்? 'பில்'லின் ஆண்டு நிறைவுக்கு என் இதயம் கலந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்வதைத் தவிர? என் வாழ்த்து காலந் தாழ்ந்ததாயிருந்தாலும் 'பில்' பல்லாண்டு வாழப் பிரார்த்திக்கிறேன்!" என்று அதில் எழுதியிருந்தது.

ஃ ஃ ஃ

1952—ம் ஆண்டுத் தொடக்கம். கல்கத்தா நாடக மேடையொன்றில் 'மகாப் பிரபு சைதன்யர்' என்னும் நாடகம் நடந்துகொண்டிருந்தது. சுபாஷ் சந்திர போஸின் தாயாரும் நாடகம் பார்க்க வந்திருந்தார்.

'நள்ளிரவு நேரம். அமைதி நிலவிய இருள். நிமாயி (மகாப் பிரபு சைதன்யரை வீட்டார் செல்லமாக இப்பெயர் சொல்லியே அழைப்பர்) தம் தாயாரையும் விஷ்ணுப்ரியா என்னும் தம் மனைவியையும் பிரிந்து சாதனை புரிவதற்காகப் புறப்பட்டுச் செல்கிறார்.'

இக்காட்சியை வெகு உருக்கமாக நடித்தனர் பாத்திரமேற்றிருந்தவர்கள். பார்வையாளர் பக்கத்தில் ஊசி விழுந்தாலும் ஒலி கேட்குமளவுக்கு அமைதி நிலவியிருந்தது. திடீரென்று அந்த அமைதியைக் கிழித்துக் கொண்டு ஒரு விம்மல் எழுந்தது. அதோடு கலந்து, "என் 'நிமாயி' எங்கே?" என்ற கேள்வியும் பிறந்தது. அந்தக் கேள்வியில் தான் எத்தனை ஏக்கம்! விளக்குப் போடப் பட்டது. நாடகம் தடைபெற்று நின்றது.

சுபாஷ் பாபுவின் தாயார் மூர்ச்சையுற்றுக் கிடந்ததை மக்கள் கண்டனர்.

ஃ ஃ ஃ

"டேய்! இந்தச் சோனிச் சீனுவை இலேசுப் பட்டவன் என்று நினைக்காதே! சொன்னால் சொன்னபடி செய்து காட்டுவான்!" என்று மார் தட்டினான் சோனிச் சீனு.

"குண்டுச் சீமானாலேயே முடியாத காரியம். எதற்காக வீண் ஜம்பம் அடித்துக் கொள்ளுகிறாய்?" என்றான் மண்டை பெருத்த மகாதேவன்.

சோனிச் சீனு மார் தட்டிக் கொண்டது வேறு எதற்கும் இல்லை. ராணுவத்தில் சேர்ந்து சேனாபதியாக வரவேண்டும் என்பதற்காகவே.

ஊதினால் பறக்கும் உடம்பை வைத்துக் கொண்டு ஆசை நிறைவேற வேண்டுமென்றால் அது நடக்கக் கூடிய காரியமா?

அவன் ஆசை, வெறும் ஆசையாக, நிறைவேறாத ஆசையாகவே இருந்தது. மண்டை பெருத்த மகாதேவனோ ஏதோ ஒரு கம்பெனியில் தொத்திக் கொண்டு வேலையில் அமர்ந்து வெளியூருக்குப் போய் விட்டான். சோனிச் சீனுவுக்கு அந்தப்பாக்கியம்கூடக்கிட்டவில்லை; கலியாணம் செய்து கொண்டு ஊரிலேயே குடியும் குடித்தனமுமாக இருக்கலானான்.

மகாதேவன் பல ஆண்டுகள் கழித்து அவ்வூருக்கு வந்தான். சீனுவைப் பார்த்தான். பழைய விஷயங்கள் நினைவுக்கு வரவே, "ஏண்டா, சீனு! அந்தக் காலத்தில் ஏதோ பெரிதாக அளந்தாயே! ஒரு வேலை என்று ஊரை விட்டுக் கூடப் போக வில்லை போல் இருக்கிறதே!" என்றான்.

சோனிச் சீனுவுக்குத் தன்னைக் குறைத்துக் கொள்ள மனம் வரவில்லை. "ஊரை விட்டுப் போகாவிட்டால் என்ன? ஐயா சொன்னால் சொன்னதுதான்! சொல்லைச் செயலில் காட்டாத முண்டம் என்று நினைக்காதே!" என்றான்.

"அப்படியானால் இப்பொழுது ஐயா சேனாபதியாகி விட்டாராக்கும்!" என்று மகாதேவன் எகத்தாளமாகக் கேட்டான்.

"சந்தேகமென்ன? வெறும் சேனாபதி இல்லை, அப்பா! ஐயா இப்பொழுது தேவ சேனாபதியாக்கும்!" என்றான் சீனு.

ஒரு வேளை சீனுவின் மறை கழன்றிருக்குமோ என்று ஐயம் கொண்ட மகாதேவன் சீனுவை விழித்துப் பார்த்தான்.

# நிமிஷக் கதைகள்

"என்ன விழிக்கிறாய்? தேவசேனா என்னும் பெண்ணைத் திருமணம் செய்து கொண்டு அவளுக்குப் பதியாகி விட்டேன்! இப்பொழுது நான் தேவசேனாபதியா, இல்லையா, சொல்!" என்று கூறிய சீனுவின் பார்வையில் ஒரு ராணுவ மிடுக்குப் பளிச்சிட்டது.

ஃ ஃ ஃ

"நேற்று இரவு என் வீட்டுக்கு ஒரு திருடன் வந்து விட்டான். பூனை போலப் பதுங்கி வந்து என் தலை மாட்டில் மாட்டியிருந்த சட்டைப் பையில் கையும் போட்டு விட்டான், நான் தூங்கிக் கொண்டிருப்பதாக நினைத்து!"

"நீ என்ன செய்தாய்?"

"சிரித்தேன்!"

"சிரித்தாயா? எதற்கு?"

"மணிபர்ஸிலிருந்து பணம் முன்னாடியே கை மாறிப் பறிபோயிருந்தது."

"அப்போ யாராவது தெருவிலேயே ஜேப்படி செய்து விட்டானா?"

"இல்லை. வீட்டுக்குப் போன பின்தான்; முகம் கழுவிக் கொள்ளக் குளியலறைக்குப் போய் விட்டுத் திரும்பி வந்தால், என் மனைவியே மணிபர்ஸைத் தேட்டை போட்டுக் கொண்டிருந்தாள். அவள் கைபட்டபின் ஒரு நயாபைசா அதில் மிச்சமிருக்குமா? திருடனுக்கே இவ்விவரத்தைச் சொன்னேன்; அவன் சிரித்துக் கொண்டு ஓடினான். நான் சிரித்துக் கொண்டு படுத்தேன்."

# குண்டு மல்லிகை

## அரு. ராமநாதன்

உமாவின் பேச்சைக் கேட்ட பிச்சுமணிக்கு என்ன சொல்வதென்று புரியவில்லை. தயக்கத்துடன் அவளைப் பார்த்தான். அவள் மேலும் தொடர்ந்தாள்: "ஆனால் என் சித்தியின் குழந்தை இறந்த பிறகு ஓர் உண்மையையும் தெரிந்து கொண்டேன். அதாவது நாம் எதன் மீது அபரிமிதமான ஆசை வைக்கிறோமோ, அதை ஆண்டவன் விரைவில் நம்மிடமிருந்து எடுத்துக் கொண்டு விடுவான். நம்முடைய அபரிமிதமான ஆசையே நமக்கும் பிறருக்கும் துன்பமாக மாறிவிடும்! இந்தத் தத்துவத்தை நான் உணர்ந்து கொண்ட பிறகு நான் எதன் மீதும் அளவு கடந்த பிரியமோ, பற்றுதலோ வைப்பதில்லை! அதன் விளைவாக என்னுள் ஒரு தன்னடக்கத்தையும் சுலபமாகப் பழக்கிக் கொண்டேன். வாழ்க்கையில் ஓர் அமைதியும் காண்கிறேன்" என்றாள் உமா.

'எதன் மீதும் பிரியம் வைப்பதில்லை' என்று அவள் சொன்ன தன்னடக்கத் தத்துவம் பிச்சுமணிக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. 'ஆசைதான் வாழ்க்கையின் சுவை' என்று ஒரு புது சித்தாந்தத்தை அவனுடைய வாலிப உள்ளம் எழுப்ப முயன்றது.

ஒரு கணம் அவன் முகத்தைத் தொங்கப் போட்டபடியே இருந்துவிட்டுப் பிறகு ஏதோ யோசித்தவனாக, "இந்த வரம் கொடுக்கும் சின்னப் பிள்ளையாரை உங்களிடம் உங்கள் தாத்தா கொடுத்திருக்கிறார், இல்லையா?" என்று கேட்டான்.

"ஆமாம். என் தாத்தா கடைசிக் காலத்தில்தான் இந்தப் பிள்ளையாரைக் கொடுத்தார். இதை அவர் என்னிடம் கொடுத்து, 'உமா! என்றாவது ஒரு நாள் உன் பிள்ளையாரைக் கொண்டு வா என்று சொல்லுவேன்! அப்போது நீ சிறிதும் அழாமல், சிறிதும் தயங்காமல் இந்தச் சின்னப் பிள்ளையாரைக் கொண்டு வந்து இவருடைய சிரித்த முகத்தை என் கண் முன்னால் காட்ட வேண்டும். அப்போது என் கண்களுக்கு வேறு எதுவுமே தெரியக் கூடாது. என் காதுகளுக்கு எந்த அழுகைச் சத்தமும் எட்டக் கூடாது' என்று கேட்டுக் கொண்டு, 'இந்தக் கோரிக்கை உன் பாட்டிக்குக் கூடத் தெரியக் கூடாது. உன் மனத்திலேயே வைத்திருக்க வேண்டும்' என்று வாக்குறுதியும் வாங்கிக்கொண்டார். பிறகு படுக்கையில் கிடந்த அவர் ஒரு நாள் விடியற்சாம நேரத்தில் திடீரென விழித்துக் கொண்டு 'உமா' என்று என்னைக் கூப்பிட்டு இந்தச் சின்னப் பிள்ளையாரைக் கொண்டு வரச் சொன்னார். எனக்கு நெஞ்சு திக் திக்கென்று அடித்துக் கொண்டது. ஓவென்று அழவேண்டும் போலிருந்தது. ஆனாலும் தாத்தா



வுக்குக் கொடுத்த வாக்குறுதியை மனத்தில் நிறுத்தி என்னைச் சமாளித்துக் கொண்டு இந்தப் பிள்ளையாரை எடுத்துப் போய் என் தாத்தாவின் கண்ணெதிரே காட்டினேன். தாத்தா சிரித்த முகத்துடனே இந்தச் சிரிப்பு முகப் பிள்ளையாரைப் பார்த்துக் கொண்டேயிருந்தார். அப்படியே அவர் உயிரும் பிரிந்துவிட்டது'' என்று உமா கண்களில் நீர் ததும்பக் கூறினாள்.

அதைத் தொடர்ந்து விசித்திரமான ஒரு மௌனம் நிலவியது.

அந்த மௌனத்தின் துயர சஞ்சாரத்தைப் பிச்சமணி மாற்ற முயன்றவனாக, ''இந்தப் பிள்ளையாரிடம் எப்போதாவது ஒரே ஒரு வரம் கேட்டால் இது நிச்சயம் நிறைவேறுமல்லவா?'' என்று கேட்டான்.

''ஆமாம்!'' என்றாள் உமா.

''நீங்கள் எப்போதாவது இவரிடம் வரம் கேட்டிருக்கிறீர்களோ?''

''இல்லை! இவரிடம் ஒரே ஒரு வரம் தானே கேட்க முடியும்?''

''நானும் இவரிடம் வரம் கேட்கலாமா...?''

''ஓ! கேட்கலாம்!''

''அப்படியானால் இவரிடம் நான் ஒரு வரம் கேட்கப் போகிறேன்!'' என்று உற்சாகமாக ஆரம்பித்த பிச்சமணி ஆவல் ததும்பும் விழிகளால் உமாவைக் குறுகுறுவெனப் பார்த்தான்.

''என்ன வரம், பிச்சமணி?'' என்று உமா பரபரப்புடன் கேட்டாள்.

''அதை நான் சொல்ல மாட்டேன்!'' என்று முகம் சிவக்கச் சொன்ன பிச்சமணி பெண்களைப் போல் நாணத்தோடு நெளிந்தான். உமா வியப்புடன் அவனை ஏறிட்டுப் பார்த்தாள்.

அவளுடைய பார்வை ஒரு புது அர்த்தத்தைக் கிரகிக்க முயல்வது போல் தொனித்தது. இதுவரை அவள் உணர்ந்திராத ஒரு புதுமை உணர்ச்சி அவள் உள்ளமெங்கும் பரவி, உடம்பெல்லாம் புல்லரித்து முகம் குப்பென்று வியர்த்தது.

அப்படியே உமா தலைகுனிந்து அசைவற்று நின்றாள். அதன் பிறகு பிச்சமணி அங்கு நிற்கவில்லை! உற்சாகத்தின் கிளுகிளுப்போடு அங்கிருந்து ஓடியே போய்விட்டான்!



அத்தியாயம் பதின்மூன்று

# இரு துருவங்கள்

வக்கீல் பீதாம்பரத்தின் குழந்தைகளுக்கு டியூஷன் சொல்லிக் கொடுப்பதற்காக உமா அவருடைய வீட்டுக்குப் புறப்பட்டுச் சென்றாள்.

பீதாம்பரம் சிறுவயதிலேயே சாமியாராகப் போக வேண்டியவர். தமது தந்தையின் வற்புறுத்தலினால் சட்டத் தொழிலுக்குப் படித்துத் தாயாரின் சாகஸங்களினால் சம்சார பந்தத்திலும் ஈடுபட்டு, முக்கால் டஜன் குழந்தைகளுக்குத் தந்தையாக விளங்கினார்! சட்டப் புத்தகங்களையும், கோர்ட் நடவடிக்கைகளையும் விட்டால் அவருக்குச் சம்சாரத்தைத் தவிர வேறு பொழுதுபோக்கு எதுவும் இல்லை! அவருடைய சம்சாரம் திரிபுர சுந்தரியும், 'மூக்கும் விழியுமாக' அழகாக இருப்பாள். கணவவின் குறிப்பறிந்து குதூகலமாகவும் நடப்பாள். ஆனால் ஒன்பது குழந்தைகள் பெற்ற பிறகு உடம்பு அவரை வற்றலாக உருமாறி, அழகுக் கவர்ச்சியின் துணுக்குகள் மட்டும் ஆங்காங்கே ஒட்டிக் கொண்டிருக்க, அடிக்கடி சில் லறை வியாதிகளுக்கு ஆளாகி, பெரும்பாலும் மாடியில் உள்ள தன் படுக்கையறையிலேயே காலத்தைக் கழித்து வந்தாள். பீதாம்பரமோ குடும்பக் கட்டுப்பாட்டை உத்தேசித்து பம்பாய், கல்கத்தா என்று அடிக்கடி வெளியூர் வழக்குகளைத் தேடிப் போய் விடுவார்!

அவருடைய வீட்டு வாசற்படியில் குழந்தைகள் வரிசையாக அணிவகுத்து புத்தகப் பைகளுடன் கொலுப் பொம்மைகள் போல் உட்கார்ந்திருந்தன.

உமாவைக் கண்டதும் அவை உற்சாகத்துடன், ''டீச்சர், டீச்சர்!'' என்று கூவிக் கொண்டே ஓடி வந்து அவளைச் சூழ்ந்து கொண்டன. ஒரு குழந்தை உமாவின் மெல்லிய இடுப்பைத் தன் இரு கைகளாலும் கட்டிக் கொண்டு தொங்கியது. இன்னொரு குழந்தை அவளுடைய குடையைப் பிடித்து இழுத்தது. ஆறு வயதுள்ள சச்சு அவளுடைய முந்தானையைப் பிடித்து இழுத்து, வழக்கமான முத்தத்துக்காக ஏங்கி நின்றது.

எட்டு வயதுள்ள ரவி, ஓர் ஆனந்தத் துள்ளலுடன், ''டீச்சர்! எங்கள் சிங்கப்பூர் சித்தப்பா வந்திருக்கிறார் டீச்சர்! எங்களுக்குப் பிஸ்கட், மிட்டாய் எல்லாம் வாங்கிக் கொண்டு வந்திருக்கிறார். இதோ உங்களுக்கு ஒரு மிட்டாய், டீச்சர்!'' என்று ஒரு மிட்டாயை நீட்டினான். அதைத் தொடர்ந்து எல்லாக் குழந்தைகளும் ஆளுக்கொரு மிட்டாயாக உமாவின் கையில் திணித்தன.

குழந்தைகளின் அந்த அன்புச் சொரிவையும் அரவணைப்பையும் கண்டு உமாவுக்கு இனம் புரியாத இன்பப் பரவசம் ஏற்பட்டு அவள் கருவிழிகளில் ஆனந்தக் கண்ணீர் துளித்தது.

''டீச்சரக்கா! இதோ பாருங்கள், சிங்கப்பூர் ரிப்பன்!'' என்று ராஜி ஒரு டப்பாவில் உள்ள பல விதமான வர்ண ரிப்பன்களைக் காட்டியபடி குதித்தாள். அவள்தான் குழந்தைகளில் மூத்தவள். பதின்மூன்று வயதுதான் ஆகிறது. இருந்தாலும் தன் அப்பாவின் அங்கவஸ்திரத்தை எடுத்துத் தாவணியாகத் தன் உடம்பில் சுற்றிக் கொண்டிருந்தாள். மொட்டுப் பருவத்திலிருந்து கன்னிப் பருவத்துக்குத் தாவ முயலும் துடிதுடிப்பு அவளுடைய ஆடையலங்காரக் கவனங்களில் பரபரத்துக்கொண்டிருந்தது.

''டீச்சரக்கா! நீங்கள் டியூஷன் சொல்லிக் கொடுத்து விட்டுப் போகும் போது இந்த ரிப்பனை என் தலையில் வைத்து இரட்டைப் பின்னல் பின்னி விடுகிறீர்களா?'' என்று ராஜி ஆவலுடன் கேட்டாள்.

''எனக்கும் பின்னி விடணும், டீச்சர்!'' என்று அடுத்த பெண் வேதா கத்தினாள்.

''முதல்லே சமத்தாகப் படியுங்கள். அப்புறம் உங்களுக்குத் தலை பின்னி, தலை நிறைய மல்லிகைப் பூவும் வாங்கி வைத்து விட்டுப் போகிறேன்!'' என்று உமா அப்படியே அவ்விரு பெண்களையும் தன் இரு கைகளாலும், கட்டியணைத்துக் கொண்டு, பீதாம்பரத்தின் வீட்டினுள் போனாள்.

குழந்தைகளுக்கு அவள் டியூஷன் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்த போது அவளுடைய கவனம் ஜன்னல் வழியாக அடிக்கடி தெருப் பக்கம் பாய்ந்தது. ஏனெனில், ஜன்னலின் எதிரே தெருவில் உள்ள வெற்றிலை பாக்குக் கடையில் பிச்சுமணி ஒரு சோடா வாங்கிக் குடித்ததையும், தன் பார்வைபட்டதும் அவன் தலைமறைந்து விட்டதையும் பற்றி உமா தீவிரமாகச் சிந்தித்துக் கொண்டிருந்தாள். தன்னைப் பார்ப்பதற்காகத்தான் பிச்சுமணி அவ்வளவு தூரம் வந்து எதிரேயுள்ள கடையில் சோடா வாங்கிக் குடித்தானோ என்று நினைத்த போது அவளுக்கு முக




# ஹமாம்-என் மனதுக்கிசைந்த ஒரே சோப்.




அதிகப்படி புதுமலர்ச்சி அளிப்பது - ஹமாம் - குடும்பத்திற்கான சோப்.

டாடா தயாரிப்பு

மெல்லாம் குப்பென்று வியர்த்தது. இளமை பொங்கும் அவள் உடலெங்கும் இனம் புரியாத ஒரு நடுக்கமும், ஜுரம் போன்ற ஒரு வித அலை வேகமும் பரவியது.

உமா மிகவும் சிரமப்பட்டுத் தன் மனத்தை அடக்கிக் கொண்டு, குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பதில் தன் முழு கவனத்தையும் பதிப்பிக்க முயன்றாள்.

அந்தச் சமயம் தெருக் கதவை யாரோ தள்ளித் திறந்து கொண்டு, உமா பாடம் சொல்லிக் கொடுக்கும் அறையை நோக்கி டக்டக் என்று நடந்து வரும் பூட்ஸ் காலடி ஓசைகள் கேட்டன.

உமாவின் நெஞ்சு திக்திக் என்று அடித்துக் கொண்டது.

அவள் புடவைத் தலைப்பை இழுத்துப் போர்த்திக் கொண்டு குழப்பத்துடன் உட்கார்ந்திருந்தாள். இத்தனை நாட்களாக அவளிடம் உறைந்திருந்தஅமைதி நிதானம், மனோ திடம் அத்தனையும் இந்தக் கணம் எங்கே போயின என்றே அவளுக்குப் புரிய வில்லை. தெளிவான நீரோடையில் ஒரு சிறு கல்லைப் போட்டதைப் போல் அலைகளின் சுழிப்புக்கள் பரவின.

''மிஸ். உமா! நான் உள்ளே வரலாமா?'' என்று கேட்டுக் கொண்டே ஓர் ஆண் குரல், அவளுடைய அனுமதியைப் பெறுவது கூட அவசியம் இல்லை என்பதைப் போல்,அறைக்குள் நுழைந்து விட்டது.

உமா திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்தாள்.

''மிஸ். உமா! பூஜை வேளையில் நான் கரடியாக நுழைந்து உனக்குக் கொஞ்சம் இடையூறு கொடுக்கிறேன்!'' என்று சொல்லிக் கொண்டே விஷமச் சிரிப்புடன் ஒரு நவநாகரிக வாலிபர் அவள் எதிரே வந்து நின்றார்.

அதற்குள் குழந்தைகள், ''சித்தப்பா! சித்தப்பா!'' என்று கூவிக் கொண்டே ஓடி அவரைச் சூழ்ந்து கொண்டு, ''இவர்தான் எங்கள் சிங்கப்பூர் சித்தப்பா!'' என்று உமாவுக்கு அறிமுகப்படுத்தின.

அவரைப் பற்றி உமா ஓரளவு கேள்விப்பட்டிருந்தாள். அவர் பெயர் ஜகந்நாதன். டாக்டர் தொழிலுக்குப் படித்து விட்டு உலகச் சுற்றுப் பிரயாணம் செய்த மேதை! தம் அநுபவங்களையும், புதுமைக் கருத்துக்களையும், புரட்சிகரமான சிந்தனைகளையும் வைத்துக் கொண்டு அவர் கட்டுரைகளும் நாவல்களும் பல எழுதியிருக்கிறார்.

அவருடைய கருத்துக்கள் நாடெங்கும் பெரும் பரபரப்பை ஊட்டின என்றாலும், பல பத்திரிகை விமரிசனங்களின் தாக்குதலுக்கும், பெரும் மூதறிஞர்களின் கண்டனங்களுக்கும் கூட ஆளாகி யிருந்தன. ஆனால் இகழ்ச்சியோ புகழ்ச்சியோ எதைப் பற்றியும் அவர் கவலைப்பட வில்லை. எதிர்மாறான கருத்துக்களை எப்போதும் சொல்லிப் பிறரைத் திகைக்க வைப்பதே தமது வெற்றியின் ரகசியம் என்ற சித்நாந்தத்தில் அவர் தழைத்துக் கொண்டிருந்தார்!

அவருக்கு இருபத்தைந்து அல்லது இருபத்தாறு வயதுதான் இருக்கும். ஆனால் படிப்பாராய்ச்சிகளினாலும், அனுபவ சிந்தனைகளினாலும் அவருடைய நெற்றியில் சுருக்கங்கள் விழுந்து அவருடைய முகம் சற்று அதிகமான முதிர்ச்சியைக் காட்டி அதே சமயம் அலாதியான ஒரு தேஜஸையும் பொழிந்து கொண்டிருந்தது. சிரிப்பு சதா அவருடைய உதடுகளில் பொங்கி, விழிகளில் மின்னி, முகமெங்கும் வட்டமிட்டுக் கொண்டிருக்கும். ஆனால் அந்தச் சிரிப்பின் அடியில் தோய்ந்திருக்கும் விஷமத்தனமும் பேச்சில் உள்ள குறும்புத்தனமும் சில சமயங்களில் கவர்ச்சியையும் வேறு சில சமயங்களில் கலவரத்தையும்கூட உண்டாக்கி விடும்.

அவரை அதற்கு முன்னால் எங்கோ பார்த்திருப்பது போல் இருக்கிறதே என்று உமா யோசித்தாள்.

''ஆமாம், உமா! அன்றொரு நாள் உன் வீட்டுக்கு எதிரே தெருவில் ஒரு நாய்ச் சண்டை நடந்ததே, அது உனக்கு நன்றாக ஞாபகம் இருக்கும்! அன்று என் புல்டாக் நாய்தான் உன் பிச்சுமணியின் தெரு நாயோடு சண்டை பிடித்தது. அந்தச் சண்டையை விலக்குவதற்காக நீ அதிபுத்திசாலித்தனமாக ஒரு குடத்து நீரைக் கொண்டு வந்து கொட்டினாய். அந்த அருவியில் நாய்களோடு சேர்ந்து உன் பிச்சுமணியும் தீர்த்தமாடிவிட்டுப் போனான்!'' என்று விளக்கம் கொடுத்த ஜகந்நாதன், ''அன்று உன்னிடம் என் 'விசிட்டிங் கார்டு' ஒன்றைக் கொடுத்து 'எப்போதாவது என் உதவி தேவைப்பட்டால் என்னிடம் வா!' என்று கூறிவிட்டுப் போனேன். ஆனால் அந்த விசிட்டிங் கார்டை நீ திருப்பிக்கூடப் பார்க்க வில்லை, இல்லையா?'' என்று கேட்டார்.

''ஆமாம்!'' என்று அவரை வியப்புடன் ஏறிட்டு நோக்கிய உமா, ''அதற்கு அவசியம் ஏற்பட வில்லை!'' என்றாள் தயங்கியபடி.

''இல்லை! அவசியம் ஏற்பட்டாலும் கூட அதை நீ எடுத்துப் பார்க்கவே



அப்பொழுது பம்பாயில் வகுப்புக் கலவரம் நடந்து கொண்டிருந்தது. காந்தி மகான் 'சமாதான லாரிகள்' ஏற்பாடு செய்து அவற்றில் பல வகுப்பினரையும் ஏற்றி வைத்துக் கொண்டு நகர் முழுதும் அழைத்துச் சென்றார். வில்ஸன் கல்லூரியிலிருந்து சிலரையும் அனுப்பி வைக்கும்படி காந்திஜி கேட்டுக் கொண்டார். லாரியில் எல்லோரும் ஏறிக்கொண்டு, ''இந்து, முஸ்லிம், கிறிஸ்துவர், பார்ஸி ஒற்றுமைக்கு ஜே!'' என்று கூவியபடியே சென்றனர். மாணவர்களின் சக்தியில் காந்திஜிக்கு இருந்த நம்பிக்கை நல்ல பலன் அளித்தது.

விரும்ப மாட்டாய். அது எனக்கு அப்போதே தெரியும்!'' என்று கூறிய ஜகந்நாதன், ''அன்று நான் ஒரு காமெடியனைப் போல் வந்தேன். என்னை ஒரு வில்லன் என்றுகூட நீ நினைத்திருப்பாய்!'' என்றார் சிரித்துக் கொண்டே.

அவருடைய வெளிப்படையான பேச்சையும், மதியூகத்தையும், ஹாஸ்யப் பொழிவையும் நினைத்து உமா முகமெல்லாம் மலரக் கலகலவென்று சிரித்தாள்.

ஆனால் அடுத்தகணமே ஜகந்நாதனின் அர்த்தபுஷ்டியான ஆழ்ந்த பார்வையைத் தாங்க முடியாமல் உமா தலையைத் தாழ்த்திக் கொண்டாள்.

பிறகு அவள் மெல்ல, ''நீங்கள் ஒரு டாக்டர்! அதிலும் நூலாசிரியர்! நீங்கள் ஒரு போதும் வில்லனாக முடியாது!'' என்றாள்.

''அப்படி நினைக்காதே, உமா! அளவு மீறி அறிவு பெருத்த எந்தப் புத்திசாலியையும் நீ நம்ப முடியாது! அவன் நல்லதற்கோ கெட்டதற்கோ எந்தச் சந்தர்ப்பத்திலும் வில்லனாக மாறக் கூடியவன்தான்!'' என்று கூறிய ஜகந்நாதன், ''நம் மாபெரும் இதிகாச காவியங்களில் எனக்கு மிகவும் பிடித்தமான பாத்திரங்கள் இரண்டுதான்! மகா பாரதத்தில் சகுனி! ராமாயணத்தில் கூனி!'' என்றார்.

''என்ன, சகுனியும் கூனியுமா?''

''ஆமாம்! அவர்களைப் போல் சூழ்ச்சியை வைத்து விளையாடி அபூர்வமான போராட்டங்களை மூளக்கவைத்தவர்கள் வேறு யாரும் இல்லை! ஆண்களில் அதி அறிவாளியான சகுனியோ அரசியலில் புகுந்து தன் குயுக்தியின் அபார சக்தியினால் எத்தனையோ விதமான அதிவீர சூரர்களையும், அரும் பெரும் ஞானிகளையும்கூட மோத விட்டு வேடிக்கைப் பார்த்தான். தருமமே உருவான தரும புத்திரனையும் சூதாட்டத்துக்கு இழுத்து, பஞ்ச பத்தினிகளில் ஒருத்தியான பாஞ்சாலியையே பணயப் பொருளாக வைக்கும்படி தூண்டி, சபை நடுவே சகலரையும் தலை குனியச் செய்து சிரித்தான். அதி மாயாவியான ஆண்டவனுக்குக் கூட ஆழக் குழி தோண்டி அளவிலாக் குதூகலமடைந்து, குருடன்கூட விசுவரூப தரிசனம் பெறச் செய்தான்! பெண்களில் அதி அறிவாளியான கூனியோ, தன் குயுக்தியினால் தாயுள்ளத்தைக் கூடத் திரித்துத் தந்தை உள்ளத்தைத் தர்மசங்கடத்தில் ஆழ்த்தி, சகோதரர்களைச் சிதறடித்து, அரசியல் தலைமையையே அதிர வைத்தாள்! இருதயம் இல்லாமல் வெறும் அறிவை மட்டும் வளர்த்துக் கொண்டிருப்பவர்கள் அப்படிப்பட்ட காரியங்களைச் செய்வதில்தான் சுவாரசியம் காண்பார்கள். அப்போது அவர்கள் உலகத்தாரின் கண்களுக்கு வில்லன்களாகத் தோன்றுவார்கள்.''

''நீங்கள் வில்லன்களைப் புகழ்வது அதிசயமாக இருக்கிறதே!'' என்றாள் உமா வியப்போடு.

''ஆமாம்! அறிவைப் பெரிதாக மதிக்கிறவர்கள் எவரும் வில்லன்களைத் தான் போற்ற வேண்டும்! ஏனென்றால், புளுகனுக்கு ஞாபக சக்தியும், முரடனுக்குப் பலமும், அயோக்கியனுக்குத் துணிச்சலும், பெண் பித்தனுக்கு மோகமும் அதிகம் இருப்பது போல வில்லன்களுக்குத்தான் சுய மூளை அதிகம் இருக்கும்!'' என்று கூறிச் சிரித்தார் ஜகந்நாதன்.

''ஆனால் ஒரு நாவலாசிரியர் வில்லனாக மாறினாலும் கடைசியில் அவர் தியாகம்தான் செய்வார்!'' என்று கூறி உமாவும் சிரித்தாள்.

''ஒரு நாவலாசிரியர் வில்லனாக வருவது கதைக்குப் புதுமையாக இருக்கும்!'' என்று சிரித்த ஜகந்நாதன், ''ஆனால் தியாகம் செய்வது என்பது தற்கொலைக் கொப்பான கோழைத்தனம்!'' என்று ஒரு புது மொழியைத் தூக்கிப் போட்டார்.

''என்ன? தியாகம் என்பது தற்கொலையா? கோழைத்தனமா?''

''ஆமாம்! அது வீரர்களின் கோழைத்தனம்! கோழைகளின் முரட்டுத்தனம்! அறிவாளிகளின் முட்டாள் தனம்!'' என்று ஜகந்நாதன் அடுக்கினார்.

''நீங்கள் நாவலாசிரியர் அல்லவா? அடுக்கு மல்லிகை போல் அழகாகப் பேசுகிறீர்கள்!'' என்று புன்முறுவல் பூத்த உமா, ''அது இருக்கட்டும்! உங்கள் புல்டாக் நாய் எங்கே?'' என்று கேட்டாள்.

''ஒரு நாய்ப் பிரியரை சிநேகம் பிடிப்பதற்காக அதை விலைக்கு வாங்கி 'என் அருமை வளர்ப்புப் பிள்ளை' என்று கூறி அன்றைக்கே அவருக்குத் தானம் கொடுத்து விட்டேன்!'' என்றார் ஜகந்நாதன். உமா கலகலவென்று சிரித்தாள். அவ்விருவரின் பேச்சுக்களைப் புரிந்து கொள்ள முடியாமல் குழந்தைகள் திரு திருவென விழித்தபடி நின்றன.

''சரி, உமா! நீ டியூஷன் சொல்லிக் கொடுக்கும் கடமையை முடி! நான் போய் அண்ணியைப் பார்த்து விட்டு வரும் கடமையை முடிக்கிறேன்'' என்று கூறி விட்டு மாடியறைக்குச் சென்ற ஜகந்நாதன், சிறிது நேரத்தில் திரும்பி வந்து, ''அண்ணிக்கு 'ஹார்ட் வீக்' (இருதய பலவீனம்) இருக்கிறது. இருதயத்தை மதிப்பவர்களுக்கே எப்போதும் இந்த 'டிரபிள்' (தொந்தரவு)தான்!'' என்று சொல்லிச் சிரித்தார்.

''பாவம், அந்த அம்மா!'' என்று துயரத்தோடு பெருமூச்சு விட்ட உமா, ''அந்த அம்மாவை டாக்டர்கள் வந்து பார்த்து விட்டுப் போகிறார்கள்: இருந்தாலும் உடம்பு தேறவில்லை! நீங்களாவது ஒரு புது 'ட்ரீட்' மெண்ட்ஆரம்பியுங்கள்!'' என்று அளவு கடந்த பரிவு பாசத்தோடு கேட்டுக் கொண்டாள்.

''பார்க்கலாம். மருந்து மாத்திரைகளைவிட மனோ இடம்தான் அதிகப் பலனை அளிக்கக் கூடியது!'' என்று கூறிய ஜகந்நாதன், ஒரு புறம் சென்று ஒரு புத்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்து அதைப் படிப்பது போல் பாவனை செய்தார். ஆனால் அவருடைய பார்வை யெல்லாம் குழந்தைகளுக்கு உமா டியூஷன் சொல்லிக் கொடுக்கும் அறைப் பக்கமே வட்டமிட்டுக் கொண்டிருந்தது.

உமா ஒன்றரை மணி நேரம் வரை குழந்தைகளுக்குப் பள்ளிப் பாடங்களைப் புரியும்படி சொல்லிக் கொடுப்பது, வீட்டுக் கணக்குகளைத் திருத்திக் கொடுப்பது, நீதிக் கதைகள் சொல்லுவது முதலான 'டியூஷன்' கடமைகளை முடித்துக் கொண்டு, பெண் குழந்தைக்குத் தலை வாரிச் சிங்கப்பூர் ரிப்பன் வைத்துப் பின்னினாள். தெருக் கோடியில் உள்ள பூக்காரியிடமிருந்து மல்லிகைப்பூ வாங்கி வரும்படி வீட்டு வேலைக்காரி மூலம் அவள் தன் காசைக் கொடுத்து



''என்ன எசமான், இனும் கொஞ்சமாக் கொடுக்கிறீங்க! கலியாணம் ஆவதற்கு முன் னாலே;நீங்க எட்டணா கொடுப்பீங்களே!''

''அப்ப என்னிடம் எட்டணா இருந்தது!''

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

அனுப்பி, பூ வந்ததும் பெண் குழந்தைகளின் தலை நிறையப் பூச் சூடினாள். எல்லாக் குழந்தைகளுக்கும் முகத்துக்குப் பௌடர் பூசி, கன்னக் கதுப்பில் திருஷ்டிப் பொட்டும் வைத்து அழகு பார்த்தாள். பிறகு அக் குழந்தைகளை யெல்லாம் அவள் அழைத்துக் கொண்டு, மாடிக்குச் சென்று அங்கு ஒரு தனியறையில் நோயுடன் படுத்திருக்கும் திரிபுர சுந்தரி அம்மாளின் முன் அழகுற நிறுத்தினாள். ''அம்மா! அம்மா!'' என்று அக்குழந்தைகள் எல்லாம் அந்த அம்மாளைச் சூழ்ந்து கொண்டன.

கட்டிலில் படுத்திருந்த திரிபுர சுந்தரியம்மாள் தன் குழந்தைகளையும் உமாவையும் மாறி மாறிப் பார்த்தாள். அவளது தாயுள்ளம் கனிந்து நன்றிப் பெருக்கோடு உமாவைப் பார்த்தபோது அவள் கண்களில் நீர் தளும்பியது.

''உமா! என் குழந்தைகளுக்குத் தான் என் கையாலே சீவி, சிங்காரித்துப் பார்க்கக் கொடுத்து வைக்க வில்லை. நீ அந்தக் குறை இல்லாதபடி, என் குழந்தைகளைச் சந்தோஷமாக வைத்து வருகிறாய். உன்னை எப்படிச் சொல்வதென்றே எனக்குப் புரியவில்லை. நீயும் எனக்கு ஒரு பெண் மாதிரி!'' என்றாள் திரிபுரசுந்தரியம்மாள், குரல் தழுதழுக்க.

அந்தத் தாயுள்ளத்தின் வார்த்தைகளைக் கேட்ட போது உமாவுக்குத் தன் தாயின் நினைவு வந்து கண்ணிமைகளை அழுத்தியது. அதே சமயம் பிச்சுமணிக்கும் தாயில்லை என்ற நினைவு அவளையறியாமலே மின்னலைப்போல் அவள் இதயத்தில் பளிச்சிடவே அவளுக்கு உடம்பெல்லாம் சிலிர்த்தது. (தொடரும்)



இருபத்திமூன்றுவது ஜானுடைய இறுதிக் காலம் நெருங்கிக் கொண்டிருந்தது. ''இறுதியை நோக்கி இனிமையாகச் சென்று கொண்டிருக்கிறேன் நான்'' என்று அவர் கூறிய போதிலும் உலகெங்கிலும் விரவிக் கிடந்த கத்தோலிக்கர்கள் மட்டுமல்ல, கிறிஸ்தவர்கள் மட்டுமல்ல, மற்ற மதங்களையும் இனங்களையும் சேர்ந்த பல ஆயிரக்கணக்கானோர் கண்களில் நீர் மல்கக் கரம் கூப்பித் தங்கள் ஆண்டவனை வேண்டினார்கள், ''ஐயனே! எங்களால் இந்த வேதனையைத் தாங்க முடியவில்லை. எங்களைக் காப்பாற்றி அருள்வாய்'' என்று. மரணப் பாதையை இனிமையானதாகக்கருதுகிற அளவுக்கு அத்தனை மன உறுதியும் ஆன்மீக பலமும் பெற்றவர்கள் அல்ல அந்தப் பாமர மக்கள். இவ்வருஷம் இளவேனில் காலத்தின் தொடக்கத்தில், ''எல்லா மனிதர்களுக்கும் நேர்கின்றது. உங்களுடன் இன்று பேசிக் கொண்டிருக்



கும் உங்கள் போப்புக்கும் சீக்கிரமே நேரும்'' என்று அவர் ஒரு பொதுக் கூட்டத்தில் பேசியதைச் சரியாக மனத்தில் இருத்திக் கொள்ளாதவர்களெல்லாம் இப்போது திடுக்கிட்டு நிமிர்ந்து உட்கார்ந்து அந்தச் சொற்களை நினைவு கூர்ந்தார்கள். குடல் புண்ணினால் அவர் அவதிப்படுகிறார் என்றும் வாயினால் உணவருந்த முடியாத நிலையில் இரத்த நாளங்கள் மூலமாய் குளுகோஸ் போன்ற திரவ உணவைச் செலுத்தி வருகிறார்கள் வைத்தியர்கள் என்றும் அறிந்தபோது பாரெங்கிலும் இருந்த பலர் பரிதவித்தார்கள். 'இறைவா! அவருடைய வேதனையைக் குறைக்கக் கூடாதா? என்று இறைஞ்சினார்கள். ஆனால் அவரோ மானிடர் துன்பம் நீங்கச் சிலுவையில் அறைபட்ட ஏசுவின் திருநாமத்தை உச்சரித்த படியே, உலக சமாதானத்துக்காகவும் தாம் கூட்டி யிருந்த வாடிகேன் கௌன்சிலுக்காகவும் தமது துன்பத்தை அர்ப்பணித்துக் கொண்டிருந்தார்.

முடிவும் சம்பவித்தது.

ஆயிரக்கணக்கானோருக்கு வாழ்வளித்த ஓர் உயிர் இவ்வுலகை விட்டுப் பிரிந்து விட்டது. ஹிட்லருடைய வெறுப்புணர்ச்சியும் கொலை வெறியும் பின் துரத்தி வர, இஸ்தான்புல்லில் அவரிடம் தஞ்சம் புகுந்த யூதர்கள் எத்தனை ஆயிரம் பேர்? அதற்குக் கணக்குத்தான் ஏது? அவ்வளவு மக்களுக்கும் உணவும், உடையும் கொடுத்துச் செலவுக்குக் கொஞ்சம் பணமும் அளித்துக் கப்பலேற்றி ஜெருஸலத்துக்கு அனுப்பி வைக்க இரவும் பகலும் இடை விடாது உழைத்த உத்தமர் இன்று இப்புவியில் உலவுகின்ற பாக்கியத்தை உலகம் பெற வில்லை என்ற போது யூதர்கள் அழத்தான் செய்தார்கள், துன்பம் தாங்க முடியாமல்.

சரித்திர காலந்தொட்டுக் கல்வி கேள்விகளில் சிறந்து நாகரிகத்தில் மிக உயர்ந்து வாழ்வாங்கு வாழ்ந்த கிரேக்க மக்கள், இரண்டாம் உலகப் போரின்போது தங்கள் நாடும் ஹிட்லருடைய துருப்பினரால் அடிமைப்படுத்தப்பட்ட அதே நேரத்தில் யுத்த அரக்கனுக்கு உதவி செய்கின்ற மாதிரியாகப் பஞ்சம், பிணி, மரணம் ஆகிய மூன்று அரக்கர்களும் தங்கள் மீது படையெடுத்து வருவதைக் கண்டு பரிதவித்தார்கள்.

அப்போது ஜெர்மானிய அதிகாரிகளின் அநுமதி பெற்று. அமெரிக்காவிலிருந்தும் ஆஸ்திரேலியாவிலிருந்தும் கப்பல் கப்பலாக உணவு வரவழைத்து அத்தனையும் ஜெர்மானிய சிப்பாய்களின் கையில் சிக்கி விடாமல் கிரேக்க மக்களின் கையிலே கிடைக்கச் செய்த அரிய சாதனை ஆர்ச்பிஷப் ரோன்காலியினுடையது. பின்னால் போப்பாண்டவராக அவர் மாறிய



தும் அவரிடத்தில் மதிப்பும் மரி யாதையும் முன்னைக் காட்டிலும் பன்மடங்காகப் பெருகி யிருக்க லாம். ஆனால் இது போன்று மக்களுக்கு ஏற்பட்ட பெரிய சோதனைக் காலங்களி லெல்லாம்



# பாரெல்லாம் தொழுதேத்தும் போப்பாண்டவர்.



அவர்கள் துயர் துடைக்க அருகில் இருந்தத னாலே அவர்களுடைய இதய அந்தரங்கத்தில் நிரந்தர இடம் பிடித்துக் கொண்டவர்; பேரன்புக்கும் பாத்திரமானவர் இருபத்தி மூன்றாவது ஜான்.

இத்தகைய ஓர் உத்தமருக்கு ஆண்டவன் வேறு பல திட்டங்கள் போட்டு வைத்திருந் தான் போலும்! வாடிகேன் சிம்மாசனத்தைக் காட்டிலும் உயர்ந்த வேறு பல பதவிகளைக் கொடுக்க விரும்பித் தன்பால் அழைத்துக் கொண்டான் போலும் !

காலஞ்சென்ற போப்பாண்டவருடைய இறுதிச் சடங்குகள் முடிந்தன.

அடுத்த போப்பாண்டவரைத் தேர்ந் தெடுப்பதற்காக உலகெங்கிலுமிருந்து எண் பது கார்டினல்கள் வாடிகேனுக்கு வந்து சேர்ந்தார்கள்.

மேலை நாட்டுச் சரித்திரத்திலேயே ஜனநா யகக் கோட்பாடுகளை உள்ளடக்கிய மிகப் பழைமையான ஸ்தாபனம் செயல்புரியத் தொடங்கி விட்டது.

போப்பாண்டவருடைய இந்தத் தேர்தல் பரம ரகசியமாக நடைபெற வேண்டும் என் பது சம்பிரதாயம். கார்டினல்கள் அனை வரும் 'கான்கிளே'வுக்குள் புகுந்ததும் எல்லாக் கதவுகளையும் ஜன்னல்களையும் சாத்தித் தாளிட்டு விடுவார்கள். கார் டினல்கள் புதிய போப்பாண்டவரைத் தேர்ந்தெடுத்து முடிக்கும் வரை வெளி யுலகுடன் எந்த விதமான தொடர்பும் கொள்ள முடியாது! உள்ளுக்குள்ளே அடைந்து கிடப்பது சிரமமாகத்தான் இருக்கும். இரவா பகலா என்றுகூடத் தெரிந்து கொள்ள முடியாத அளவுக்கு வராந்தாக்களை யெல்லாம் சுவரெழுப்பி அடைத்து விடுவார்கள்! டெலிபோன் இணைப்புக்களை யெல்லாம் துண்டித்து விடுவார்கள். ஒலிபெருக்கி ரேடியோ எதுவுமே இருக்கக் கூடாது. சுவரில் உள்ள சிறிய துவாரத்தின் வழியே ஒரு தட்டில் உணவு மட்டும் வந்து சேரும். அதுவும் மூன்றும் நாளுக்குப் பிறகு குறைந்து கொண்டே வரும்; எட்டு நாட்களானால் பிறகு வெறும் ரொட்டியும் குடி நீரும் மட் டுமே அவர்களுக்குக் கிடைக்கும். பிரதான வாயிலைப் பூட்டி விட்டு வெளிப்புறம் ஒருவரும் உள்புறம் ஒருவருமாக இரண்டு சாவிகளுடன் காவலர்கள் போல் நிற்பார்கள்.

இவ்வளவு கெடுபிடிகளுக்குக் காரணம் இந்தக் கார்டினல்கள் ஆலோசனைகளிலேயே மூழ்கி வருஷக் கணக்கில் போப்பாண்டவரைத் தேர்ந்தெடுக்காமலே இருந்து விடுவார்களோ என்ற ஐயம்தான். அப்படி நேர்ந்தும் இருக் கிறது. இன்றைக்கு எழுநூறு வருஷங்களுக்கு முன்பு ஒரு முறை.

அதன் பின்னர்தான் முன்னர் குறிப்பிட்டது போன்ற பலமான கட்டுக் காவல்கள், உணவுக் கட்டுப்பாடுகள் எல்லாம் ஏற்பட்டன.

---

**புதிய போப்பாண்டவர் ஆருவது பாலைத் தரி சிக்க வாடிகேன், செயிண்ட் பீட்டர் சதுக் கத்தில் காத்திருக்கும் ஆயிரக்கணக்கான மக்களையும் முடிசூட்டு விழாக் காட்சிகள் சிலவற்றையும் இப்பக்கங்களில் காணலாம்.**

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில்தான் இன்றைக்கு இத்தாலி என்று நாம் அழைக்கும் பிரதேசம் ஒரு தேசம் என்று கூறக் கூடிய அளவுக்கு ஒன்றுபட்டது. அதற்கு முன்பு — ரோம சாம்ராஜ்யம் சரிந்துபட்ட காலம் முதலாக — முழங்காலளவுக்கு உயர்ந்திருக்கும் பூட்ஸ் போன்ற அமைப்புகொண்ட இத்தாலிய தீபகற்பம் பல துண்டு நாடுகளாகப் பிளவுபட்டுக் கிடந்தது. இவற்றில் பல பிரதேசங்கள் போப்பாண்டவரையே தங்கள் அரசராகவும் மதகுருவாகவும் ஏற்றுக்கொண்டிருந்தன. 1860ல்தான் இத்தாலிய மக்கள் ஒன்றுபட்டு ஒரு நாட்டவராய் வாழ வேண்டும் என்ற எண்ணத்துடன் விக்டர் எமானுவேலுக்குத் தங்கள் ராஜ விசுவாசத்தை ஒருமுகமாகத் தெரிவித்துக் கொண்டார்கள். அதன் பிறகு ஐக்கிய இத்தாலியை உருவாக்கும் முயற்சியில் போப்பாண்டவருடைய ஆதிக்கத்துக்கு முடிவு ஏற்பட்டது. அவருக்குக் கீழிருந்த பல பிரதேசங்கள் இத்தாலியுடன் இணைந்தன. வாடிகன் அரண்மனையும் அதைச் சுற்றிலும் இருந்த இன்னும் இரண்டொரு இடங்களும்தான் போப்புக்கு மிச்சம்.

அன்றைய போப்பாண்டவர் ஒன்பதாவது பயஸ் 'வாடிகேனின் கைதி' என்று தம்மைப் பற்றித் தாமே குறிப்பிட்டுக் கொண்டாலும், ஒன்பதாவது பயஸ், அவருக்குப் பின் வந்த பதின்மூன்றாவது லியோ ஆகியோர் தங்கள் அமைதி, அறிவாற்றல் காரணமாக மக்களுடைய பெரு மதிப்புக்குப் பாத்திரமானார்கள். வாடிகேனும் போப்பாண்டவருடைய சிம்மாதனமும் இழந்த கொஞ்ச நஞ்சம் கௌரவத்தையும் திரும்பப் பெற்று உயர்ந்தது.

இன்று நூற்றி எட்டு ஏக்கர் நிலப் பரப்பே உள்ள ராஜ்யத்தின் அரசராகவும் உலகமெங்கிலுமுள்ள நல்ல மக்களின் இதயங்களிலெல்லாம் ஆதிக்கம் செலுத்தப் போகிறவராகவும் இருபத்தி மூன்றாவது ஜானுக்கு அடுத்தபடியாகப் பட்டத்துக்குரியவராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பவர் யார்?

மூன்றில் இரண்டு பங்கு ஓட்டுக்களும் மேலும் ஒரு ஓட்டும் பெற்றவர்தான் போப்பாண்டவராக வர முடியும். கோயிலில் ஆண்டவனுடைய சந்நிதானத்துக்கு எதிரே கார்டினல்கள் அனைவரும் சுவரோரமாகப் போடப்பட்டுள்ள நாற்காலிகளில் அமர்ந்து கொள்வார்கள். ஒவ்வொரு நாற்காலிக்கு மேலும் ஒரு பட்டு விதானம் அனைவரும் சமம் என்பதை உணர்த்துவதுபோல் ஒரே உயரத்தில் அமைந்திருக்கும். ஒவ்வொருவரும் தாங்கள் மனப்பூர்வமாக ஆண்டவன் அருளுடன் தங்களுள் யார் போப்பாண்டவராக வேண்டும் என்று எண்ணுவார்களோ, அவர் பெயரைச் சீட்டில் எழுதிவிடுவார்கள். பிறகு சீட்டுக்கள் எண்ணப்படும். யாருக்கும் குறிப்பிட்ட அளவுக்கு வாக்குகள் பதிவாகவில்லையானால் தேர்தல் மீண்டும் நடக்கும். இரண்டு தேர்தல்களின் பிறகும் நல்ல முடிவு ஏற்படவில்லையெனில் வாக்குப் பதிவான சீட்டுக்களைக் கொஞ்சம் ஈரமான வைக்கோலுடன் கலந்து அடுப்பில் போடுவார்கள். புகைபோக்கி வழியே கருப்புப் புகை வெளிவரும். அதைப் பார்த்து வெளியே காத்திருக்கும் மக்கள் தேர்தல் முடியவில்லை என்ற விஷயத்தைப் புரிந்து கொள்வார்கள்.

அடுத்தடுத்து நடக்கும் தேர்தல்களில் யாரேனும் ஒருவருக்கு வோட்டுக்கள் கூடுதலாகிக் கொண்டே போய் அவரைப் போப்பாண்டவராக்கி விட்டால் அப்போது வைக்கோல் கலவாத வெறும் ஓட்டுக் காகிதங்களை மட்டும் அடுப்பில் போடுவார்கள். அப்போது புகை போக்கி வழியே வெள்ளைப் புகை வெளிவந்து மக்களுக்கு நல்ல செய்தியை அறிவிக்கும். அதே நேரத்தில் கார்டினல்களின் ஆசனங்களுக்கு மேலாக உள்ள விதானங்களைத் தாழ்த்திவிடுவார்கள். புதிய போப்பாண்டவரின் மேல் விதானம் மட்டும் உயரே இருந்து அவருக்குரிய மதிப்பை அறிவிக்கும். போப்பாண்டவர் பதவியைத் தாம் ஏற்றுக் கொள்வதாய் அவர் அறிவித்துத் தமக்கென புதிய பெயர் ஒன்றினையும் சூட்டிக் கொள்வார்.

இந்த 1963ம் வருஷத்தில் புதிய போப்பைத் தேர்ந்தெடுக்க ஆறு முறைகளே தேர்தல் நடைபெற்றன. ஆனால் அதற்கு முன்பே ரோமிலும் சரி, நகருக்கு வெளியிலும் சரி, அடுத்த போப் யார் என்பதை மக்கள் ஏற்கெனவே முடிவு செய்துவிட்டார்கள். வெண் புகை, புகைப் போக்கி வழியே வெளிப்பட்ட ஒரு மணி நேரத்துக்குள்ளாக செயிண்ட் பீட்டர் சதுக்கத்தில் 100,000 மக்கள் கூடி விட்டார்கள்.

போப் தேர்ந்தெடுக்கப்பட்ட செய்தியை மக்களுக்குக் கூற அந்தப் புனித அலுவலகத்தின் காரியதரிசி வராந்தாவில் தோன்றினார். அவர் புதிய போப்பின் பெயரைக் கூறி முடிப்பதற்கு முன்னால் மக்களே, "மான்டினி! மான்டினி!" என்று வாயார, மனதார அழைத்து மகிழ்ந்தார்கள். பல வருஷங்களாகவே அவரை இளவரசர் என்று செல்லப் பெயரிட்டு அழைத்து வந்தவர்கள் அநேகம் பேர்களாயிற்றே! அவ்வாறு தங்கள் பெரு மதிப்புக்குப் பாத்திரரான மான்டினி ஆறாவது பால் என்ற பெயரை ஏற்றுக்கொண்டுள்ளார் என்று காரியதரிசி கூறக் கேட்டதும் மக்கள் கரகோஷம் செய்தார்கள். அடுத்தாற்போல் போப்பாண்டவரே மக்களுக்குத் தரிசனம் கொடுத்ததும் அந்த ஜன சமுத்திரத்தின் வாழ்த்தொலிகள் விண்ணை முட்டின.

ஏழை விவசாயக் குடும்பத்தில் பிறந்து, போப்பாண்டவராக உயர்ந்தவர் ஜான். உள்ளங்காலின் தோல் தேய்ந்தால் அதனை ஆண்டவன் புதுப்பித்துவிடுவான். ஆனால் பூட்ஸ் தேய்ந்து போனால் புதுப்பிக்கப் பணமல்லவா வேண்டும்? ஆகவே பூட்ஸைப் புத்தகங்களுடன் சேர்த்துக் கையில் தூக்கிக் கொண்டு பள்ளிக்குச் சென்றான் ஏழைச் சிறுவன் ரோன்காலி. இதை நினைவில் வைத்துக் கொண்டால் ஆட்சி பீடத்தில் அமர்ந்த பின் ஜான், அங்கு பரம்பரை பரம்பரையாக நிலவி வந்த பல பழக்க வழக்கங்களைத் தகர்த்தெறிந்து விட்டது ஒரு புதிராக நமக்குத் தோன்றாது. எந்தப் போப்பும் செய்யத் துணியாத காரியங்களைச் செய்வார் ஜான். திடுமென ஒரு நாள் இவர் சிறைச்சாலைக்கு விஜயம் செய்தார். அங்கே கொலை போன்ற பயங்கரக் குற்றம் புரிந்தவர்களைத் தனியே ஒரு பகுதியில் அடைத்து வைத்திருந்தனர். பூட்டைத்திறக்கு



**செல்வி : லலிதா-செல்வன் : ராமகிருஷ்ணன்**

பிரசித்திபெற்ற திருவாரூர் - விஜயபுரம் K. T. R. வாசனாதி திரவியசாலை & K. T. R. அச்சகம் உரிமையாளர் உயர்திரு K. T. R. கோபாலகிருஷ்ண ராஜு அவர்களின் புதல்வர் நிறைநாட் செல்வர் G. ராமகிருஷ்ணன் B. A., (B. L.) க்கும் மன்னார்குடி உயர்திரு வேணுகோபால் ராஜு அவர்களின் புதல்வி நிறைநாட் செல்வி லலிதாவுக்கும் 13-9-63 அன்று விஜயபுரம் மணமகன் இல்லத்தில் திருமணம் வெகு விமரிசையாக நடைபெற்றது. மிகச் சிறந்த முறையில் நடைபெற்ற இந்த வைபவத்திற்கு நாட்டின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் வியாபாரப் பெருமக்களும், பிரமுகர்களும், அதிகாரிகளும் வந்திருந்து நல்லாசி கூறினார்கள். மாநில, மத்திய அமைச்சர்கள், பத்திரிகாசிரியர்கள், அரசியல் தலைவர்கள், கலைஞர்கள் வாழ்த்துக்கள் அனுப்பி யிருந்தனர். ஏராளமான பரிசுகள் வந்தவண்ணமிருந்தன.

மாறு உத்தரவிட்டார் ஜான். துணைக்குப் பின்னோடு யாரும் வரக்கூடாதென்று கூறிவிட்டு உள்ளே போய் ''நீங்கள் என்னிடம் வர முடியாது. அதனால் நான் உங்களிடம் வந்திருக்கிறேன்'' என்று ஆரம்பித்துக் கைதிகளுடன் சிரித்துப் பேசினார். ''இன்னும் சில நாள் இப்படியே போனால் எங்களுக்கெல்லாம் வேலையே இராது. உலகில் குற்றங்களே நடவாது'' என்று சிறைக் காவலர்கள் அலுத்துக் கொண்டனர்!

இந்த நடவடிக்கைகளில் அவரது அடக்கமும், ஆன்மீக பலமும் ஒருங்கே மிளிர்ந்தன. பீட்டருடைய சிங்காதனத்தை அலங்கரித்த இருநூற்றி அறுபத்து மூன்றாவது போப்பாகிய இருபத்தி மூன்றாம் ஜான் தமது ஆட்சி காலத்தில் எடுத்துக் கொண்ட மிகப் பெரிய முயற்சிகள் இரண்டு. முதலாவது உலக சமாதானம்; உலக யுத்தத்தின் கோர கிருத்தியங்களை அருகிலிருந்து பார்த்தவராயிற்றே அவர். அணுகுண்டு அரக்கனைப் பற்றித்தான் அறியாதவரா என்ன? ''வெற்றியோ தோல்வியோ எதுவானாலும் சரி,'' கற்பனைக்கெட்டாத அளவுக்கு உலகம் 'சர்வ நாசமாகிவிடும்'' என்று எச்சரித்தார். ஆம். அடுத்து யுத்தம் ஒன்று வந்தால் அதில் வெற்றி தோல்வி முக்கியமல்ல. உலகம் உய்யுமா என்பதே கேள்வி அல்லவா?

போப்புக்கு அளிக்கப்பட்டுள்ள பட்டப் பெயர்களுள் ஒன்று ''ஸுப்ரிம் பான்டிப்'' என்பது. பான்டிப் என்பதற்கு லத்தீன் மொழிப்படி பாலம் அமைப்பவர் என்று பொருள் கொள்ள வேண்டும். பூவுலகுக்கும் சொர்க்கத்துக்கும் பாலம் அமைப்பவராகக் கருதப்படுகிறவர் போப். போப் ஜான் கிறிஸ்துவ மதத்தில் உள்ள பல பிரிவுகளுக்கிடையிலும் பாலம் அமைப்பவராகவும் தம்மை எண்ணிக் கொண்டார். அவரது கவனத்தைக் கவர்ந்த இரண்டாவது மிகப் பெரிய காரியம் இது.

1869 இறுதியில் ஒன்பதாவது பயஸ் காலத்தில் கூடிய பேரவை போப்பாண்டவருக்கு ஆண்டவனுடைய அருள் பரிபூரணமாக இருப்பதால் அவரால் எப்போதுமே தவறு இழைக்க முடியாது என்ற தீர்மானத்துக்கு வந்தது. ஆகவே இதன் பிறகு வாடிகேனில் பேரவை கூட்டுவதில் போப்களுக்கு உற்சாகம் குறைந்து விட்டது. போப்பினால் தவறே இழைக்க முடியாதென்றால் பேரவை எதற்கு? விவாதங்கள் எதற்கு?

போப் ஜான் தாம் பதவிக்கு வந்த மூன்றாவது மாதமே எண்பத்தி ஒன்பது வருஷங்களுக்குப் பின் மீண்டும் ஒரு பேரவையை வாடிகேனில் கூட்டத் தாம் நினைத்திருப்பதாய் அறிவித்தார். இந்தப் பேரவைக்குக் கத்தோலிக்கர்கள் அல்லாத கிறிஸ்தவர்களும் பார்வையாளர்களாக வருமாறு அன்புடன் அழைக்கப்பட்டனர்.

இவ்வாறாக ஐந்தே வருஷங்கள் ஆண்டாலும் அந்தக் குறுகிய ஆட்சி காலத்தில் போப் ஜான் தூவிய விதைகள் பல. பயிரை வளர்த்து அறுவடை செய்து மக்களுடைய நல்வாழ்வுக்கு அதனை அளிக்கவேண்டிய கடமை இப்போது ஆறாவது பாலைச் சேர்ந்திருக்கிறது.



இருபத்துமூன்றாவது ஜான்

தமது பொறுப்பை ஏற்று நன்கு நிறைவேற்றி வைக்கக் கூடியவர்தான் அவர் என்பதனை உணர மான்டினியின் வாழ்க்கைப் படலத்தின் ஓர் ஏட்டினைப் புரட்டிப் படித்தால் போதும்:

பன்னிரண்டாவது பயஸ்ஸின் ஆட்சியில் அவருக்குக் கீழ் பல்வேறு துறைகளிலும் கருத்துடன் பணி புரிந்து நல்ல அனுபவம் பெற்ற மான்டினி, மிலான் நகரத்தின் ஆர்ச் பிஷப்பாக உயர்த்தப்பட்டார். அப்போது கூடவே அளிக்கப்பட்ட கார்டினல் பதவியை மட்டிலும் அப் பதவியைப் பெறத் தாம் மேலும் தகுதி பெற வேண்டும் என்ற நோக்கத்தில் பண்புடன் மறுதளித்துவிட்டுப் புறப்பட்டார். பின்னால் 1958ல்தான் போப் ஜான் அளித்த கார்டினல் பதவியை ஏற்றுக் கொண்டார். மிலானில் தீவிர கம்யூனிஸ்டுகள் வாழ்ந்த பகுதிகளிலெல்லாம் சுற்றி வந்தார் மான்டினி. 'உங்களுக்கு ஒரு புதிய மாதா கோயிலை எங்கே அமைக்கலாம், சொல்லுங்கள்' என்று யோசனை கேட்டார். கோபச் சிரிப்பும் ஏளனக் கொக்கரிப்பும் அவரை எதிர் கொண்டழைத்தன. மான்டினி சோகமான புன்னகையுடன் கரங்களை முன்னால் நீட்டியபடி முன்னேறினார். தீட்சண்யமான அவரது பார்வையில் கட்டுண்டு பரம்பரைக் கம்யூனிஸ்டுகள் கூட அவர் காலடியில் மண்டியிட்டு விழுந்து நீண்டிருந்த அவர் கரத்திலிருந்த மோதிரத்தை முத்தமிட்டனர். இப்படியாக ஆயிரக் கணக்கான கம்யூனிஸ்டுகளின் மன மாற்றத்தை அன்பெனும் ஆயுதத்தின் துணை கொண்டு சாதித்தவர் மான்டினி. மிலானில் ஆயிரம் கோயில்களுக்கு மேலுள்ள போதிலும் விரைவாக வளர்ந்து வரும் அந்நகருக்கு அவை போதாவெனக் கருதி அங்கு தாம் ஆர்ச் பிஷப்பாகத் தங்கியிருந்த காலத்தில் சராசரி வருஷத்துக்குப் பத்துக் கோயில்களாவது சுற்றுவட்டாரத்தில் புதிதாக உருவாக வழி செய்திருக்கிறார் என்றால் அவர் பெருமைக்கும் திறமைக்கும் இன்னும் என்ன கூற முடியும்?

# ஆஹா...

**என்னே ஆரோக்கியமளிக்கும் புத்துணர்ச்சி, கோலினோஸின் பாதுகாக்கும் நுரையிலே!**

சுறுசுறுப்பாக வாழ்பவர்கள் கோலினோஸைத் தேர்ந்தெடுக்கிறார்கள்...ஏனெனில், நுரைக்கும் தன்மையுள்ள கோலினோஸ் மட்டுமே பற்சிதைவு மற்றும் வாய் நாற்றத்திலிருந்து இரவும் பகலும் பாதுகாப்பளிக்கிறது. ஆகையால் கோலினோஸ் சூப்பர் ஒயிட்டை உங்களுடைய பற்பசையென்று நிச்சயப்படுத்திக்கொள்ளுங்கள்.



**தலைநிமிர்ந்த புன்சிரிப்பு – அது கோலினோஸின் புன்சிரிப்பு**

அல்லது, வீரியமுள்ள குளோரோபில்லின் களிப்பூட்டும் புத்துணர்ச்சியை நீங்கள் விரும்பினால், புதிய சேர்க்கை கோலினோஸ் குளோரோபில் வேண்டுமென்று கேளுங்கள்.




பற்சிதைவைத் தடுக்கிறது. உங்கள் மூச்சிலே மணம் கமழச் செய்கிறது. உங்கள் பற்களை வெண்மையாக்குகிறது.

Registered User: GEOFFREY MANNERS & CO. LTD.

# உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்.






"உழுது உண்டு வாழ்பவர்கள் தான் வாழ்பவர்களாம். மற்றவர்கள் எல்லாம் தொழுது உண்டு பின்செல்பவர்களாம்! இந்த உழவர்களுக்கு எதற்கு ஐயா இத்தனை பெருமை?"

இப்படிக் கேட்ட புலவருக்குப் பொய்யா மொழியாரின் இந்த வாய்மையிலே நம்பிக்கை கிடையாது. எதையும் பணம் காசைக் கொண்டு மதிப்பிடும் காலத்திலே பிறந்தவர். 'கையிலே காசு, வாயிலே தோசை!' என்னும் வழக்கு வேரூன்றத் தொடங்கிய காலத்திலே வாழ்ந்தவர். எனவே, எதையும் காசைக் கொண்டு விலை கொடுத்து வாங்கிவிட முடியும் என்ற நம்பிக்கைகொண்டவர். ஆனால் அந்தக் காசு தான் அவரிடம் குறைவாயிருந்தது. அதைப் பெற அல்லும் பகலும் பாடுபட்டார். அவருக்கு அது எட்டாக் கனியாகவே இருந்தது.

புலவர்களை மதிக்கும் சமஸ்தானம் ஒன்று இருக்கிறது என்று கேள்விப்பட்டு அங்கே போனார். 'மன்னரும் திவானும் நல்ல ரசிகர்கள் தான். வரும் புலவர்களுக்கெல்லாம் வயிறு நிறைய விருந்து அளிக்கிறார்கள். ஆனால் பணம், காசு, பொன், வெள்ளி எதுவும் பரிசாகத் தருவதில்லை' என்னும்செய்தி எட்டவே, புலவருக்குச் சப்பிட்டு விட்டது. "சோற்றைப் போட்டுப் புலவர்களை ஏமாற்றும் சமஸ்தானம் என்ன சமஸ்தானம்? புலவர்களுக்குப் பொற்கிழி அளித்துக் கௌரவித்தால் அல்லவா அதற்குப் பெருமை?" என்று நாலு பேர் அறியச் சொன்னார். சொன்னதோடு மட்டும் நிறுத்திக் கொள்ளாமல் அரசவைக்கேசென்று இது பற்றிக் காரசாரமாகப் பேசி விடுவது என்றும் தீர்மானித்தார்.

அவர் போன பொழுது தர்பார் கூடிக் களைகட்டியிருந்தது. எத்தனையோ புலவர்கள் குதூகலமாகக்கருத்துக்களைப் பரிமாறிக் கொண்டிருந்தனர். புலவரும் கலந்து கொண்டார். ஆனால், அவருக்குத் தமது கருத்தை வெளியிட வாய்ப்புக் கிட்டவில்லை. நேரம் போய்க் கொண்டேயிருந்தது.

என்றும் இல்லாத் திருநாளாக அன்று சாப்பாட்டு நேரம் கூடத் தாண்டி விட்டது. அரசரோ, திவானோ எழுந்திருப்பதாக இல்லை. பசி வயிற்றைக் கிள்ளவே, எல்லோரும் சோர்ந்து போய் விட்டனர்; புதுப் புலவர் உள்பட.

'எப்பொழுதடா உணவு கிடைக்கும்?' என்று எண்ணும் அளவுக்கு நேரமான பின்னர்தான் எல்லோருக்கும் உணவு அருந்த அழைப்பு வந்தது.

புதுப் புலவருக்கு முதல் இலை. அவரைப் பிரத்யேகமாகக் கவனிக்கத் தனிப் பரிசாரகர்களை நியமிக்கப்பட்டிருந்தனர். மற்றவர்களுக்கெல்லாம் அறுசுவை உண்டி பரிமாறப்பட்டுக் கொண்டிருந்தது. அவர்களுக்கு வெள்ளரிக்காய்க் கோசுமலி என்றால், புதுப் புலவருக்கு வெள்ளிக் காசுக் கோசுமலி. அவர்களுக்குப் பொன் வறுவலாக வறுக்கப்பட்ட வாழைக்காய் வறுவல் என்றால், இவருக்குப் பொன்னே வறுவல். மற்றவர்களுக்கு முத்து முத்தாக அன்னம் பரிமாறப்பட்டது. இவருக்கோ முத்தே அன்னமாகப் பரிமாறப்பட்டது. எல்லோரும்சுவைத்துப் புசிக்கலாயினர். புதுப் புலவர் பிரமித்து உட்கார்ந்திருந்தார். பக்கத்து இலைகளைப் பார்க்கும் பொழுது புலவரின் பசி பன்மடங்காகப் பெருகிவிட்டது. ஒவ்வோர் இலையாகக் கவனித்து வந்த திவான், புதுப் புலவரிடம் வந்ததும், "அடடா! ஒன்றுமே சாப்பிடாமல் உட்கார்ந்திருக்கிறீர்களே! என்ன வேண்டும்? யார் அங்கே? இவர் கலத்தைக் கவனி!" என்றார்.

அறுசுவை உண்டி அடுத்தகணமே பரிமாறப் பட்டது. 'பசித்த வேளைக்குப் பொன்னும் மணியும் பயனில்லை. புசிக்கச் சோறு வேண்டும். கலம் கலமாகப் பொன்னும் மணியும் கொடுத்தாலும் பசி அடங்காது' என்பதை உணர்ந்தார் புதுப் புலவர். 'தானத்திற் சிறந்தது அன்னதானம். அதற்கு ஈடு வேறு இல்லை. அந்தப் பணியைத்தான் உழவுத் தொழில் செய்பவன் புரிகிறான். ஆண்டவன் இவ்வுடலை 'அன்ன மயம் பிராண மயம் கோசமா'கச் சமைத்திருக்கிறான். பசி, தாகம் என்று ஏற்படுத்தி மனிதன் எந்தத் தொழில் செய்தாலும் உணவை மறக்க முடியாதவாறு, 'ஒரு நாள் உணவை ஒழி யென்றால் ஒழியாய்' என்று சொல்லுமளவுக்கு இடும்பை கூர்



வயிற்றைப் படைத்திருக்கிறான். அந்த உணவை அளிக்கும் தொழில்தான் உழவுத்தொழில். மற்றையத் தொழில்கள் அதை அண்டிப் பிழைக்க வேண்டியவை தான். எனவே தான் பொய்யா மொழி அப்படிக் கூறியிருக்கிறார். பொய்யா மொழியின் பேச்சு ஒரு நாளும் பொய்க்காது!' என்ற முடிவுக்கும் வர அவருக்கு அதிக நேரம் பிடிக்க வில்லை.

கலத்தில் அன்னம் படைத்ததும் கைதூக்கிக் கும்பிடும் பழக்கத்தை நம் பாரத நாடு இன்றும் கொண்டிருக்கிறது. உணவு உற்பத்தி செய்யும் தொழிலை மேற்கொண்டவனை அறிந்தோ அறியாமலோ கையெடுத்துக் கும்பிடுகிறது. 'மற்றவர் எல்லாம் தொழுதுண்டுபின் செல்பவர்தாம்!' என்பதை நிலைநாட்டி வருகிறது.

ஆதி காலந்தொட்டே. நம் பாரத நாடு விவசாயத்தையே முதல் தொழிலாகக் கொண்டு முன்னேறிய நாடு. இவ்விவசாயத்துக்கு முக்கியமானது விளை நிலம். அடுத்தபடியாக நீர். எனவேதான் 'ஏரின் உழாஅர் உழவர் புயலென்னும் வாரி வளம் குன்றிக் கால்' என்றார் வள்ளுவர் பெருமான். அப்படி வாரி வளம் குன்றி விட்டால் என்ன ஆகும்? 'சிறப்பொடு பூசனை செல்லாது, வானோர்க்கும் ஈண்டு'.



'உழவர்க்கும் வானவர்க்கும் பொதுவுடைமையான மழை, காலத்தில் பெய்ய வேண்டும், உணவுப் பொருள்களுக்குத் தட்டு ஏற்படக் கூடாது, பசிப் பிணி மக்களைப் பீடிக்கக் கூடாது என்னும் பெரு நோக்குடன் யாக — யக்ஞங்கள் சிறப்பாகச் செய்து வந்த



நாடு நம் நாடு. உலகம் முழுவதையும் ஒரு குடும்பமாக மதித்து 'தனி ஒருவனுக்கு உணவில்லையெனில் ஜகத்தினை அழித்திடுவோம்' என்று கூறி உலகுக்கு அந்த நிலை நேராவண்ணம் கைகொடுத்து உதவ முயன்ற நாடு நம் நாடு. தான் பட்டினி கிடந்தாலும் பிறர் பட்டினி கிடந்து வாடச் சகியாத நாடு. அன்னத்தையும் நெய்யையும் தீயில் இட்டு வேள்விகள் செய்து இயற்கையையும் இயற்கையைப் படைத்த இறைவனையும் வழிபட்டு உலக நலனுக்காகப் பாடுபட்ட நாடு; பரந்தநோக்கம் கொண்டநாடு.'

பாரதப் பண்பாட்டில் ஊறித் திளைத்தவர்கள் இப்படிக்கூறுவார்கள்.

பொருளாதார சாஸ்திரத்தைக் கரைத்துக் குடித்தவர்களோ புதுப் பொருள் கற்பிப்பார்கள். எதையும் பொருள் நோக்கோடு பார்ப்பவர்களாயிற்றே அவர்கள்!

'விலைவாசியை ஒரு நிலையில் நிறுத்த வேண்டும். ஒரு பொருளின் விலை ஏகமாக உயர்ந்து விடக் கூடாது. ஸப்ளை அண்ட் டிமாண்ட்—அதாவது விநியோகம் - தேவை இவற்றைப் பொறுத்துப் பொருள்களை உற்பத்தி செய்ய வேண்டும்; செலவழிக்க வேண்டும். அப்பொழுதுதான் விலைவாசி சீராக இருக்கும்.'

இப்படிக் கூறிக் கொண்டே வருபவர்கள் பண்டைய பாரதத்துக்குப் பெருமை சேர்ப்பதாக எண்ணி, 'அந்தக் காலத்தில் பாரதத்தில் உணவுப் பொருள்கள் ஏராளமாக விளைந்தன. விலைவாசிகள் சமனுக இராமல்குறைந்து விடுமோ என்ற கவலை ஏற்படவே, வேள்விகள் செய்து அதிகப் படியான பொருள்களைத் தீக்கு இரையாக்கி வந்தார்கள். இன்றைய அமெரிக்கா அதிகப்படி கோதுமையை நடுக் கடலில் கொண்டு போய்க் கொட்ட வில்லையா? எரித்துச் சாம்பலாக்க வில்லையா? அது போலத்தான் அன்றைய பாரதத்தினரும் செய்து வந்திருக்கிறார்கள்! இவ்விரண்டின் நோக்கமும் என்ன, ஒன்று தானே?'' என்று ஒரு வேளை சுவைபட எடுத்துரைத்தால் வியப்பதற்கு ஏதும் இல்லை.

ஆனால் இதைக் காட்டிலும், அன்றைய பாரதம் உலகத்தை ஒரு குடும்பமாக நினைத்து உதவியதையும் இன்றைய அமெரிக்கா 'பப்ளிக் லா 480' என்பதன் மூலம் பற்றாக் குறையுள்ள நாடுகளுக்கு,- குறிப்பாகப் பாரதத்துக்கு உணவுப் பொருள்கள் உதவியும், உழவுத் தொழில் விஷயத்தில் தனது அநுபவத்தைப் புகட்டியும் வருவதைக் குறிப்பிட்டால் எவ்வளவோ நன்றாயிருக்குமே!

உலகத்திலேயே விவசாய நாடு என்று புகழ் பெற்ற பாரதம் இன்று பற்றாக் குறைநாடாக இருந்து வருவதற்குக் காரணம் முக்கியமாக இரண்டு. ஒன்று நாள்தோறும் ஜனத்தொகை கூடி வருவது. எதையும் பணத்தைக்கொண்டு எடை போட ஆரம்பித்ததால், மக்களுக்கு விவசாயத்தில் உள்ள பற்றுதல் குறைந்து, பணம் தரும் மற்றத் தொழில்களில் மோகமும் நாட்டமும் ஏற்பட்டது இரண்டு.

இந்த நிலை நீடித்தால், நம் நாடு உலகத்தின் கண்களில் தாழ்ந்து விடும் என்பதைக் கண்டுதான் காந்தியடிகள் 'கிராமத்துக்குப் போ!' என்று கோஷம் எழுப்பினர்.

தமது அறிவுப் பசியை ஆன்மீகத் துறையில் தீர்த்து வைத்த பாரதம் பசிப் பிணியினால் வாடக் கூடாது என்ற பெரு நோக்குடன் அமெரிக்கா உணவுப் பொருள்களைத் தந்து மட்டும் உதவ வில்லை; உணவு உற்பத்தியில், தான் பெற்ற அநுபவத்தையும் அறிவையும் தந்து உதவவும் முன் வந்துள்ளது.

உணவு உற்பத்தி, விளை நில விஸ்தரிப்பு, விவசாயக் கல்வி, ஆராய்ச்சி, உணவுப் பொருள் பராமரிப்பு, மண் வள — நீர் வளச் சோதனை என்று பல பகுதிகளாகப் பிரித்துக் கொண்டு, நம் நாட்டின் முன்னேற்றத்துக்குக் கைகொடுத்து உதவுகிறது.

அணை — நீர்த் தேக்கம் ஆகியவற்றைக் கட்டித் தரும் பணியில் அமெரிக்கா உதவ முன் வந்தது எதற்காக? உணவு உற்பத்தியைப் பெருக்கவும் விளை நில விஸ்தரிப்பை மேற்கொள்ளவும்தானே? 'எந்தத் தொழிலும் இந்தத் தொழிலுள் அடக்கம்' என்பதை உணர்ந்து அமெரிக்கா செய்யும் இந்தப் பணி திருவள்ளுவரின் தெய்வத் தமிழ் மறை எந்த நாட்டுக்கும் எந்தக் காலத்துக்கும் பொருந்தும் என்பதை எடுத்துக் காட்டுவதே போல் அமையவில்லையா?

இவர்கள் தஞ்சை மாவட்டத்தில் நீர்ப் பாசன — வடிகால்களைப் பற்றிய விஷயத்தில் உதவி செய்கிறார்கள் என்றால், கோவை மாவட்டத்தில், விவசாயக் கல்லூரியின் ஆராய்ச்சி விஷயங்களில் உதவுகிறார்கள்.

பங்களூரை அடுத்தாற் போல் உள்ள ஹெப்பல் கல்லூரியில் ஆராய்ச்சிப் பகுதி ஒன்று அமைத்து, போட்ட முதலுக்குக் கணிசமான பலன் கிட்டும் வகையில் சோதனைகள் நடத்துகிறார்கள். புஞ்செய் தானியமான கேழ்வரகுச் சாகுபடியில் குறிப்பிடத் தக்க வெற்றியும் கண்டிருக்கிறார்கள்.

ஏரினும் நன்றால் எரு இடுதல் — வள்ளுவரது இவ் வாக்கினை மக்களுக்குக் கற்றுக் கொடுத்து விளைச்சல் விஷயத்தில் அபாரமான சாதனையைக் காண வகை செய்துள்ளார்கள்.

காய்கறிகள் பயிரிட்டுப் பாத்தி கட்டி நீர் பாய்ச்சுகிறோமே! பாத்திக்குப் போகும் வரை நீர் எத்தனை பாழாகிறது? அந்த நீரை இன்னும் நல்ல முறையில் பயன்படுத்தலாமே! இவ்வெண்ணத்தில் மிகவும் மலிவாகக் கிடைக்கக் கூடிய ஓட்டுக் குழாய்களைப் பயிரிடப்படும் கத்திரி, தக்காளி போன்ற செடிகளுக்கருகில் புதைத்து, அவற்றில் உரமிட்டு, நீரும் ஊற்றுகிறார்கள். இதனால் தனக்கு வேண்டிய உரத்தையும் நீரையும் நேரிடையாக வேரே இழுத்துக் கொண்டு செடி நன்றாக வளரக் கூடும், நல்ல பயனும் தரக் கூடும் என்று சோதனை செய்து வருகிறார்கள்.

'காலமில்லாக் காலத்தில் காய்த்ததாம் பேய்ச் சுரைக்காய்!' என்று ஒரு பழமொழி கூறுவார்களே! அதைப் பொய்யாக்கி எந்தக் காலத்திலும் நல்ல காய்கறிகளைப் பயிரிட்டு வெற்றி காணவும் முயன்று வருகிறார்கள்.

கேழ்வரகு விளையும் நிலத்திலே இடைக் காலத்தில் தக்காளிப் பயிரிட்டுப் பயனடையலாம் என்பதையும் குடியானவர்களுக்குச் சொல்லாமல் சொல்லித்தரும் பெருமை இந்த ஹெப்பல் கல்லூரியில் உள்ள அமெரிக்க நிபுணர்களைச் சார்ந்தது. அமெரிக்காவுக்கே நேரில் சென்று பயின்று வந்த இந்தியர்களும் ஹெப்பல் கல்லூரியின் விவசாய ஆராய்ச்சிப் பணி சிறக்கப் பாடுபட்டு வருகிறார்கள்.

ஹைதராபாத் உஸ்மானியா பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த ராஜேந்திர நகர் விவசாயக் கல்லூரிக்கும் இது போன்ற உதவி அமெரிக்கர்கள் மூலம் கிட்டி வருகிறது.

இக்கல்லூரியே பல கிராமங்களை விவசாய ஆராய்ச்சிக்கும் கால் நடை வளர்ச்சிக்குமாகத் தேர்ந்தெடுத்து நிறுவி நடத்தி வருகிறது. மாணவர்கள் நேரிடைக் கல்வி பெறுவதோடு, இக் கல்லூரியின் சாதனை மக்களையும் விழிப்புறச் செய்து உணவு உற்பத்தி விஷயத்தில் மேலும் மேலும் அக்கறை கொள்ளத் தூண்டுகிறது.

விஜயவாடாவைச் சேர்ந்த மேற்கு கோதாவரி மாவட்டப் பகுதியிலே தீவிரச் சாகுபடி முறைக்கு அமெரிக்கர்கள் செய்து வரும் பணி போற்றுதற்குரியதாகும்.

கனி தரும் மரங்களையும், மிளகாய் போன்ற பயிர்களையும் வைத்துப் பராமரிக்கும் விஷயத்திலே விவசாயத்தில் ஈடுபாடு கொண்டவர்களுக்கு அமெரிக்கர்களே தோளோடு தோள் நின்று உதவுகிறார்கள்.

இப்படிப் போகும் இடங்களில் எல்லாம் அமெரிக்கர்களது அநுபவ அறிவு கொண்டு, உரமிட்டு நீர் பாய்ச்சி வளர்ந்திருக்கும் பயிர்களைக் காணும் பொழுது, பற்றுக் குறை என்ற பேச்சுக்கே இடமிராது என்று துணிந்து கூறத் தோன்றும்.

'நிலத்துக்குரியவன் நாள் தோறும் சென்று பார்த்துச் செய்வன செய்யாது வாளாவிருந்தால், அது அவன் மனைவியைப் போல வெறுத்துப் பிறகு அவனோடு பிணங்கி விடும்' என்னும் பொருள் தரும் குறளை இந்த அமெரிக்கர்கள் எப்படிக் கற்றார்களோ, தினம் நிலத்தைப் பேணிப் பாதுகாக்கும் விஷயத்தையும் இக் கல்லூரிகளிலே நன்றாகச் சொல்லித் தருகிறார்கள்.

இத்தொழிலில் ஈடுபடுபவர்கள் மற்ற தொழிலாளர்களைக் காட்டிலும் வைகறைத் துயில் எழவேண்டியவர்களாகிறார்கள். இறைவன் அளித்த இயற்கைக் கடிகாரமான கோழி கூவியதும் வயலை நோக்கிப் புறப்பட்டார்களானால், சூரியன் உச்சிக்கு வரும்வரை நெற்றி வியர்வை நிலத்தில் விழப் பாடுபட வேண்டியிருக்கிறது இவர்கள்.

ஊருக்கு ஒரே கோழி வைத்திருந்த கிழவி, தன் கோழி கத்துவதனால்தான் கதிரவன் கண் விழிக்கிறான், பொழுதும் புலருகிறது, மக்களும் வயல் வேலைக்குப் போகிறார்கள் என்று எண்ணிக் கூடைக்குள் வைத்துப் பொத்தி மூடிய நாளிலிருந்து 'நாம் கிழவியின் கோழியை நம்பிக் கொண்டிருக்கக் கூடாது. நம் வீடுகளிலும் கோழி வளர்த்தால் தொல்லை இல்லையல்லவா?' என்று எண்ணிக் குடியானவர்கள் கோழிகள் வளர்க்கத் தலைப்பட்டதாகக் கூறுவார்களே, நினைவிருக்கிறதா? அந்தக் கலையிலும் இந்த அமெரிக்கர்கள் தேர்ந்தவர்களாயிருக்கிறார்கள். 'கோழிப் பண்ணைகளையே சிக்கனமாக எப்படி வைத்து நடத்துவது?' என்பதையும் திட்டமிட்டுச் சொல்லித் தருகிறார்கள்.

அதிகச் செலவில்லாத காற்றோட்டமுள்ள வாசஸ்தலம். உணவும் நீரும் வீணாகாமல் அருந்த ஏற்பாடு. மனித முயற்சி குறைவு. இடம் அசுத்தமாகாமல் இருக்க வைக்கோல் விரிப்பு. இப்படியாக ரோமிலிருந்து கொண்டு வந்த கோழிகளை வளர்த்துப் பெரும் பண்ணையாக்க விவசாயிகளுக்கு வழி வகை சொல்லித் தருகிறார்கள்.

தான்யங்களினால் லாபம் கிட்டுவது போலக் கோழி முட்டைகளினாலும் வருமானம் பெற வசதி இருக்கிறது என்றால் ஆர்வத்துடன் யார்தான் முனையமாட்டார்கள்? இந்த வித்தையையும் கற்றுத் தருகிறார்கள் அமெரிக்கர்கள்.



தங்கள் நலன் ஒன்றே குறிக்கோளாகக் கொண்டு பணம் பண்ணுகிறவர்களானால் நம் நாட்டுக்கே வந்து, நமது நாட்டின் முன்னேற்றத்துக்கான அலுவல்களில் ஈடுபடுவார்களா? பாரதம் அளித்த மெய்யறிவு, வையகம் துயர் தீர்ந்து வாழ வேண்டும் என்ற நல்ல எண்ணத்தை அவர்களிடையே உண்டு பண்ணியிருக்கிறது.

நீர் வளமும் நில வளமும் நிறைந்த பாரதம், விவசாயத்துக்குத் தாயகமான பாரதம் ஏற்கனவே இத்துறையில் அற்புதமான சோதனைகளையும், சாதனைகளையும் செய்துவந்திருக்கிறது; இப்பொழுதும் செய்து வருகிறது. அமெரிக்க நாடு தனது அனுபவத்தையும் அறிவையும் தந்து உதவுவதை உவந்து ஏற்கவும் செய்கிறது.

எத்தனைதான் ஏனைய தொழில்களில் சிறந்து விளங்கினாலும் உழவுத் தொழிலுக்கு ஈடான வேறு தொழில் இல்லை; உழவர்களுக்கு மேலான தியாகிகள் இல்லையென்பதை உணர்ந்துள்ள பாரதம் இவ்வுண்மையை உலகத்துக்கு எடுத்து ஓதத் தயங்காது. வயிறு நிறைந்து விட்டால் போருக்கும் பகைக்கும் இடம் இல்லை. உலகம் முழுவதும் உண்டு களித்திருக்க வேண்டும். அதைக் கண்டு நாம் களித்திருக்க வேண்டும். இதுவே பாரதத்தின் ஆசை, கொள்கை எல்லாம்.

'சுழன்றும் ஏர்ப் பின்னது உலகம்; அதனால்
உழந்தும் உழவே தலை'

திருவள்ளுவர் பெருமானுடைய இந்தத் திருவாக்கைப் போற்றிப் பாதுகாத்து வரும் தமிழகம், ஆக்கம் தரும் அமெரிக்கர்களின் உதவியினால் உலகத்துக்கே அதனை எடுத்து ஓதும் என்பதில் ஐயமில்லை. வாரீர்! உழுதுண்டு வாழ்வோம், வாரீர்!





# ஒய்.எம்.ஸி.ஏ.
## உடற்பயிற்சிக் கல்லூரி

'நான் பெரிய ஆசாமி. தனக்கு எதிலே முக்கியத்துவம் அதிகம்' என்று நினைத்துக் கொண்டு பெருமைப்படும் ஒரே மாதிரியான இரண்டு நண்பர்களைப் பற்றி நகைச்சுவைத் துணுக்கு ஒன்று உண்டு.

''போன வாரம் தில்லிக்குப் போயிருந்தேன் தெரியுமல்லவா? பிரதம மந்திரி நேருவோடு இரண்டு மணி நேரம் பேசிக் கொண்டிருந்தேன்'' என்று தன் பெருமைப் படுதாவை விரிக்கத் தொடங்கினான் முதல் நண்பன். பிரமுகர்கள் எல்லாம் தனக்கு வேண்டியவர்கள் என்று சொல்லிக் கொள்வதில் அவனுக்கு ஓர் ஆனந்தம்.

''பேஷாகத் தெரியும்! அந்த இரண்டு மணி நேரத்தையும் நீ 'போரடி'த்துத் தள்ளி விட்டாய் என்று நேருஜி எனக்குக் கடுதாசியே எழுதியிருந்தார்'' என்று ஒரு போடு போட்டான் இரண்டாவது நண்பன் ஒரு படி மேலே போய். 'நீ பெரியவன் என்றால் உன்னைவிட நான் பெரியவன்' என்ற முறையில் ஒரு நெருக்கத்தைக் கற்பித்துக் கொண்டு பேசினான் அவன்.

இந்த ரீதியில்தான் உள்ளத்துக்கும் உடலுக்கும், தான் தான் முக்கியம் என்ற போட்டி தொன்று தொட்டு இருந்து வருவதாக அறிஞர்கள் கூறுகிறார்கள்.

'நான் வளராமல் நீ மாத்திரம் வளர்ந்தால் உலகில் உனக்கு என்ன மதிப்பு? தடித்தனம்தான் மிஞ்சும்!' என்று உள்ளம் உடலைப் பார்த்துக் கேட்பதும், 'நான் ஒத்துழைக்கா விட்டால் உன்னால் என்ன செய்து விட முடியும்?' என்று உடல் உள்ளத்தைப் பார்த்துச் சவால் விடுவதும் சகஜம் என்பதற்குப் புராண காலத்திலிருந்தே பல சான்றுகள் உண்டு.

உடலுக்கும் உள்ளத்துக்கும் சம அந்தஸ்தைக் கொடுத்து ஒன்றினால் மற்றொன்று பெருமையடையலாம் என்று எடுத்துக் காட்டும் பணியைத்தான் சைதாப்பேட்டையில் உள்ள ஒய். எம். ஸி. ஏ. உடல் பயிற்சிக் கல்லூரி செய்து வருகிறது.

தீர்க்கதரிசனத்துடன் இந்தக் கல்லூரிக்கு வித்திட்டவர் ஹாரி க்ரௌ பக் என்னும் அமெரிக்கராகும்.

பாரத நாட்டில், உடற் பயிற்சிக் கலை, போதுமான கல்விஅறிவில்லாத பயிற்சியாளர்களிடமும், பயில்வான்களிடமும் ஓய்வுபெற்ற முரட்டுச் சிப்பாய்களிடமும் சிக்கித் தவித்ததைக் கண்டு, அதை ஒழுங்கான முறையில் கற்பிக்க வழி கண்டுபிடித்தார் பக்.

'உடற்பயிற்சிப் பள்ளி' என்ற பெயருடன், இளைஞர் கிறிஸ்துவ சங்கத்தின் ஆதரவில் ஐந்தே மாணவர்களுடன் 1920ம் ஆண்டில் பக் அவர்கள் சென்னை எஸ்பிளநேட் பகுதியில் ஆரம்பித்த ஸ்தாபனம் பல ஆரம்ப கால



## கலை வளர்க்கும் கோயில்கள்





எதிர்ப்புக்களையெல்லாம் கண்டு அஞ்சி மறையாமல் இன்று ஆண்டுதோறும் ஆண்களுக்கும் பெண்களுக்குமாகச் சுமார் நூற்றி ஐம்பது நபர்களுக்கு முறைப்படி மனோ வலிமை நிறைந்த உடற் பயிற்சிக் கல்வியைக் கொடுக்கும் கல்லூரியாகச் சைதாப்பேட்டைப் பகுதியில் திகழ்கிறது.

பரந்து கிடக்கும் மைதானம், விளையாட்டு ஸ்டேடியம், வகுப்பு அறைக்களுக்கான கட்டடங்கள், ஹாஸ்டல் குடில்கள், நீச்சல் குளம் எல்லாம் சேர்ந்து ஒரு தனி உடற் பயிற்சிக் கலை உலகமாகவே காட்சியளிக்கிறது.

பம்பாய் மாகாணத்தைச் சேர்ந்த திரு சோப்டே இப்போது இந்தக் கல்லூரி முதல்வராகப் பணியாற்றுகிறார். அமெரிக்க நாட்டில் உள்ள ஸ்பிரிங்பீல்டு கல்லூரியில், உடற் பயிற்சிக் கலையில் விசேஷப் பயிற்சி பெற்றுத் திரும்பியவர் திரு சோப்டே அவர்கள்.

இந்தக் கல்லூரியைப் பொறுத்த வரை, ஜூனியர் மாணவர்கள், சீனியர் மாணவர்கள் என்ற பாகுபாட்டுக்கு இடமே



இல்லை. எல்லோரும் சீனியர் மாணவர்கள்தான். அதேமாதிரி எல்லோரும் ஜூனியர் மாணவர்களும் கூடத்தான். காரணம் இந்தக் கல்லூரியில் ஒரே ஆண்டு போதனைதான். வருட முடிவில் டிப்ளோமாவோ சர்டிபிகேட்டோ கொடுத்து விடுகிறார்கள். திருத்தி அமைக்கப்பட்ட கல்வி முறைப்படி, ஒவ்வொரு பள்ளியும், கல்லூரியும், உடற்பயிற்சிப் பாடத்தை அவசியம் போதிக்க வேண்டும் என்ற நிபந்தனை இருப்பதால் இவர்களுக்கு உடனடியான வேலை வாய்ப்புக்கான வசதிகள் நிறைய இருக்கின்றன.

இந்தக் கல்லூரியில் போதனையை மூன்று பிரிவுகளாக அளிக்கிறார்கள். ஏற்கனவே கல்லூரிகளில் படித்து மூன்று வருட பட்டப்படிப்பைப் பெற்றவர்களுக்கு டிப்ளோமா வகுப்புக்கள். இவர்கள் கல்லூரிகளில் அதிகப்படியான சம்பள ஆரம்ப அடிப்படையில் வேலை புரியலாம். புகுமுக வகுப்பைத் தாண்டியவர்கள், ஹையர் கிரேடிலும், உயர்நிலைப் பள்ளிப் படிப்பை முடித்தவர்கள் லோயர் கிரேடிலும் அனுமதிக்கப்படுகிறார்கள். எல்லாருக்குமே ஒரு வருடப் படிப்புத்தான்.

'என்னவோ அப்ளிகேஷன் போட்டோம். இந்தக் கல்லூரியில் சேர்ந்தோம்' என்று சுலபமாகச் சேர்ந்து விட முடியாது. மற்றத்தொழில் கல்லூரிகளில் சிபாரிசுக்கு மதிப்பு இருக்கலாம். ஆனால் இங்கு விண்ணப்பம் போடும் மாணவர்களுக்கு, அவர்களுடைய உடற்கட்டும், விளையாட்டுக்களில் உள்ள ஈடுபாடும் சிபாரிசாக அமைந்தால் தான் கல்லூரியில் இடம் கிடைக்கும். உள்ளே அனுமதிக்குமுன் கடும் சோதனைக்குள்ளாக்கித்தான் சேர்த்துக் கொள்ளுகிறார்கள். இத்தனை அடி உயரம் தாவிக் காண்பிக்கவேண்டும். இத்தனை அடி அகலம் தாவிக் காண்பிக்கவேண்டும் என்ற கட்டுப்பாடுகள் உண்டு.

இந்தக் கல்லூரி ஹாஸ்டலுக்குள் நுழைந்து விட்டால், பாரதத்தின் அத்தனை பிரதிநிதிகளையுமே காண முடிகிறது. பஞ்சாபி இளைஞர்கள், காஷ்மீர யுவர்கள், மத்திய பிரதேச வாலிபர்கள், ஆந்திர சகோதரர்கள், மகாராஷ்டிர மாணவர்கள், அத்தனை பேர்களுமே இங்கு கல்வி கற்க வந்திருக்கிறார்கள்.

மாணவர்களின் ஹாஸ்டல் ஒரே கட்டடமாக

அமையாமல் ஆறு பகுதிகளாக அமைந்திருக்கின்றன. ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு பெயர். ஸ்பூர்த்தி ஹவுஸ், ப்ரீதி ஹவுஸ், ஷாந்தி ஹவுஸ், ஜ்யோதி ஹவுஸ், கீர்த்தி ஹவுஸ், சக்தி ஹவுஸ் என்ற பெயர்களைச் சூட்டியிருக்கிறார்கள்.

'இந்த மாதிரி பல மாநிலத்தைச் சேர்ந்தவர்கள் சேர்ந்து பழகுவதில் இரண்டு சிறந்த பலன்கள் ஏற்படுகின்றன. ஒன்று எல்லாருக்கும் பொதுவான ஆங்கில மொழியின் ஞானம் அபிவிருத்தியடைகிறது. இரண்டாவது, ஒவ்வொரு மாநிலத்தைச் சேர்ந்தவர்களும், மற்றப் பிரதேசவாசிகளின் மொழி அறிவை ஓரளவு பெற முடிவதுடன், அவர்களுடைய பழக்க வழக்கங்களையும் தெரிந்து கொள்ள முடிகிறது'' என்று ஒரு பழைய மாணவர் குறிப்பிட்டார். அவர் தம் இந்தக் கல்லூரியின் ஆரம்ப கால வாழ்க்கையில் நடந்த சுவாரசியமான ஒரு நிகழ்ச்சியையும் சொன்னார்.

உடற் பயிற்சிக் கல்லூரியில் சேர்ந்த புதிது. இவர் வசித்த 'கீர்த்தி ஹவுஸி'ல் பஞ்சாபி மாணவர்கள், ஆந்திரர்கள், தமிழர்கள் எல்லாருமே சேர்ந்திருந்தார்கள். பரஸ்பரம் பாஷைகளைப் புரிந்துகொள்ள முடியாத ஆரம்ப கட்டம்.

ஒரு நாள் பக்கத்துக் கட்டிலில் இருந்த பஞ்சாபி மாணவர் திடீரென்று குதித்து எழுந்து அவர் பாஷையில் பலத்த குரலில் ஏதோ சொல்லிக் குதிக்க ஆரம்பித்தார். அவர் ஏதோ தங்கள் பிராந்திய நாட்டுப் பாடலைப் பாடுகிறாராக்கும் என்று நினைத்து இவரும் எழுந்து உட்கார்ந்து அவர் மாதிரியே ஒலி எழுப்ப முயற்சி செய்தார். பஞ்சாபிக்காரர் குரலைப் பலப்படுத்தினார். அப்புறம் தான் அந்தப் பஞ்சாபி மாணவரைத் தேள் கொட்டப் போக, அவர் தம் தாய்மொழியிலேயே அலறினார் என்று தெரிய வந்ததாம்!

''முன்பெல்லாம் பள்ளிப் பரீட்சையில், வாங்கும் உயர்ந்த மார்க்குகளைக் கொண்டு தான் உத்தியோகம் அளிப்பார்கள். ஆனால் இப்போது, பள்ளியில் அந்த மாணவன் விளையாட்டுக்களில் காண்பிக்கும் ஈடுபாட்டுக்கான நற்சாட்சிப் பத்திரத்தைப் பார்த்த பிறகு தான் வேலை கொடுக்கிறார்கள்'' என்று பெருமையுடன் குறிப்பிட்டார்.

இந்தக் கல்லூரி மாணவர்கள் கண்டிப்பாக ஹாஸ்டலில்தான் தங்க வேண்டும். வெளியே தங்கிப் படிக்க அனுமதிக்கப்படுவதில்லை. காரணம் காலை ஆறே முக்கால் மணிக்கே தேகப் பயிற்சி அப்பியாசங்கள் ஆரம்பமாகி விடுகின்றன. எட்டரைக்குத் தேகப் பயிற்சியை முடித்துக் கொண்டு திரும்பக் குளித்துக் காலை ஆகாரத்தை முடித்துக் கொண்டு மீண்டும் பத்தரை மணிக்கு, போதனை வகுப்புக்களுக்குச் செல்ல வேண்டும். ஒரு மணி வரை, உடற்கூறு சாஸ்திரம், முதலுதவி, பலதரப்பட்ட விளையாட்டுக்களின் தத்துவங்கள் முதலியவற்றைப் படிக்கிறார்கள். பிறகு நான்கு மணி வரை ஓய்வு. பிறகு ஐந்தரைமணி வரையில் ஹாக்கி, கால் பந்து, கூடைப் பந்து போன்ற விளையாட்டுக்கள்.

ஹாஸ்டலில் தங்கியாக வேண்டும் என்பது எவ்வளவு அவசியமோ, அத்தனை அவசியம் ஒவ்வொரு மாணவனும் கொசு வலை உபயோகிக்க வேண்டும் என்பது. சைதாப்பேட்டைப் பகுதி கொசுக்களின் உடல் வலிமை பிரசித்தி பெற்றதல்லவா!

ஒரு மாணவரின் பாட புத்தகத்தைப் புரட்டிய போது ரசமான அநுபவம் கிடைத்தது.

''அத்தையைப் பார்த்தாயா?''

''இல்லை!''

''அத்தையா ? பாட்டியா?''

''ஹூஹூம்!''

''ஆத்தியா, பாத்தியா?''

''ஆத்திக் கீரையும் இல்லை! துவாதசி பாரணையும் இல்லை''

''ஓஹோ! அட்டையா, பட்டையா?''

''கரெக்ட்.''

'அட்டையா, பட்டையா' என்பது ஒரு வகை விளையாட்டு. பலீன் சடுகுடு கோத்திரத்தைச் சேர்ந்தது. அதன் பெயரை ஆங்கிலத்தில் படித்த போது நான் பட்ட அவஸ்தையைத்தான் மேலே குறிப்பிட்டேன். விளையாட்டு சுவாரசியமாக இருக்குமாம்.

1940ம் ஆண்டிலிருந்து மாணவிகளையும் இங்கு அனுமதிக்கிறார்கள். அவர்களுக்குப் பிரத்தியேக ஹாஸ்டல் வசதி இருக்கிறது. அங்கு ஏற்கனவே உள்ள நளினி, ரோகிணி, மோஹினி, காமினி குடில்களைத் தவிரத் தற்கால பாணியில் ஒரு பெரிய ஹாஸ்டல் கட்டடமும் எழும்பியிருக்கிறது. மாணவிகளுக்குக் கைப் பந்து, எறி பந்து முதலிய விளையாட்டுக்களில் பிரத்தியேகப் பயிற்சி அளிக்கிறார்கள். திறமை வாய்ந்த ஆசிரியைகளும் இங்கு பணி செய்கிறார்கள்.

இங்கு படிக்கும் மாணவர் 'எனக்கு இந்த விளையாட்டுத்தான் வரும்' என்று சொல்லி ஒதுங்க முடியாது. எல்லா விளையாட்டுக்களையுமே அவர்கள் தெரிந்து கொண்டாக வேண்டும். ஏனென்றால், அவர்களுடைய பிற்கால வாழ்க்கையில் தங்கள் மாணவர்களுக்கு எல்லா விளையாட்டுக்களையுமே சொல்லிக் கொடுத்தாக வேண்டுமே! அதற்கான பழக்கத்தை இப்போது நடைமுறையில் ஏற்படுத்துகிறார்கள்.

எல்லா மாநிலத்தைச் சேர்ந்தவர்களும் இங்கு இருப்பதால் எல்லாப் பண்டிகைகளுக்குமே முக்கியத்துவம் கொடுத்துக் கொண்டாடுவது இங்கு சம்பிரதாயம். அந்தப் பண்டிகை தின இரவுகளை 'அறிவின் இரவு' (Talents Night) என்ற பெயரில் மாணவர்களும், மாணவிகளும் தங்கள் தங்கள் கலைத் திறனைக் காண்பிக்கும் வாய்ப்பாகப் பயன்படுத்திக் கொள்கிறார்கள்.

'உள்ளம் என்பது ஒரு பாரசூட் போல: பாரசூட் விரிந்தால்தான் பயன் கிட்டும்' என்றான் ஓர் அறிஞன்.

'நம்முடைய உடல் என்பது ஒழுங்காக வேலை செய்யும் கடிகாரம் போல. அதைச் சரியாகப் பராமரிக்காமல் இருந்தால், குறிப்பிட்ட நேரத்துக்கு முன்பே அலார சக்தி தீர்ந்து விடும்' என்றான் மற்றோர் அறிஞன்.

மனிதனை நல்ல பாரசூட் போலவும் ஒழுங்காக அலாரம் அடிக்கும் கடிகாரம் போலவும் உருவாக்கும் இந்த ஒய். எம். ஸி. ஏ. உடற் பயிற்சிக் கல்லூரி வருங்கால சமூகத்துக்குச் சிறந்த முறையில் சேவை செய்கிறது.



சிந்தால்
வருஷங்கள்

# குழந்தைப் பருவம்

சரும ஆரோக்கியத்திற்கும், அழகுக்கும் **சிந்தால்** நம்பகமான வழி. ஆச்சரியகரமான **ஜி-11*** என்ற கிருமி நாசினி சேர்ந்த **சிந்தால்** குழந்தையின் மிருதுவான சருமத்தை அதன் மேல் சாதாரணமாக வளரும் லட்சக்கணக்கான கிருமிகளிலிருந்து காப்பாற்றுகிறது... சிரங்கு, வேர்க்குரு, கருநிறப்படை ஆகியவற்றிலிருந்து பாதுகாக்கவும், குணப்படுத்தவும் செய்கிறது.

மனோகர நறுமணங்கொண்ட **சிந்தால்** மிகவும் மிருதுத்தன்மையுடையதால் சருமத்தைச் சுத்தம் செய்கையிலேயே இதமளிக்கிறது... கண்களுக்குக் கெடுதலற்றது... சிறுவர் இல்லத்தில் வைத்திருக்க **அத்தியாவசியமானது.**




வியர்வை நாற்றத்தைப் போக்கி, எழிலுடன் விளங்கச்செய்யும் சோப்

பூரணப் பாதுகாப்பிற்கு இனிய மணங்கமழும் வியர்வை நாற்றத்தைப்போக்கி ஆறுதல் அளிக்கும் ஜி-11 அடங்கியுள்ள கோத்ரெஜ் சிந்தால் டாய்லெட் பவுடர் உபயோகியுங்கள்.

*விவரமான "ஜி-11 என்பது என்ன?" என்ற இலவச புத்தகத்திற்கு 'கோத்ரெஜ், பம்பாய்-12,' என்ற விலாசத்திற்கு எழுதுங்கள்.

Godrej **கோத்ரெஜ்**

**சோப்புகளில் முதன்மையான பெயர்**

எல். ஜிவாடன் அண்டு கம்பெனியின் ட்ரேட் மார்க்

. CT-I. 2/63 (21 cm x 13 cm) TAM.

# அறிவுக் கனலே, அருட் புனலே! 35

தேர்த் திருவிழாவில் ஈசுவரனும் தேவியும் உள்ள பிரதானமான ரதத்தையும், கணேசன், ஷண்முகன், சண்டேசன் ஆகியவர்களின் சிறிய ரதங்களையும் மாற்றி மாற்றி இழுத்துத் தேர் முட்டிக்குக் கொண்டு வருவது போல் கதாசிரியன் தனது முக்கியமான பாத்திரங்களையும், மற்றப் பாத்திரங்களையும் குறித்த நிகழ்ச்சிகளை மாற்றி மாற்றி விவரித்துக் கதையை நிறைவு செய்கிறான் என ஒரு நூலாசிரியர் எழுதி யிருக்கிறார்.

நாம் இந்தக் கூற்றுக்குச் சற்றே விலகிச் செல்ல வேண்டி யிருக்கிறது.

இந்தச் சரிதத்தில் ஈசுவரனும், அம்பிகையும் தனித் தனித் தேரில்தான் புறப்படுகிறார்கள். 'நரேன் சிவன்; நான் சக்தி' என்று பரமஹம்ஸ தேவர் கூறியிருப்பதை நினைவு கூர்ந்தால் ஈசுவரன்-அம்பிகை என்ற உவமை பொருத்தமாகவே தோன்றும். முதலில் ஈசுவரனுடைய தேரை இழுத்து வந்து ஒரு கட்டத்தில் நிறுத்தினோம். பிறகு தேவியின் தேரையே நீண்ட நாட்களாக இழுத்து வருகிறோம். இனி அன்னை — ஐயன் இருவரையும் ஒரே ரதத்தில் ஆரோகணிக்கச் செய்ய வேண்டும். அப்படிச் சிறிது தூரம் சரித்திரம் நகர வேண்டும். பிறகு சக்தி மறைந்து விடுவாள். எங்கே? சிவத்துக்குள்தான். அப்புறம் இது சிவத்தின் சரித்திரமாகவே — அதனில் உள்ளடக்கிய சக்தியின் பிரபாவம் ஆங்காங்கு வெளிப்படும் வகையில்—நகர்ந்து செல்லும்.

இந்த ரதோத்ஸவத்திலும் பரிவார தெய்வங்கள் உண்டு. குருமஹராஜுடைய சிஷ்யர்களைப் பற்றியெல்லாம் சிறிதேனும் கூறாவிடில் சரித்திரம் முழுமை பெற்றதாகாது. ஆனால் சிவபெருமான் தொலைவில் வரும்போது தேவி தனது பக்தர்களை யெல்லாம் மறந்து, தன்னை வணங்கும் அவர்களது முடிகளில் இடறிக் கொண்டு அவனை வரவேற்கச் செல்வது போல், நரேந்திரர் பிரவேசித்த பின் ராமகிருஷ்ணர் அவரையே மையமாகக் கொண்டு வாழ்ந்ததாக இங்கு சித்திரிக்க விரும்புகிறோம். எனவே, இந்த நூலின் உச்ச கட்டமாகிய (climax) ராமகிருஷ்ணர்-நரேந்திரர் சந்திப்பு நிகழ்ந்த பின் இருவரும் ஆரோகணித்த அந்த ரதத்தை இழுப்பதிலேயே முழு கவனத்



ரா. கணபதி

தையும் செலுத்த விரும்புகிறோம். அந்தச் சந்திப்பு நிகழுவதற்குள் பரிவார தெய்வங்களின் சிறிய ரதங்களை யெல்லாம் ஒரே மூச்சில் இழுத்து வந்து நிலையில் சேர்த்து விடலாமே!

அம்பிகைக்கு கணேசன் போல் தான் ஸ்ரீ ராமகிருஷ்ணருக்குப் பிரம்மாநந்த ஸ்வாமி. பிரம்மாநந்தர் என்பது பிற்காலத்தில் அவர் தரித்த துறவு நாமம். துறக்கு முன் அந்தப் பிள்ளையின் பேர் ராகால் சந்திரர் என்பது. ஜமீந்தார் ஒருவரின் மகன் அவர். ''அந்த ஜமீந்தாரிடம் எவ்வளவு செல்வம் இருந்ததோ அவ்வளவு கஞ்சத்தனமும் இருந்தது'' என்று ராமகிருஷ்ணர் வேடிக்கையாக மொழிவார். ராமகிருஷ்ணரிடம் ஈடுபாடு கொண்டிருந்த மனோமோகன் என்பவருடைய தங்கையை ராகாலுக்கு விவாகம் செய்திருந்தார்கள். பேருக்குத்தான் விவாகம். இருவரும் பிள்ளைப் பருவத்தினர். குழந்தைகளாகவே வாழ்ந்தனர். ஆனால் ராகால் சாமானியக் குழந்தையாக வாழ்வது தெய்வ சங்கல்பத்தில் இல்லை. ராமகிருஷ்ணரின் குழந்தையாகவே அவர் வாழ வேண்டும் என்று இருந்தது.

ஒரு நாள் ராமகிருஷ்ணர் தியானத்தில் இருந்த போது தேவி திடுமென ஒரு பிள்ளையுடன் தோன்றி அவனை ராமகிருஷ்ணரின் மடியில் இருத்தினாள். ''இவன் உன் பிள்ளை'' என்றாள்.

ராமகிருஷ்ணருக்கு உடல் விலவிலத்து விட்டது. ''பிள்ளையா? எனக்கா...?' என்று திக்கினார். அவரால் அந்த எண்ணத்தையே தாங்க முடிய வில்லை.

''பயப்படாதே! பிள்ளை என்றால் ஞான புத்திரன்'' என்று கூறி அன்னை மறைந்தாள் அந்தக் குழந்தையோடு.

ராமகிருஷ்ணரைத் தரிசிப்பதற்காக ராகால் முதன் முறையாக வந்தவுடனேயே அவருக்குப் புரிந்து விட்டது— இவன்தான் தமது பிள்ளை என்று. அதனிலும் அதிசயமாக ராகாலுக்கும் புரிந்து விட்டது — இவர்தான் தனது தாய் என்று. பச்சைக் குழந்தையாகவே மாறி விட்டான் அவன். நேரே வந்து ராமகிருஷ்ணரின் மடியிலேயே அமர்ந்து கொண்டான்.

இதைப் போல் அன்பைக் கொட்டும் சம்பவங்கள்தான் ராமகிருஷ்ணரின் வாழ்க்கையில் எவ்வளவு நடந்திருக்கின்றன? அவருடைய இதயத்தைப் புரிந்து கொண்டு, அன்பு தவிர வேறெதற்கும் கட்டுப்படாமல் அவரது சீடர்கள் நடந்து கொண்டது போல் வேறெந்த ஆசாரியரின் வரலாற்றிலும் காண முடியாது. ஆனபடியால் இது புதுமையாகக் கூடத் தோன்றும்.

தாயிடம் சேர்ந்த குழந்தை அப்புறம் யாரைப் பற்றி நினைக்கும்? ராகால் தன் வீட்டைப் பற்றியே நினைப்பதில்லை. 'ராமகிருஷ்ணருடனேயே இருப்பேன்' என்று பிடிவாதம் பிடித்தான். அவருடனேயே வாழ்ந்தான் — அன்புப் புதல்வனாக.

ராகாலின் தந்தைக்கு இதில் விருப்பமில்லை. தம்மை விட்டு மகன் இருக்கிறானே என்பதைவிட ஏழைப் பக்கிரி ஒருவருடன் அவன் இருக்கிறானே என்பதில் அந்தச் செல்வந்தருக்கு அதிகக் குறை. ராமகிருஷ்ணரை நாடிப் பல தனவந்தர்களும் வருவதைக் கண்ட பின்தான் தமது மகன் அங்கு இருப்பதில் கௌரவக் குறைவில்லை என்று அவர் எண்ணத் தொடங்கினாராம்!

ராகாலின் வேட்டகத்தினர் ராமகிருஷ்ணரிடம் உண்மையான பக்தி கொண்டிருந்ததால் அவன் தக்ஷிணேசுவரத்திலேயே காலம் கழிப்பதற்குக் குந்தகமாயிருக்க வில்லை. ஆனால் அவர்கள் தங்கள் வீட்டு மாப்பிள்ளை அந்த உறவையே முறித்து — எல்லா உறவுகளையுமே முறித்து — சந்நியாசியாகப் போகிறான் என்று அப்போது எண்ணியிருப்பார்களா? ராமகிருஷ்ணரோ இப்படி ஒரு சந்நியாச பரம்பரையை உண்டாக்கத்தான் திருவுள்ளம் கொண்டிருந்தார். 'பட்சி கொத்தாத பழம்தான் பகவானுக்குப் படைக்க மிகவும் ஏற்றது. புலனின்பம் தீண்டாத பிள்ளைகள்தான் தமது அநுபவத்தை உலகுக்குப் படைக்க வேண்டியவர்கள்!' என்று அவர் கருதியிருந்தார். மாதுரிய ரஸம் அடர்ந்து நிறைந்த ராகாலை அவர் விடுவாரா என்ன ?

காலக்கிரமத்தில் ராகாலின் மனைவி என்ன செய்வாளோ என்ற ஐயம் ராமகிருஷ்ணருக்கு எழுந்தது. அவளைத் தம்மிடம் அழைத்து வரச் செய்தார். அந்தப் பெண்ணையே கூர்ந்து கவனித்தார். உடலைத் துளைத்துக் கொண்டு உள்ளத்தைப் பார்க்கவும் ராமகிருஷ்ணர் ஆற்றல் பெற்றிருந்தவர் அல்லவா? ராகாலின் இளம் மனைவியைக் கண்டவுடன் அவரது ஐயங்கள் விலகின. இவள் ஒரு போதும் அவனது ஆத்ம முன்னேற்றத்துக்கு இடையூறாக இருக்கமாட்டாள் எனத் தெளிந்தார்.

''குழந்தே! எங்கே, உன் முக்காட்டைக் கொஞ்சம் இழுத்து மூடிக் கொள்! உன் மாமியாரை வந்து பார்க்கச் சொல்கிறேன்'' என்றார்.

# பாமாலிவ் லவண்டர்

## வசீகரிக்கும் நறுமணம்....

## பெருமிதத்தையும், அழகையும் அளிக்கிறது!




வசீகரம்...பாமாலிவ் லவண்டர் டால்கம்
பெருமிதத்திற்கும், அழகிற்கும் உற்ற நண்பன்.
சிறிது பாமாலிவ் லவண்டரை உங்கள் உடம்பின்மேல்
தூவிக்கொண்டால், அதன் இனிய நறுமணம்
உங்களைச் சூழ்ந்து நிற்பதை உணர்வீர்கள். பாமாலிவ்
உபயோகித்து எப்பொழுதும் புத்துணர்ச்சியுடனும்,
நறுமணத்துடனும், அழகுடனும் விளங்குங்கள்.




பாமாலிவ் டீலக்ஸ்—மயக்கும்
17 ஸென்டுகளின் அற்புதமான கலவை!

PT-5-6.TAM.

# உங்கள் கேசம் உதிருகிறதா?

## இந்த மாதிரி அபாயக் குறிகள் அதை அறிவிக்கின்றன.



**கேசம் உதிருதல்**

உங்கள் ரோமம் உதிருகிறது, ஏனெனில், ரோமக்கால்களுக்குப் போதிய ஊட்டமில்லாததுதான்



**இளமையில் வழுக்கை**

இந்நிலையை நீங்கள் அநேகமாகத் தவிர்த்திருக்கக்கூடும்

பொடுகு, ரோமம் உதிருதல் மற்றும் கேசம் குறைதல் முதலிய உபாதைகளால் நீங்கள் சிரமப்பட்டால் இன்றே ப்யூர் சில்விக்ரீன் உபயோகிக்கத் தொடங்குங்கள். ப்யூர் சில்விக்ரீனில் உங்கள் ரோமத்தின் வளர்ச்சிக்குத் தேவையான எல்லா பதினெட்டு 'அமினோ ஆஸிட்'களும் தீவிரமான வகையிலிருக்கின்றன. தலையில் நன்றாக அழுத்தித் தேய்ப்பதன் மூலம் ப்யூர் சில்விக்ரீன் ரோமக்கால்களில் புகுந்து அவைகளுக்குத் தேவையான இயற்கையான ஊட்டத்தையளித்து, கேசத்தை மறுபடியும் ஆரோக்கியமாக இருக்கச் செய்கிறது.

'ஆல் எபௌட் ஹெயர்' (All About Hair) என்ற, படங்கள் கொண்ட, இலவசப் புத்தகத்தை நீங்கள் பெற விரும்பினால் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்: டிபார்ட்மென்ட் K-2 சில்விக்ரீன் அட்வைஸரி சர்வீஸ், பீசாம் (இந்தியா) பிரை. லிட்., பீசாம் ஹவுஸ், மாஹிம், பம்பாய்—16.

# Silvikrin

**சில்விக்ரீன்—கேச ஆரோக்கியத்துக்கான வழி**




**ப்யூர் சில்விக்ரீன்**

கேசம் சம்பந்தமான உபாதைகளுக்குக் குணமளிக்கும் ஓர் மிகத் தீவிரமான தயாரிப்பு. ஒரு மாத கால வைத்தியத்துக்குப் போதுமானது.

**சில்விக்ரீன் ஹேர் டிரெஸிங்**




உங்கள் கேசத்தை நாள் பூராவுக்கும் நன்கு சீவியபடி வைக்கிறது. பொடுகு ஏற்படாமல் தடுப்பதற்குப் போதுமான ப்யூர் சில்விக்ரீன் கலந்துள்ளது.

SP/1JP/7/63

பிறகு அருகில் இருந்தவர்களிடம், ''நஹபத்துக்குப் போய் சாரதையை ஒரு ரூபாய் பணத்தோடு வரச் சொல்லுங்கள்'' என்றார்.

நஹபத் என்ற சங்கீத மண்டபத்தில் தான் சாரதை வசித்து வந்தாள்.

சாரதை வந்தாள். ஒரு ரூபாய்ப் பணத்தை ராகாலின் பிஞ்சு மனைவியிடம் கொடுத்தாள். அவளுடைய முக மூடியை மிருதுவாக விலக்கினாள்; அவளுடைய முகத்தை பாசத்துடன் நோக்கி முத்தமிட்டாள். ''என் மகளே, என்னுடைய வாழ்வையேதான் நீயும் வாழப் போகிறாய்'' என்று அவளுடைய உள்ளுணர்ச்சி ஆர்ப்பரித்தது.

முதன் முதலில் மாமியாரும் மாற்றுப் பெண்ணும் பார்த்துக் கொள்ளும்போது முன்னவள் பின்னவளுக்குப் பரிசுப் பொருள் தந்து முகமூடியை விலக்கி முத்தமிடுவது வங்காளத்தின் இனிய வழக்கம்.

இங்கே அப்பா ராமகிருஷ்ணரும் பிள்ளை ராகாலும்; அங்கே மாமியாரும் மாற்றுப் பெண்ணும் — தாய்மையை உருவகப்படுத்திப் பார்க்க இந்தக் காட்சியை விட வேறெது உண்டு?

**ரா**கால் எப்போதேனும் வீட்டுக்குச் சென்று விட்டாலும் அவனைக் காணாமல் தவிப்பார் பாசம் எல்லாம் கலந்த ராமகிருஷ்ணர். வெண்ணெயும் பாசந்தியும் வைத்துக் கொண்டு அம்மாவாக அவனுக்குக் காத்திருப்பார். அவன் வந்தவுடன் தாமே அவனுக்கு அவற்றை ஊட்டுவார்.

முன்பு தெய்வத்திடம் கொண்டாடிய உறவுகளையெல்லாம் இனி மனிதர்களிடமும் கொண்டாடப் போகிறார் ராமகிருஷ்ணர். ஏனெனில், அத்வைத முதிர்ச்சியில் மனிதர்களையே தெய்வமாகக் காணத் தொடங்கி விட்டார் அல்லவா?

குழந்தைத்தனமான சகல குணங்களும் ராகாலிடம் படியலாயின. 'அம்மா தன்னையேதான் கவனித்துக் கொள்ள வேண்டும்' என்று குழந்தை எண்ணுவதுண்டல்லவா? வேறு யாராவது விளையாட்டாக அவளிடம் சென்று, 'இது என் அம்மாதான்' என்றால்கூடப் பொறுக்க முடியாமல் கோபம் கொள்வதுண்டல்லவா? ராகாலும் இப்படி மாறத் தொடங்கினான். ராமகிருஷ்ணரின் அருளுக்கு வேறு யாரும் உரிமை கோரக் கூடாது என்று கருதலானான்.

''தாயே, இப்படிச் சோதிக்கிறாயே! அன்பும் அருளையும் எங்கேனும் ஒன்று சேர்த்திருக்க முடியுமா? இந்தச் சின்னவனை ஏன் இப்படிச் செய்தாய்?'' என்று ராமகிருஷ்ணர் தேவியிடம் நொந்து கொள்ள வேண்டியதாயிற்று.

ராகாலுக்கு ஒரு தலைவலி ஜுரம் என்றால்கூட ராமகிருஷ்ணர் கலங்கிவிடுவார். ''நான் ராகாலைப் பற்றிக் குறை சொன்னேனே என்று அவனை என்னிடமிருந்து நிரந்தரமாகப் பிரித்து விடப் போகிறாயோ? வேண்டாமடி அன்னாய்!'' என்று அரற்றுவார்.

ராமகிருஷ்ணரை வந்தடைந்த மூன்றாண்டுகளுக்குப் பின் ராகால் பிருந்தாவனத்துக்கு யாத்திரை சென்று காய்ச்சலில் விழுந்தான். அப்போது ராமகிருஷ்ணர் அலமந்து போய் விட்டார்.

''ராகால் என்றால் என்ன தெரியுமோ? ஆயன் என்று பொருள். ராகால் பூர்வ ஜன்மத்தில் ஐயனுடன் பிருந்தாவனத்தில் மாடு மேய்த்த ஓர் ஆயன். இப்போது பிருந்தாவனத்திலேயே....'' என்று பேச இயலாமல் திணறினார்.

கயைக்குச் சென்றால் தாம் கதாதரனுடன் ஒன்றி விடக் கூடும் என்று நம்பியவரல்லவா ராமகிருஷ்ணர்? அதே போலத்தான் ராகால் விஷயமாகவும் பயப்பட்டார். அபய ரூபிணியாகிய அன்னை பயத்தை நீக்கினாள். ராகாலைக் குறித்து ராமகிருஷ்ணருக்குப் பல உண்மைகளைத் தெரிவித்தாள்.

''அவற்றையெல்லாம் நான் வெளியிடுவதற்கில்லை. ராகாலுக்குத் தான் யார் என்று தெரிந்து விட்டால் இந்தப் பூவுலகில் அவனால் தரித்திருக்க முடியாது'' என்பார் ராமகிருஷ்ணர்.

இதனாலேயே ஸ்வாமி பிரம்மானந்தர் என்ற அற்புத காவியத்தின் பல பகுதிகள் இன்னும் ஒலியிலும், சந்தத்திலும் வராத ரகசியக் கவிதையாகவே உள்ளது.

நெகிழ்ச்சியும், மென்மையும் பொருந்திய ராகாலை பக்தி மார்க்கத்தில் பயிற்றுவித்தார் ராமகிருஷ்ணர். ராகால் ராமகிருஷ்ணரை அடைந்த மூன்று அல்லது நான்கு மாதங்களுக்குப் பின் தக்ஷிணேசுவரம் வந்து சேர்ந்த நரேந்திரர் ராகாலை நிர்க்குண உபாஸனைக்குத் திருப்ப முயன்று ராமகிருஷ்ணரின் கண்டனத்தைப் பெற்றார். 'அவரவர் தம் தமதறிவறி வகை வகை' அவரவரை உருவாக்கியதே ராமகிருஷ்ணரின் பெருமை. பக்தியின் மூலமே பிரம்ம ஞானத்தைப் பெற்ற ராகால் பிற்காலத்தில் பிரம்மானந்தர் என்ற பெயருக்கு ஏற்பப் பரம்பொருளிலேயே திளைத்திருந்தார். ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தை ஸ்தாபித்த ஸ்வாமி விவேகானந்தர் பிரம்மானந்தரையே அதன் முதல் தலைவராக்கித்

தாம் ஒதுங்கி நின்றார் என்பதிலிருந்தே ராகாலின் பெருமை — ஏன், விவேகானந்தரின் பெருமையுமே — தெரிகிறதல்லவா ?

ராகால் கண்ணனின் தோழனாயிருந்தவர் என்றார் ராமகிருஷ்ணர். ராமகிருஷ்ணரைக் கண்ணனாகவே கண்டு களித்துருகிப் பக்தி செய்த ஒரு பெண்மணியின் சரிதத்தை இங்கு கூறி விடுவது பொருத்தமாயிருக்கும்.

பாலப் பருவத்திலேயே கணவனை இழந்த அகோரமணி கோபாலனிடம் சரணம் புகுந்தாள். தக்ஷிணேசுவரத்திலிருந்து இரண்டு மைல் தொலைவில் உள்ள கமார்ஹாதியில் கங்கைக் கரையிலமைந்த கோவிந்தனின் மந்திரத்திலேயே ஜபமும், தியானமும், பாராயணமும், பூஜையுமாகக் காலம் கழித்து வந்தாள். பூணூல் நூற்று அதிலேயே ஜீவனோபாயம் கண்டாள் அவள். அவளுடைய மடி ஆசாரம் சொல்லி முடியாது. 'உப்பைக் கூடக் கழுவி உபயோகிப்பாள்' என்று வேடிக்கையாகக் குறிப்பிடுகிறார் ஸ்வாமி சாரதானந்தர். ஆனால் மடி ஆசாரம் எதுவும் தெரியாத கோகுலத்துப் பிள்ளையிடம் — யக்ஞம் நடக்குமுன் தனக்கும் தன் சகாக்களுக்கும் 'சமாராதனை' செய்ய வேண்டும் என்று பிடிவாதம் பிடித்த போக்கிரியிடம் — இந்த ஆசாரக்காரிக்கு எப்படியோ பாசம் வளர்ந்து கொண்டேயிருந்தது. அவனுடைய தரிசனத்துக்காக ஏங்கித் தவித்துத் தவமியற்றலானாள். தவத்தின் பயனைத் தனது அறுபதாவது வயசில் தக்ஷிணேசுவரத்துக்கு வந்து சேர்ந்தாள்.

தாங்கள் இருவரும் ஒரே இனத்தைச் சேர்ந்தவர்கள் என்று ராமகிருஷ்ணர் அகோரமணியைக் கண்டவுடனேயே உணர்ந்தார்.

ராமகிருஷ்ணரைத் தரிசித்துக் கமார்ஹாதிக்குத் திரும்பிய பின் ஒரு நாள் காலை மூன்று மணிக்கே விழிப்புற்ற அகோரமணி ஜபம் புரிந்து விட்டு பிராணாயாமம் தொடங்கினாள்.

தான் பிராணாயாமம் புரிவதை யாரோ கவனிப்பது போன்ற உணர்ச்சி - வெகு அருகில் அமர்ந்து கவனிப்பது போன்ற உணர்ச்சி — அகோரமணிக்கு ஏற்பட்டது. திரும்பிப் பார்த்தாள். தனது இடது புறத்தில் ராமகிருஷ்ணர் அமர்ந்திருப்பதைக் கண்டதும் அவளுக்குப் பேராச்சரியமாயிற்று. எதையோ வைத்துக் கொண்டிருப்பது போல் அவரது வலக் கைபாதி மூடியிருந்தது.

அகோரமணிக்கு 'நீதான் எனக்குக் கதி' என்று அவரது இரண்டு கைகளையும் பிடித்துக் கொண்டு கதற வேண்டும் போல் இருந்தது. அவரது வலது கையில் ஏதோ இருப்பது போல் தோன்றியதால் இடது கரத்தை மட்டும் பற்றிக் கொண்டாள் அந்த மூதாட்டி.

இதென்ன விந்தை? 'அன்பெனும் பிடிக்குள் அகப்படும் மலை'யாகிய அவர் ஏன் அகோரமணியின் பிடியில் சிக்காமல் நழுவுகிறார்? நழுவுவதா? அப்படியே கரைந்து அல்லவா போய் விட்டார்!

அவர் இருந்த இடத்தில் இப்போது... தான் காண்பது கனவில்லையே!

அகோரமணி கண்களைக் கசக்கிக் கொண்டு பார்த்தாள்.

பெருகும் தன் கண்ணீரை வழித்து விட்டுக் கொண்டு பார்த்தாள்.

தாபிஞ்ச மலர் போன்ற குளிர்ந்த கரு நிறத்துக் கோபாலனே தான் அங்கு காண்கிறான்!

தவழுகிற நிலையில், மொழு மொழுவென்ற இடது கையைத் தரையில் ஊன்றிக் கொண்டு, வலது கரத்தைத் தூக்கி 'தா' என்ற பாவனையில் மெத்து மெத்தென்றிருக்கும் தனது உள்ளங் கையை நீட்டுகிறான். சற்று முன் ராமகிருஷ்ணராக வந்த போது அந்தக் கையிலென்ன வைத்திருந்தான்? அது இப்போது எங்கே போயிற்று? இப்படி ஒரு தரிசனம் காண்பதற்கான அநுக்கிரகத்தைத் தான் அப்போது கையில் மூடி எடுத்து வந்தானா? இப்போது தன் உள்ளங் கையை நீட்டி பக்தனின் உள்ளத்தைத் தருமாறு கேட்கிறானா இந்தப் பால கோபாலன்?

ஏழை அகோரமணியிடம் கண்ணனுக்குத் தர வெண்ணெயோ பாலோ இருக்கவில்லை. எங்கேயோ தேடித் துழாவி ஒரு தேங்காய்க் கொப்பரையை அவனுக்குக் கொடுத்தாள். அவனுடைய இளநுங்கு வாயால் அதை மெல்ல முடியுமா?

கண்ணன் அவளிடம் இல்லாத விளையாட்டெல்லாம் விளையாடினான். மடியில் விழுந்து புரண்டான். கழுத்தைக் கட்டிக் கொண்டான். புறம் புல்கினான். அகத்தைப் புல்லரிக்கச் செய்தான். அவனைத் தூக்கி வைத்துக் கொண்டிருக்கும் உணர்விலேயே தக்ஷிணேசுவரத்துக்கு நடக்கலானாள் அகோரமணி. வரும் வழியில் வெண்ணெயும் பாலாடையும் வாங்கிக் கொண்டாள்.

'கோபாலா, கோபாலா' என்று கூவிக் கொண்டே காலை ஏழு மணி சுமாருக்கு ராமகிருஷ்ணரின் அறையில் பிர

வேசித்தாள் அகோரமணி. அவனைக் கண்டவுடன் ராமகிருஷ்ணர் கோபாலனாகவே மாறிவிட்டார். யசோதா தேவி கண்ணனுக்கு வெண்ணெய் ஊட்டுவது போல் அகோரமணி ராமகிருஷ்ணருக்கு வெண்ணெயும் பாலும் அளித்தாள்; பிறகு அறையைச் சுற்றிச் சுற்றி ஆடத் தொடங்கினாள் அந்தக் கிழவி.

கண்ணீறு கரை புரள ராமகிருஷ்ணரை நோக்கி, ''கோபாலன் இதோ என் மடியில் இருக்கிறான்; உடனே உன் உடலில் புகுந்து மறைகிறான். வா, வா! என் மகனே வா!'' என்றாள்.

கோக்கள் என்பவை இந்திரியங்கள். 'பார்ப்பார் அகத்தில் பாற்பசு ஐந்து உண்டு' என்று திருமூல நாயனார் பாடுவது இந்த கோக்களையே. இவைவெறித்துத் திரியாமல் ஞானப் பாலைப் பொழியுமாறு அடக்கிப் பாலிப்பவனையே கோபாலன் என்றும் பசுபதி என்றும் வழிபடுகிறோம். ராமகிருஷ்ணர் இப்படித்தான் அகோரமணிக்குக் கோபாலனாகஇருந்து அவளுடைய அகம் ஆனந்தப் பாலாகச் சொரியுமாறு செய்தார்.

இதிலிருந்து அகோரமணி ராமகிருஷ்ணரை கோபாலன் என்றே அழைக்கலானாள். அவளை எல்லாரும் 'கோபால மாதா' என்று அழைக்கலானார்கள்.

அன்று மாலை மங்குகிற நேரத்துக்குத்தான் அவள் கமார்ஹாதிக்குத் திரும்பினாள். ஜபம் புரியத் தொடங்கினாள். ஜபம் சாய வில்லை! யாருக்காக ஜபம் இருந்தாளோ அவனே வந்து ஜபமாலையைப் பிடித்து இழுத்தான்.

மறுமுறை கோபால மாதா தக்ஷிணேசுவரம் சென்ற போது ராமகிருஷ்ணர் அவளிடம், ''ஏன் நீ இன்னும் விழுந்து விழுந்து ஜபம் செய்கிறாய்? பெற வேண்டியதெல்லாம்தான் பெற்றாயிற்றே?'' என்றார்.

''என்ன, பெற வேண்டியதெல்லாம் பெற்றாச்சா?'' என்று குதூகலத்துடன் கேட்டாள் கோபால மாதா.

''ஆம். நீ சகலமும் அடைந்தாயிற்று. இனி மேல் நீ செய்கிற ஜப தப சாதனைகள் எல்லாம் இதற்காகத்தான்'' என்று தமது உடலைத் தொட்டுக் காட்டினார் ராமகிருஷ்ணர்.

அவரது உடலில் கோரமான புற்று நோய் தோன்றி, அவர் உடலை உருக்க வேண்டிய காலம் நெருங்கிக் கொண்டிருந்தது!

''இனி நான் செய்வதெல்லாம் உனக்கே, உனக்கே, உனக்கேதான்''

## வாய்மை

காந்திஜி சம்பாரானில் ஒருமுறை எங்களைப் பார்த்து 'நீங்கள் சம்பாரானில் உண்மையுடன் பணியாற்றுவீர்களானால் உங்களுக்கு ஒரு விதமான மூலதனத்தைத் தேடிக் கொள்வீர்கள். அதை வைத்துக் கொண்டு நீங்கள் பின்னால் நிறைய ஊதியமெடுக்க முடியும்' என்று கூறியிருந்தார். அங்கே நேர்மையுடன் வாய்மையைக் கடைப் பிடித்தே வேலை நடந்து வந்தது. இன்றுகூட என் கடந்த இருபத்தைந்து ஆண்டு வாழ்க்கையைப் பற்றி எண்ணிப் பார்க்கும்போது அங்கே தேடிக் கொண்ட மூலதனம் நாளுக்கு நாள் பெருகிவந்திருக்கிறது என்பது எனக்கு நன்கு புலப்படுகிறது. என் வாழ்க்கையில் கடமைக்கு உட்பட்டு எவரையேனும் கடுமையாக எதிர்க்க நேர்ந்தாலும் கூட அவரும் என் வார்த்தையில் நம்பிக்கை வைக்கிறார் என்றால் அது அங்கே காந்திஜி வாய்மையைப் பற்றிக் கற்றுக் கொடுத்த பாடத்தின் பலன்களில் ஒன்றுதான் என்பதை நான் உணர்ந்து பெரு மகிழ்ச்சி அடைகிறேன்.

—ராஜன் பாபு

என்று ஆவேசமாக மொழிந்தாள் கோபால மாதா.

ஏனோ அதன்பின் அவளது ஜபம், தியானம் முதலியன குறைந்து விட்டன? தனது ஜபமாலையையே கங்கைக்கு இட்டு விட்டாள் அவள். ராமகிருஷ்ணரது அவதாரம் முடிவதைத் தடுக்க அவளது உள்ளுணர்ச்சி அவளை அனுமதிக்கவில்லை போலும்!

அநுஷ்டானங்களோடு அவளது ஆசாரமும் குறையலாயிற்று. யார் பார்த்தும் உண்ணாத அவள் இப்போது ராமகிருஷ்ணர் அளித்ததையெல்லாம் உண்ணத் தொடங்கினாள். அவரும் தமக்குக் காணிக்கையாக வரும் பக்ஷ்யங்களையெல்லாம் அவளுக்காக வைத்திருந்து அளித்தார்.

அவளைத் தொட்டுக் காட்டி, ''இந்தக் கூண்டு ஹரியால் நிரம்பியிருக்கிறது. எனவே இவள் உண்பது கோபாலனே உண்பதாகும்'' என்பார்.

''எனக்கு ஏன் இப்படி எப்போது பார்த்தாலும் ஆகாரம் கொடுத்துக்

# மங்கலாயிருப்பதை பளபளப்பாக்க
# கார்டினல் பாலிஷ்

உங்கள் வீட்டுத்தரைகள் மங்கலாகவும் அசுத்தமாகவும் இருக்கின்றனவா? அவற்றிற்கு ரெட் கார்டினல் பாலிஷ் மூலம் உயிர் கொடுத்து ஒளி பெறச் செய்யுங்கள். ரெட் கார்டினல் பாலிஷ் உடனே தரைகளுக்கு செந்நிற ஒளி கொடுத்து பிரகாசிக்கச் செய்கிறது. சாதாரணமினுமினுப்பற்ற கல் தரையிலும் சிமிட்டித் தரையிலும் பரீட்சை செய்து பாருங்கள். ரெட் கார்டினல் பாலிஷ் சீக்கிரத்திலேயே மங்கலான தரைகளைப் புதியதோர் செந்நிற ஒளியுடன் பிரகாசிக்கும்படியாகச் செய்துவிடும்.

உங்கள் வீட்டுத்தரைகள் உயிருடன் கூடிய ஒளிபெற இன்றே ரெட் கார்டினல் பாலிஷை உபயோகியுங்கள்.

அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட் (இங்கிலாந்தில் ஸ்தாபிக்கப்பட்டது)






கொண்டே யிருக்கிறாய்?'' என்று ஒரு நாள் கோபால மாதா வெட்கத்துடன் கேட்டாள்.

''ஏனென்றால், முன்பு நீ எனக்கு தினுசு தினுசாகப் படைத்திருக்கிறாய்!''

''முன்பா? முன்பு எப்போது?''

''பூர்வ ஜன்மத்தில்.''

''இருந்தாலும் இவ்வளவு கற்கண்டை எனக்குக் கொடுத்திருக்கிறாயே! எதற்காக?''

''முதலில் நீ பாகாக இருந்தாய். பிறகு வெல்லமானாய். இப்போதுதான் கற்கண்டாகி யிருக்கிறாய். அதனால் இவ்வளவு கற்கண்டைத் தந்திருக்கிறேன்.''

'கனி பலித்த ஆனந்தக் கட்டி' என்று ஆப்தர் வாக்கும் இருக்கிறதே!

கோபால மாதாவைக் கண்டு பலர் எளிமை நிறைந்த பக்தியில் ஈடுபட வேண்டும்; இதற்காகவே அவள் நீண்ட காலம் உயிர் வாழ வேண்டும் என்று ராமகிருஷ்ணர் விரும்பினார் போலும். எனவே அவளது கோபால தரிசனம் தீவிரமா யிருந்தால் அவளால் அதிக காலம் மண்ணுலகில் வாழ இயலாது என்று கூறி அவற்றை லேசாக்கி விட்டார்.

எழுத்தறிவற்றவளாக எளிமையும், நம்பிக்கையுமே உருவாக ராமகிருஷ்ணரை வந்தடைந்தவள் கோபாலமாதா. மெத்த படித்தவராகச் சிக்கலான பல சிந்தனைகளும் அவநம்பிக்கையுமாக ராமகிருஷ்ணரை வந்தடைந்தவர் நரேந்திர நாதர். ராமகிருஷ்ணர் இருவரையும் சந்திக்கச் செய்தார்.

''அம்மா, உன் அநுபவங்களை யெல்லாம் என் நரேனுக்குச் சொல்லு....'' என்று கூறித் தாமும் பூரிப்புடன் அவள் கூறுவதைக் கேட்கலானார்.

கோபால தரிசனத்தை அவள் நாத் தழு தழுக்க வர்ணிக்கலானாள். பாஞ்ச ஜன்யத்தைப் பிடித்த அவனது கையைப் பஞ்சையாகிய தன்னிடம் நீட்டி வெண்ணெய் யாசித்ததைச் சொன்னாள். மூவுலகம் அளந்த பாதங்கள் சின்னஞ் சிறியனவாக, செவ்விய காசிப் பட்டால் மூடிய ரோஜா மலர் போன்ற அந்தப் பாதங்களைத் தன் உடலில் அவன் பதித்ததைச் சொன்னாள். தேவாதி தேவர் அவனது ஏவலுக்குக் காத்திருக்கும் போது, அவன் தன் சமையலுக்குச் சுள்ளிகள் பொறுக்கித் தந்ததைச் சொன்னாள்.

நரேந்திரரை நோக்கி, ''அப்பனே! நீ ரொம்ப ரொம்பப் படித்தவன். புத்திசாலி. எனக்குப் படிப்பேது, புத்தியேது? நான் கண்டவை உண்மை தானே?'' என்றாள் எளிமையே உருவாக.

நரேந்திரர் அப்படியே கழன்றுபோய் விட்டார்.

'' அம்மா, நீ கண்டதவ்வளவும் பரம சத்தியம்'' என்றார்.

தெய்வம் உருவெடுத்துக் கொள்வதுண்டா என்று சந்தேகித்தவர்தான் அப்படி அடித்துக் கூறினார்! சத்திய அநுபவத்தின் சக்தி அது!

ராமகிருஷ்ணர் தமது திரு உடலிலிருந்து நீங்கிய போது கோபாலமாதாவின் உள்ளம் பிளந்து போயிற்று. பிளந்த உள்ளத்தைப் பிணைக்க மீண்டும் ராமகிருஷ்ணரே வந்தார். அவரது தரிசனத்தை அவ்வப்போது பெற்று அவள் மனசு தேறி வந்தாள். அவருடைய உத்தம சிஷ்யர்கள் சந்நியாச தர்மத்தைத் தழுவியபின் அவளும் காஷாயம் உடுத்தத் தொடங்கி விட்டாள்.

மேல் நாடுகளிலெல்லாம் நரேந்திரர் வேதாந்தத்துக்கு வெற்றிப் பாவட்டா விரித்து விவேகாநந்தராகத் திரும்பிய பின் அவரை நாடிச் சில ஆங்கிலேய, அமெரிக்க சிஷ்யைகள் இந்தியாவுக்கு வந்தனர். அவர்களுக்குப் பக்தியின் உருவம் என்ன என்பதைக் காட்டுவதற்காக விவேகாநந்தர் கோபால மாதாவிடம் இட்டுச் சென்றார். அவர்களை 'மிலேச்சராக'க் காணாமல் கோபாலனாகவே கண்டாள் அந்தத் தொண்டு கிழவி. அவர்களது முகவாயைத் தூக்கி அன்புடன் முத்தமிட்டாள். அவர்களுக்கு அவலும், தேங்காயும் உண்ணக் கொடுத்தாள். அவர்களுடைய இதயத்துக்குத் தன் தரிசனங்களை உணவாகத் தந்தாள்.

நிவேதிதா என்று பெயர் பூண்ட மார்க்கரெட் நோபிள் என்ற புனித சிஷ்யை கோபாலமாதாவின் அந்திய காலத்தில் அவளைத் தன்னுடனேயே கல்கத்தாவில் வைத்துக் கொண்டாள். அவளுடைய முடிவு நெருங்கி விட்டது என்று அறிந்து அவளைக் கங்காதீரத்துக்கு எடுத்துச் செல்லும்போது, நிவேதிதை சொகுசாகப் பழகிய தனது காலில் செருப்புக் கூட அணியாமல் உடன் சென்றாள்— ஹரி நாம பஜனை செய்தவாறு.

நட்சத்திரங்கள் உதிரும் சமயத்தில், கோபால மாதாவின் உயிரும் உடலை விட்டு உதிர்ந்தது.

ராமகிருஷ்ணர் மறைந்து இருபதாண்டுகளுக்குப் பின் அகோரமணியும் அவருள் ஐக்கியமானாள். (தொடரும்)

# மிக எளிது

# உங்கள் தேவை எல்லாம் ரூ. 5/-

## நேஷனல் அண்டு கிரிண்ட்லேஸ் பாங்கில் சேமிப்புக் கணக்கு ஒன்றை

**ஆரம்பிக்க**

**1863**  **1963**

இந்திய பாங்கித் தொழிலில் 100 ஆண்டுகள்

பாங்க் கட்டணம் கிடையாது. அதோடு ஆண்டிற்கு 3 சதவீதம் வட்டியும் சம்பாதிக்கலாம்.

இன்றே அருகிலுள்ள கிளை ஆபீஸில் விசாரியுங்கள்.

**நேஷனல் அண்டு கிரிண்ட்லேஸ் பாங்க் லிமிடெட்**

(இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது. அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது) NGB/61STAM

கிளைகள்: சென்னை: 3, நார்த் பீச் ரோடு, 378, நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் ரோடு, (லாயிட்ஸ் கிளை) 6, அரமனைக்காரத் தெரு 158, மவுண்ட் ரோடு. தூத்துக்குடி: 44, பீச் ரோடு ஹைதராபாத்: அபித் ரோட்



# பட்டுப் பாவாடை

கு. வேங்கடரமணி

ஐப்பசி மாதத்தை நினைவுபடுத்துவது போலத் தூறிக் கொண்டிருந்த வானம், மேல் மூட்டத்தில் குழம்பிக் கிடந்ததில் பொழுது விடிந்து நேரம் வேகமாகக் கழிந்து கொண்டிருந்தது தெரியவே யில்லை.

சாலையிலிருந்து தெரு பிரியும் இடம். வாழ்வின் திருப்பங்களில் தெய்வத்தை நினைக்காதவர்கள், பாதையின் திருப்பத்திலாவது நினைக்கட்டும் என்ற எண்ணத்தோடுதானோ என்னவோ அங்கே ஒரு பழைய பிள்ளையார் கோவில் அமைந்திருந்தது. ஒரு சின்ன மண்டபம். அதற்குள் 'வரம் கொடுத்த விநாயகர்' கோவில் கொண்டிருந்தார். மண்டபத்தை ஒட்டிய சின்னத் தாழ்வாரம். அதில் 'பஞ்சத்துக்கு ஆண்டி'யான ஒரு கிழவன் பண்டாரமாகித் தங்கி யிருந்தான். பிள்ளையார் யாருக்கு என்ன வரம் கொடுத்துக் கொண்டிருக்கிறார் என்று பண்டாரம் ஒரு நாளும் கவனிப்பது கிடையாது. ஆனால் ஊரைச் சுற்றி வயிற்றுப் பாட்டைக் கவனித்துத் திரும்பும் பண்டாரத்துக்குக் காலை நீட்டிப் படுக்க அவர் இடம் கொடுத்திருக்கிறார்.

பண்டாரம் படுத்துக் கிடந்தபடியே உடலை வளைத்துச் சோம்பல் முறித்தான். அவன் எழுந்திருக்க இன்னும் நேரமாகவில்லை. தினம் தவறாமல் வந்து கூப்பிடும் ராசாத்தி இத்தனை நேரமாகியும் வரவில்லையே?

'அந்தப் பெண் வருமோ, வராமலே இருந்து விடுமோ? விடியும்போதே பிடிச்ச மழை இன்னமும் அழும்பு பண்ணுதே! ஒருகால் ராசாத்தி மழைக்குப் பயந்துக்கிட்டு வராமலே இருந்து விடுமோ?' பண்டாரத்தின் கவலை அவனுக்கு. ஆனால் உடனேயே, 'ராசாத்தி கண்டிப்பாய் வந்து விடுவாள்' என்று தன் கவலைக்கு அவனே ஆறுதல் சொல்லிக் கொண்டான். பண்டாரத்தின் மனத்தில் நினைவோட்டம் புரண்டு முடியவில்லை. அதற்குள் ராசாத்தியின் குரல் கேட்டது.

''தாத்தா! ஏ, தாத்தா!''

''ஆ! வந்துட்டியா ராசாத்தி?''

''மழை நிற்கிற வழியா இல்லே. உனக்கும் நேரமாயிடுச்சு. நீ இனிமேல் புறப்பட்டு ஊரைச் சுத்திப்பிட்டு வரவேணுமா? அது தான் ஓடி வந்துட்டேன்.''

''நீ நல்லா இருக்கணும் ராசாத்தி!''

பண்டாரம் எழுந்து உட்கார்ந்தான். தனக்காக மழையில் நனைந்து கொண்டு வந்திருக்கும் ராசாத்தியை மனம் நெகிழப் பார்த்தான். பிறகு மடியில் புதைந்திருந்த சில்லறை முடிச்சை அவிழ்த்து ஒரு பத்துக் காசை வெளியே எடுத்தான். ராசாத்தி அவனிடமிருந்து காசை வாங்கிக் கொண்டு, மூலையில் கவிழ்ந்திருந்த தகரக் குவளையையும் எடுத்துக் கொண்டு புறப்பட்டாள்.

''ராசாத்தி, மழை நிக்கட்டுமே!''

''பரவாயில்லே, தாத்தா! பிசு பிசுப்புத் தூற்றல்தான் போடுது. இன்னும் நேரமாயிட்டா கடையிலே டீத் தண்ணி நல்லா இருக்காது. ஒரே ஓட்டம்! இதோ போய் வாங்கிக்கிட்டு வந்துடறேன்.''

ராசாத்தி தேநீர்க் கடையை நோக்கி ஓடி விட்டாள். 'தங்கமான பெண்' என்று தனக்குள் சொல்லிக் கொண்டு அவள் செல்வதைப் பார்த்துக் கொண்டே உட்கார்ந்திருந்தான் பண்டாரம்.

கிழவன் பிச்சை எடுக்கும் பிழைப்பை ஆரம்பித்துப் பண்டாரமாகிச் சில வருஷங்களே ஆகின்றன. தனக்கு எத்தனை வயதாகிறது என்று அவனுக்கே தெரியாது.

என்றோ ஒரு நாள் வேறு போக்கிடம் இல்லாமல் அவன் இங்கே வந்து ஒதுங்கினான். வந்த வேளை இந்த இடம் அவனுக்கு ஒத்துக் கொண்டு விட்டது. மூன்று வருஷங்களாய் இங்கேயே தங்கி விட்டான். இன்னும் நாலு ஊர்களைச் சுற்றிப் பார்க்கலாம் என்ற நினைப்பை அவனுடைய மனத்தை விட்டு அழித்து விட்டாள் ராசாத்தி.

சந்தர்ப்பத்தின் நிர்ப்பந்தத்தால் ஏற்றுக் கொண்ட தொழில், கிழவனின் உடலைத் தேய்த்து விட்டது. கழியை ஊன்றிக் கொண்டுதான் அவன் பிச்சை யெடுக்கப் போகிறான். அதற்கும் காலையில் எழுந்ததும் சூடாக ஒரு குவளைத் தேநீர் அருந்தினால்தான் அவனால் வெளியே புறப்பட முடியும். அந்த உதவியைச் செய்ய ராசாத்தி வந்து வாய்த்

தான். வயதின் காரணமாகப் பண்டாரம் ராசாத்திக்குத் தாத்தாவாக மாறி விட்டான்.

பத்து வயதுக்குள்தான் இருக்கும் அந்தச் சிறுமிக்கு. காலை வேளையில் தினம் அவள் தான் வந்து பண்டாரத்தை எழுப்புவாள். பளிச்சென்ற அவளது முகத்தையும், ஆதரவான அவளுடைய குரலையும் கேட்டுச் சொக்கிப் போவான் பண்டாரம். 'நீ ராசாத்தி கணக்காத்தான் இருக்கே!' என்று சொல்லும் போது அவள் மனம் திருப்தியால் நிரம்பி வழியும். ராசாத்தி ஒரு தாயில்லாப் பெண். அவளுடைய அப்பாவுக்கு ஆலையில் வேலை; மகளிடம் இரண்டு வார்த்தைகள்கூடப் பேசத் தெரியாத முரடன் அவன். ஆனால் ராசாத்தி சமர்த்து. அவள்தான் அப்பாவுக்குச் சமையல் செய்து சோறு போடும் குடும்பச் சுமையை ஏற்றுக் கொண்டிருக்கிறாள். ஆத்திரத்தில் அப்பாவிடம் அடிபடும் போதெல்லாம் இந்தத் தாத்தாவிடம் ஓடி வந்து அழுவாள் அந்தச் சிறுமி. பண்டாரம் தனக்குத் தெரிந்ததைச் சொல்லி ஆறுதல் கூறுவான். இதுதான் அவர்களிடம் உறவு பிறந்து, வளர்ந்த கதை.

''தாத்தா!''

மீண்டும் ராசாத்தியின் குரல் ஒலித்தது. தன் நினைவுகளை உதறி விட்டு நிமிர்ந்தான் பண்டாரம்.

கிழிசல் சட்டைக்குள் மறைத்து மூடிக் கொண்டு வந்த குவளையை வெளியே எடுத்து நீட்டினாள் அவள். பண்டாரம் ஆசையோடு வாங்கி ஒவ்வொரு துளியாகச் சுவைத்துப் பருகினான் தேநீரை.

''ராசாத்தி! நீ வராமல் இருந்தால் நான் இன்னிக்கு எழுந்திருக்கவே மாட்டேன். உடம்பெல்லாம் ஒரே வலி. ராத்திரி முழுக்கக் கொட்டின மழையிலே உடம்பு குளிர்ந்து போச்சு. உன் கையாலே இந்தச் சுடு தண்ணியைக் குடிச்சப்புறம்தான் உசிரு வந்திச்சு!''

பண்டாரம் தன் தொழிலுக்குப் புறப்படத் தொடங்கினான்.

வழக்கமாக இதற்குள் ராசாத்தி வீட்டுக்கு ஓடி விடுவாள். இன்றைக்கு மட்டும் தயங்கித் தயங்கி நின்றாள். ''ஏன், தாத்தா! இன்னிக்கு எட்டு நாளில்தானே தீபாவளி?''

''ம்.... ஆமாம். அதுக்குள்ளே தீபாவளி வந்துடிச்சா? ஆமா.... கடைத் தெரு ஒரே கூட்டமா இருந்திச்சே!''

''அடுத்த வெள்ளிக்கிழமை தீபாவளியாம். பக்கத்து வீட்டு மீனாட்சி சொல்லிச்சு.''

''இருக்கும்.''

தன் வரை தீபாவளியில் அசாதாரணம் எதுவும் இல்லை — இருக்க முடியாது — என்ற நினைப்பில் சுவாரசியமில்லாமல் சொன்னான் பண்டாரம்.

''ஏன், தாத்தா, நான் பட்டுப் பாவாடை கட்டிக்கிட்டால் எப்படி இருக்கும்?''

திடீரென்று ராசாத்தியின் இந்தக் கேள்வியைக் கேட்டதும் அவன் ஒன்றும் புரியாமல் திகைத்துப் போய் அவளையே பார்த்தான்.

''ரொம்ப நல்லாத்தான் இருக்கும். ராசாத்தி, உங்கப்பா வாங்கிக் கொடுக்கிறதாகச் சொன்னாங்களா?''

''ஊஹூம்!''

சட்டென்று அவள் முகம் வாடி விட்டது. ஏமாற்றத்தில் பிறந்த ஏக்கம் அதில் நிரம்பி விட்டது. பண்டாரம் தன் உதட்டைக் கடித்துக் கொண்டான்.

''அடுத்த வீட்டு மீனாட்சிக்குத்தான் பட்டுப் பாவாடை வாங்கியிருக்காங்க. ரொம்ப நல்லா இருக்குது. நானும் அப்பாவைக் கேட்டேன். முதுகிலே நாலு அடி விழுந்திச்சு. வாயை மூடிக்கிட்டு இருந்துவிட்டேன்...''

''அப்பாருகிட்டே பணமிருந்திருக்காது.''

''இல்லே தாத்தா! மீனாட்சியோட அப்பாவும் எங்கப்பாவும் ஆலையிலே ஒன்னாகத்தான் வேலே செய்யறாங்க. தீபாவளிக்கு அவங்க பணங்கூடக் கொடுக்கிறாங்களாம். அப்பா வாங்கி எல்லாத்தையும் செலவு பண்ணியிருப்பாங்க. ம்.... ஏன் தாத்தா நான் நிலத்திலே பட்டுப் பாவாடை கட்டிக்கிட்டால் எப்படி இருக்கும் ?''

கடைசியில் தன், நினைத்துப் பார்க்க மட்டுமே முடிந்த — நிஜமாவதற்கு வழி இல்லாத, ஆசையை உதறி விட்டுப் போய் விட்டாள் ராசாத்தி.

**ப**ண்டாரம் கொஞ்ச நேரம் மௌனமாக உட்கார்ந்திருந்தான். மழை ஓய்ந்து விட்டது. ஒரு நெட்டுயிர்ப்புடன் எழுந்தான் அவன். தன்னுடைய சாமான்களையெல்லாம் திரட்டிப் பைக்குள் திணித்துக் கொண்டான்.

ஒரு கையில் ஊன்றுகோல்; இன்னொரு கையில் தகரக் குவளை; தோளில் பை.

''அம்மா, தாயே! மகராசி! ஐயா தர்மப் பிரபு!''

அவனுடைய நித்திய வீதி உலா தொடங்கி விட்டது. மழை பிடித்துக் கொண்டு விட்டது.

பஸ் நிற்குமிடத்தின் அருகில் ஒதுங்கினான் பண்டாரம்.

சிறிது நேரத்தில் பஸ் ஒன்று வந்து நின்றது. மூன்று பேர்கள் இறங்கினார்கள். ஒரு சின்னப் பெண் — அவளுடைய அப்பாவும், அம்மாவும். பண்டாரத்தின் கண்களைப் பறித்தது அந்தப் பத்து வயதுச் சிறுமியின் உருவந்தான். அந்தச் சின்னப் பெண்ணின் இடையில் 'பள பள' வென்று மின்னியது பட்டுப் பாவாடை !

பண்டாரம் சிறுமியையும் அவளுடைய பட்டுப் பாவாடையையும் வைத்த கண்களை எடுக்க முடியாமல் பார்த்துக் கொண்டேயிருந்தான். இது பச்சை நிறப் பட்டு. இதே பாவாடையை ராசாத்திக்கு உடுத்தினால் இந்த நிறமும் அவளுக்கு அழகாகத்தான் இருக்கும். அவளுக்கு என்னவோ நீலத்தில் ஆசை. அவனுடைய மன வெளியில் ராசாத்தி பட்டுப் பாவாடையை அணிந்து கொண்டு ஒய்யாரமாக நடந்தாள். அவளது சின்னஞ் சிறு விரல்கள் பட்டின் மென்மையைத் தொட்டுத் தொட்டு மகிழ்ந்தன. அவள் கண்களில் தாங்க முடியாத பெருமையின் பிரகாசம்!

நினைவு மீண்டு பண்டாரம் எதிரே பார்க்கும் போது, அங்கே யாருமே இல்லை. பகல் கனவு கலைந்துவிட்ட ஏக்கம் அவனைச் சூழ்ந்து கொள்கிறது;

# ஆக்ஸிஜனால் சுத்தம் செய்யப்பட்ட பளபளப்பு !



நீங்கள் போலிப் பற்களை அணிந்திருந்தால் 'ஸ்டெரடென்ட்' உபயோகித்து ஆக்ஸிஜனால் சுத்தம் செய்யப்பட்ட பளபளப்பைப் பெறுங்கள். அது, போலிப் பற்களை நன்றாகத்துலக்குகின்றது. 'ஸ்டெரடென்ட்' தண்ணீரில் கரைத்ததும் ஆக்ஸிஜன் கலந்த திராவகமாகி, சீக்கிரத்திலே போலிப் பற்களின் மிகச்சிறிய இடைவெளிகளுக்குள் புகுந்து உணவுப் பருக்கைகளை அப்புறப் படுத்துகிறது. பற்களில் படிந்துள்ள கறைகளையும் அழுக்குகளையும் கழுவி விடுவதுடன், தொத்து நோய் வராமலும் துர்நாற்றம் அடிக்காமலும் இருக்கச் செய்கின்றது. இதன் விளைவு, 'ஆக்ஸிஜனால்' சுத்தம் செய்யப்பட்ட பளபளப்பு-ஒளி மிகுந்த போலிப் பற்கள் !




பழைய வல்கனைட் போலிப் பற்களுக்கும் புதியதான ப்ளாஸ்டிக் வகைகளுக்கும் 'ஸ்டெரடென்ட்' சமமாகவே பயன்படுகிறது.



## ஸ்டெரடென்ட் ஆக்ஸிஜன் முறை போலிப்பல் துலக்கி

கடிதம் எழுதினால் இலவச சாம்பிள் அனுப்பப்படும்.
விலாசம் : அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட்
த.பெ. எண் 9009 கல்கத்தா-16.

அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட் (இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது)




# பிரிட்டானியா
# கோல்டன் பவ்ப்




பிரிட்டானியாவினால் பிரத்தியேகமாகத் தயாரிக்கப்பட்ட கோல்டன் பவ்ப் பிஸ்கட்டுகள், புத்தம் புதியவை, முறுகலானவை, புஷ்டிச் சத்தும் உள்ளவை. டீ அல்லது காபி அருந்தும்போது, ஜாம், வெண்ணெ, அல்லது பாற்கட்டியுடனே தின்பதற்கு மிகச் சிறந்தவை. அவற்றை பரீட்சை செய்து பாருங்கள்—வாயில் போட்டதும் கரைந்து போகின்றன. இன்றே கொஞ்சம்வாங்கி, பிரிட்டானியா கோல்டன் பவ்ப் பிஸ்கட்டுகளின் புத்தம் புதிய சுவையின்பத்தை அனுபவியுங்கள்.

## பிரிட்டானியா
## பிஸ்கட்டுகள்





'ராசாத்திக்கு அவன் அப்பன் சாதாரண சீட்டிப் பாவாடையாவது வாங்கிக் கொடுக்கப்போகிறானோ இல்லையோ? பாவம்! நல்ல நாளும் அதுவுமா அந்தப் பெண் ஏமாந்து போய் அழுதுகிட்டு நிக்கப் போகுது. ம்...'

பண்டாரத்தின் நினைவில் ராசாத்தியின் உருவம் அழிந்து, அவனுடைய சொந்தப் பேத்தியின் உருவம் வந்து நின்றது. அவள் இருந்தால்.... இப்பொழுது அவளுக்கும் ராசாத்தியின் வயதுதான் இருக்கும். ராசாத்தி மாதிரியே அவளும் 'தாத்தா, தாத்தா!' என்று வாய் நிறைய அழைப்பாள்.

ஆனால் அவள் போய் விட்டாள். குடும்பம், பந்தம் என்று கடைசியில் பண்டாரத்துக்கு மிஞ்சியிருந்த பேத்தியும் அவனை விட்டுப் போய் விட்டாள், மூன்று நாள் ஜுரத்தோடு. அதற்குப் பிறகு சொந்த ஊரோடு பிணைப்பு விட்டுப் போயிற்று அவனுக்கு. பிச்சை யெடுத்தான். கிடைத்ததைச் சாப்பிட்டான். வாழ்வதில் அவனுக்கு அக்கறை குறைந்து வந்தது.

மறுபடியும் அவனிடம் ஆசை துளிர்த்தது. பிள்ளையார் கோவில் தாழ்வாரத்தில் ஒரு நாள் ராசாத்தியைப் பார்த்ததும்.

பண்டாரத்தின் மனத்தில் மின்வெட்டுப் போல் ஓர் எண்ணம் பளிச்சிட்டது. ராசாத்திக்கு ஒரு பட்டுப் பாவாடை வாங்கிக் கொடுத்தால்? அவனால் பட்டுப் பாவாடை வாங்கிக் கொடுக்க முடியுமா? சாதாரணமாய் நீலத் துணியில் வாங்கிக் கொடுக்கலாமே? அவசரமாகத் தோளில் மாட்டியிருந்த பையை இறக்கி அதன் அடியிலிருந்து கனமான துணி முடிச்சை எடுத்தான் பண்டாரம். அதற்குள்ளிருந்த சில்லறை நாணயங்களைக் கொட்டி எண்ணினான். பிறகு மறுபடியும் பத்திரமாக முடிந்து வைத்து விட்டுச் சாலையில் இறங்கி நடந்தான். கடைத் தெருவை நோக்கி வேகமாக நடை போட்டன அவனுடைய கால்கள். பெரிய ஜவுளிக் கடைகளிலெல்லாம் கூட்டம் நிரம்பி வழிந்தது. தையல் கடைகளில் தீபாவளிக் கலகலப்பு. பண்டாரம் சின்னக் கடையொன்றில் வந்து நின்றான்.

''என்ன பண்டாரம்! என்ன பார்க்கிறே?'' என்று ஒரு குரல் அதட்டியது.

''அந்த நீலத் துணியோட விலை எப்படிங்க?''

''ஓ! நீ 'சில்க்' வாங்க வந்துட்டியா?''

''ஏன் வாங்கக் கூடாதுங்களா? பத்து வயசுப் பொண்ணுக்குப் பாவாடை தைக்கணும். மொத்தம் எத்தனை துணி வேணும்? விலை எவ்வளவு ஆகும்?'' - பண்டாரம் ஆவலோடு, பெரிய காரியத்தைத் தன் வாழ்நாளிலேயே முதல் தடவையாகச் செய்யத் துணியும் படபடப்போடு கேட்டான்; கடைச் சிப்பந்தி கணக்குப் போட்டு ஒரு தொகையைச் சொன்னான். அதைக் கேட்டதும் பண்டாரத்தின் நாடி தளர்ந்து விட்டது. அவனிடம் கிட்டத்தட்ட அதில் பாதிப் பணம் தானிருக்கிறது.

''சரி, அப்புறமா வரேன்'' என்று சொல்லி விட்டு நகர்ந்தான் அவன்.

நாட்கள் ஒவ்வொன்றும் சோதனையுடன் வந்து போயின.

அன்று காலையில் வெளியே புறப்படும் வேளையில் பண்டாரம் தன் கையிருப்பைக் கணக்கெடுத்தான். அவனால் தன் கண்களையே நம்ப முடியவில்லை. மறுபடியும் சில்லறை நாணயங்களை மிக நிதானமாக எண்ணினான். கடைக்காரன் சொன்ன துணியின் விலை, அதைத் தைப்பதற்கான கூலி எல்லாவற்றையும் சேர்த்துக் கணக்குப் போட்டுப் பார்த்தான். வித்தியாசம் மிகக் குறைவாகவே இருந்தது. இன்னமும் ஒரு ரூபாய் இருந்தால் போதும். அவன் தன் ஆசையை நிறைவேற்றி விடுவான்.

'எப்படியும் இன்னிப் பொழுதுக்குள்ளே சம்பாதிச்சுப்பிடலாம்.' அவனுக்குள் பெருகிய

## அவனே அமரன்!

தமிழழகன்

அண்ணல் வந்தான்;
கண்ணைத் தந்தான்;

அடிமைத் தனமற்றோம்; — புதுக்
குடிமைத் தனம் பெற்றோம்!

வள்ளல் வந்தான்;
கொள்ளத் தந்தான்;

வாழும் துணிவுற்றோம்; — நம்மைச்
சூழும் பிணியற்றோம்!

செம்மல் வந்தான்;
தம்மைத் தந்தான்;

செய்யும் கடனுற்றோம்; — நாமே
உய்யும் படி பெற்றோம்!

ஐயன் வந்தான்;
வையம் தந்தான்;

ஆண்மைத் திறமுற்றோம்; — புக
மேன்மை வரம் பெற்றோம்!

காந்தி என்றால்
சாந்தி என்றும்;

காலம் மறவாதே; — அவன்
கோலம் இறவாதே!

தைரியம் பேசிற்று: பொழுது சாய்வதற்குள் அவன் தன் கணக்கைச் சரிக்கட்டி விட்டான்.

ராசாத்திக்குப் பாவாடை தைப்பதற்கான பணம் இதோ அவன் கையில் இருக்கிறது. ஆனால் —

கடைசியாக ஒரு தையற் கடைக்குச் சென்று தையற் கூலி எவ்வளவு என்று விசாரித்துக் கொண்டு விடலாம் என்ற எண்ணத்தோடு நுழைந்தவன், அங்கே கிடைத்த பதிலைக் கேட்டுத் திடுக்கிட்டுப் போனான். இன்னும் ஒரு வாரத்துக்கு எந்தத் துணியும் வாங்கிக் கொள்ள முடியாது என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டார் தையற் கடைக்காரர்.

ஊரில் ஓர் இடம் பாக்கி யில்லாமல் விசாரித்து விட்டான் பண்டாரம். எங்கும் மலை மலையாகத் துணிகள் குவிந்திருந்தன. அடுத்த படியாகத் தயாராக வைத்திருக்கும் துணிக் கடைகளையும் புகுந்து பார்த்து விட்டான். எங்கும் மலை மலையாகத் துணிகள் குவிந்திருந்தன. ஊஹூம்! ராசாத்திக்கு ஏற்றதாகப் பாவாடை எங்குமே கிடைக்கவில்லை. பண்டாரம் மனம் ஒய்ந்து போய் விட்டான்.

மறு நாள் — தீபாவளிக்கு முதல் நாள்.

காலையில் எழுந்திருக்கும் போதே அசதி உடலை அழுத்திற்று. தினம் போல் ராசாத்தி வந்து எழுப்பினாள். சூடான தேநீர் வாங்கிக் கொண்டு வந்தான். அவளுடைய சோகம் நிறைந்த முகத்தைப் பார்த்தபடியே சிந்தனையில் ஆழ்ந்து போனான் பண்டாரம். ராசாத்தி வீட்டுக்குப் போய் விட்டாள்.

நடுப் பகல் கழிந்தது: கடைத் தெருக் கோடியில் இருக்கும் தையல் கடைக்குப் போய் மறுபடியும் கெஞ்சிப் பார்க்கலாம் என்ற நினைப்போடு அவன் நடந்தான்.

கடை வாயிலை அவன் அடைந்த போது எதிரே தைத்து முடித்து, கம்பியில் தொங்கிக் கொண்டிருந்த புதுப் பாவாடை ஒன்று அவனை வரவேற்றது! நீல நிறப் பட்டுப் பாவாடை! ராசாத்திக்குக் கச்சிதமாக இருக்கும். பண்டாரம்தான் வந்த காரியத்தை மறந்து அதையே பார்த்துக் கொண்டு நின்றான். யாரோ தன்னுடைய செல்வக் குழந்தைக்காகத் தைத்திருக்கிறார்கள்.

சில நிமிஷங்கள் கழிந்திருக்கும். ஒருவர் அவசரமாக வந்து கடைக்குள் நுழைந்தார். அவருடைய பார்வையும் அதே பாவாடை மீது தாவிற்று.

பண்டாரம் பார்த்துக் கொண்டே யிருந்தான். பையன் ஒருவன் ஓடி வந்து பாவாடையை எடுத்து மடித்துக் கட்டினான். வந்தவர் சந்தோஷத்தோடு பெற்றுக் கொண்டார்.

பண்டாரத்தின் பார்வை அவரையே தொடர்ந்தது. எங்கோ பார்த்த முகமாக இருக்கிறதே! ஆனால் அதைப் பற்றிக் கவலைப் பட நேரம் மில்லை. அவர் சாலையின் எதிர்ப் புறத்தை நோக்கி நடந்து போய், அங்கே நின்ற வண்டிக்குள் பாவாடையை வைத்தார். வேறு ஏதோ வாங்குவதற்காக நாலு கடைகள் தாண்டிச் சென்று விட்டார்.

பண்டாரத்தின் மனம் தீவிரமாக இயங்கிற்று. வேறு வழியில்லை. இதுதான் சமயம்.

வண்டியிலும் யாரும் இல்லை; மெல்ல, மெல்லச் சுற்றிலும் பார்த்துக் கொண்டே அவன் அந்த வண்டியை நெருங்கி விட்டான். காகித மடிப்பை நோக்கி அவனுடைய கை நீண்டது. மறுபடியும் அவன் பார்வை ஒரு முறை சுழன்று வந்தது.

அப்போது ஒரு சிறுமி, அன்றொரு நாள் மறைக்கு ஒதுங்கி நிற்கும் வேளையில் பார்த்த அதே பச்சை நிறப் பட்டுப் பாவாடை அணிந்த பெண், சாலையைக் கடந்து வந்து கொண்டிருந்தாள். அவளுக்கு மிக அருகில் வேகமாக விரைந்து வந்து கொண்டிருந்தது ஒரு லாரி.

சில விநாடிகள்தான். அதற்குள் பண்டாரம் காகித மடிப்பை எடுத்துக் கொண்டு ஓடி யிருக்கலாம். ஆனால் அவன் கையைப் பின்னால் இழுத்து உதறிக் கொண்டான். அதே வேகத்தில் சாலையின் நடுவே, அந்தச் சிறுமியை நோக்கிப் பாய்ந்தான்.

பண்டாரம் மயக்கம் தெளிந்து சுற்றிலும் பார்த்தான். நிதானமாக அவன் நினைவில் இரு உருவங்கள் மிதந்து வந்தன. லாரியின் அடியில் அகப்பட விருந்த சிறுமி — அவள் இதோ சிரித்துக் கொண்டு நிற்கிறாளே! அப் புறம் அந்த நீல நிறப் பட்டுப் பாவாடையைத் தையல் கடையிலிருந்து வாங்கிக் கொண்டு போய் வண்டியில் வைத்தவர் — அவரும் இதோ கவலையோடு பார்த்துக் கொண்டு நிற்கிறார். அவர்தான் இந்தப் பெண்ணின் அப்பாவா? அவனுக்கு நடந்த தெல்லாம் புரிந்து விட்டது.

"பெரியவரே! உங்களால்தான் என் குழந்தை பிழைத்தாள். நீங்கள் மயக்கம் தெளிந்து எழுந்திருக்க வேண்டுமே என்று தவித்துக் கொண்டிருந்தேன்.." அவருக் குப் பதில் பேச முடியாமல் நெஞ்சை அடைத் தது. சூடாக இரண்டு வாய் காப்பியைப் பண்டாரத்தின் வாயில் ஊற்றினார். அவன் எழுந்து உட்கார்ந்தான்.

"எல்லாம் அவன் செயல். நான் கூட இன்னிக்குப் பெரிய தப்புக் காரியம் செய்யத் துணிஞ்சுட்டேன். அதிலேயிருந்து இந்தப் பொண்ணுதாங்க என்னைக் காப்பாத்திச்சு."

பண்டாரம் எழுந்தான்.

"பெரியவரே! இதை நீங்கள் தயவுசெய்து வாங்கிக்கணும்."

அவர் நாலைந்து பத்து ரூபாய் நோட்டுக் களை எடுத்து அவனிடம் நீட்டினார். பண்டாரம் மனத்தால்கூட அதை எடுத்துக் கொள்ளத் தயாராக இல்லை.

"இது வேண்டாங்க. ஆனா நீங்க தையற் கடையிலே இருந்து எடுத்து வந்தீங்களே நீலப் பாவாடை அது இருந்தால் குடுங்க!"

அவர் விழித்துக் கொண்டு நின்றார். அதற் குள் அவருடைய மகள் ஓடிப் போய் அந்தக் காகிதப் பையை எடுத்துக் கொண்டு வந்தாள்.

பண்டாரத்தின் உள்ளம் ஆனந்தத்தால் துள்ளிற்று. அவன் கழியை ஊன்றிக் கொண்டு நீலப் பட்டுப் பாவாடையுடன் தன்னுடைய இடத்தை நோக்கி நடந்தான்.

நாளைக்குப் பொழுது விடிந்தால் தீபாவளி. அவனுடைய ராசாத்தி நீல நிறப் பட்டுப் பாவாடையை அணிந்துகொள்ளப்போகிறாள்;

## முப்பத்தொன்பதாவது அத்தியாயம்

சத்தியமூர்த்தி அந்தக் கூடத்துக்குள் நுழைந்து நின்றவுடனே சீட்டு விளையாடிக்கொண்டிருந்த பூபதி அவனைப் பார்த்துவிட்டார். அதே சமயத்தில் அவனால் மனப்பூர்வமாக வெறுக்கப்பட்ட மற்ற இருவரும்கூட அவன் அங்கு வந்து நிற்பதைப் பார்த்துவிட்டார்கள். கருகருவென்று மயிரடர்ந்த புருவங்களை மேலே ஏற்றி இறக்கி வளைத்து ஜமீன்தார் தன்னைப் பார்த்த பார்வை நெஞ்சில் வந்து குத்தித் துளைத்தெடுப்பது போலிருந்தது சத்தியமூர்த்திக்கு. 'நாடு சுதந்திரம் பெற்று, ஜமீன் ஒழிப்பு, நிலப் பிரபுத்வ முறையைத் தீர்த்துக்கட்டும் நில உச்ச வரம்பு ஆகிய சட்டங்களெல்லாம் வந்த பின்பும் இன்றைய நிலையில்கூட மஞ்சள்பட்டியாரைப் போன்றவர்கள் ஊருக்கு ஊர் பங்களாக்களும், ஆடம்பர ஏற்பாடுகளும் செய்துகொண்டு பழைய ஜமீன்தார் விருப்புக்களைச் சிறிதும் இழக்காமலும் குறைத்துக் கொள்ளாமலும் வாழ முடிகிறதே என்பதை எண்ணியபோது சத்தியமூர்த்தி மனம் கொதித்தான். ஜமீன்தாரி முறையை ஒழித்து விட்டாலும் பணக்காரர்களில் பலருடைய இரத்தத்தில் ஓர் இயற்கையாக ஊறிப்போயிருக்கும் ஜமீன்தார் மனப்பான்மையை ஒருபோதும் ஒழிக்க முடியாதுபோல் தோன்றியது. ஜமீன் ஒழிப்புக்குப்பின் இத்தனை ஆண்டுகள் கழிந்த பிறகும் மக்கள் மஞ்சள்பட்டியாரை ஜமீன்தார் என்றுதான் சொல்கிறார்கள். பழைய டாம்பீகங்களையும் ஆடம்பரங்களையும் விட்டுவிடாமல் நாட்டியத்தையும் சங்கீதத்தையும் காப்பாற்றுவதாகச் சொல்லிக்கொண்டு ஜமீன்தார் மஞ்சள்பட்டியில் இன்னும் நவராத்திரி விழாக் கொண்டாடுகிறார். மஞ்சள்பட்டி என்கிற சிறிய ஊரில் இருப்பதைவிட அதிக வசதிகளும், அதிக ஆடம்பரங்களும் நிறைந்த மாளிகைகளும் பங்களாக்களும் ஒவ்வொரு பெரிய நகரத்திலும் கோடைவாசத்துக்குரிய மலைநகரங்களிலும் ஜமீன்தாருக்குச் சொந்தமாக இருக்கின்றன.'

ஜமீன்தாரின் கொடிய கண்பார்வை தன்மேல் பட்டுத் திரும்பிய சில கணங்களில் இவ்வளவும் நினைத்தான் சத்தியமூர்த்தி. இதற்குள் பூபதியே அவன் பக்கம் எழுந்து வந்து விட்டார். ''வாருங்கள்! என் கடிதம் கிடைத்ததா?



அப்போதிருந்து உங்களைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்'' என்று புன்னகையோடு கூறிக்கொண்டே அவன் பக்கத்தில் வந்து நின்றார் பூபதி. அவருக்குப் பத்மஸ்ரீ விருது கிடைத்திருப்பதற்காக அவரைச் சந்தித்தவுடனே தன் பாராட்டுதல்களைத் தெரிவித்துக் கொள்ள எண்ணியிருந்த சத்தியமூர்த்தியைப் பேசவிடாமல் அவரே முந்திக் கொண்டு ஜமீன்தாரைப் பற்றி உற்சாகமாகக் கூற ஆரம்பித்து விட்டார் :

''உங்களுக்கு நம் ஜமீன்தாரவர்களைத் தெரியும் அல்லவா? பெரிய கலாரசிகர். நல்ல தமிழபிமானி. இவருடைய முன்னோர்களில் சிலரைப் பற்றிப் பழைய புலவர்கள் இரட்டை மணிமாலை என்ன நான்மணி மாலையென்ன, பிள்ளைத் தமிழென்ன, கோவை, உலா மடலென்ன, என்று இப்படிக் கணக்கு வழக்கில்லாமல் பாடிப் புகழ்ந்திருக்கிறார்கள். இந்த நிமிஷத்தில்கூட நம்முடைய ஜமீன்தாரைத் தூண்டிவிட்டுக் கூளப்ப நாயக்கன் காதலையும், விறலிவிடு தூதையும் பற்றிச் சொல்லச் செய்தால் விடிய விடியக் கேட்டுக் கொண்டேயிருக்கலாம். பொழுது போவது தெரியாது. மிஸ்டர் சத்தியமூர்த்தி! இதையெல்லாம் விட அவசியம் நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டியது மல்லிகைப்பந்தல் கல்லூரியின் நிர்வாகக் குழுவில் நம் ஜமீன்தார் மிக முக்கியமான அங்கம் வகிக்கிறார் என்பதுதான்''—என்றிவ்வாறாகச் சத்தியமூர்த்தி பதில் சொல்லவோ சிந்திக்கவோ அவகாசம் கொடுக்காமல் மிக ஆர்வமாகச் சொல்லி அறிமுகப்படுத்திக் கொண்டே போனார் பூபதி. அவற்றைச் செவியில் ஏற்று மனத்தில் சிந்தித்தபொழுது சத்தியமூர்த்தியினால் பொறுத்துக்கொள்ள இயலாத உண்மைகளாயிருந்தன அவை. ஓரளவு கீழ்த்தரமான உணர்ச்சிகளைத் தூண்டக் கூடிய கூளப்ப நாயக்கன் காதலும் விறலி விடு தூதுவும் ஜமீன்தாருக்குத் தெரிவதைக் காரணமாகச் சொல்லி அவரை அதற்காகத் தமிழபிமானி என்று குறிப்பிடும் பூபதியை நினைத்து அவன் உள்ளூறப் பரிதாபப்பட்டான். ஜமீன்தாரும் கண்ணாயிரமும் ஏற்கெனவே உட்கார்ந்திருந்த இடத்திலிருந்து அசையாமல் சத்தியமூர்த்தியையே கடுமையாக உறுத்துப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். பூபதியோ நிலைமை புரியாமல் சத்தியமூர்த்தியைக் கையைப் பற்றி இழுத்து மிக அருகில் அழைத்துக் கொண்டுபோய், ஜமீன்தாரிடமும்,-கண்ணாயிரத்திடமும், ''சார்! உங்களுக்கெல்லாம் ஓர் இளம் நண்பரை இப்போது அறிமுகம் செய்து வைக்கப் போகிறேன்....'' என்று தொடங்கி மடமடவென்று சத்தியமூர்த்தியைப் பற்றி அவர்களுக்குச் சொல்லத் தொடங்கி விட்டார். ஜமீன்தாரும் கண்ணாயிரமும் சத்தியமூர்த்தியின் அறிமுகத்தையோ, அவனுடையசிறப்பியல்பு



# பொன் விலங்கு

மணிவண்ணன்

கலையோ சிறிதும் விரும்பவில்லை. தவிர சத்தியமூர்த்தி அவர்களுக்குப் புதிதாக அறிமுகமாக வேண்டியவனும் இல்லை. நிலைமையைச் சமாளிப்பதற்காகக் கண்ணாயிரம் ஏதோ காரியமாக எழுந்து போகிறவர்போல் உட்பக்கமாக எழுந்து போய்விட்டார். ஜமீன்தார் அப்படி எழுந்து போய்விடவில்லை யானாலும் பூபதி கூறிய எல்லாவற்றையும் சிறிது கூட முகமலர்ச்சியில்லாமல் கடுகடுப்போடு கேட்டுவிட்டு, 'ஐ...ஸீ' என்று அழுத்தமாகச் சொல்லியபடியே நிமிர்ந்து சத்தியமூர்த்தியை ஒரு பார்வை பார்த்தார். அந்தப் பார்வையே அவனை வாள் கொண்டு அறுப்பதுபோல் அறுத்தது. சொல்லவும் முடியாமல், மெல்லவும் முடியாமல் அந்த விரும்பத் தகாத சூழலில் நிகழும் விரும்பத்தகாத அறிமுகத்துக்காகக் கால்கள் பொருந்தாதபடி நின்றுகொண்டிருந்தான் அவன். கால்மேல் கால்போட்டு அலட்சியமாக உட்கார்ந்திருந்த ஜமீன்தார் கால் பாதத்தை மேலும் கீழுமாக ஆட்டியபடி, 'ஐ...ஸீ' என்று வார்த்தைகளை இழுத்ததை நினைத்து மனம் வெறுத்து அருவருப்பு அடைந்தாலும் அங்கே தன்னுடைய எந்த உணர்ச்சியையும் வெளிப்படையாகக் காண்பித்துக் கொள்ள முடியாமல் நின்றான் சத்தியமூர்த்தி. ஜமீன்தாருக்கு சத்தியமூர்த்தியை அறிமுகம் செய்தபோது அவர் அதிக அலட்சியமாக இருந்ததைப் பூபதியும் அறிந்து கொண்டாலும் அதற்குக் காரணமாக எதையும் மனத்தில் கற்பித்துக் கொள்ளவில்லை அவர். அந்த நேரத்தில் சத்தியமூர்த்தி நினைத்துத் தலைகுனியும்படியான வேறு ஒரு நிகழ்ச்சியும் அங்கு நடந்தது. அவனும் பூபதியும் அங்கு நின்று கொண்டிருந்த போதே ஜமீன்தார் ஒரு வேலைக்காரனைக் கூப்பிட்டு, ''டேய்! பின்புறம் தோட்டத்தில் அந்தப் பேச்சியம்மன் படித்துறைக் கிழவன் நின்று கொண்டிருப்பான். நான் கூப்பிட்டேனென்று அந்தக் கிழவனை இங்கே வரச் சொல்'' என்று ஏவினார். ஐந்து நிமிஷங்கள் கழித்து ஜமீன்தாரால் அழைக்கப்பட்ட அந்தக் 'கிழவன்' வந்து கைகட்டி வாய் பொத்தி நின்றபோது பூபதியோடு பேசிக்கொண்டிருந்த சத்தியமூர்த்தி, தற்செயலாகத் திரும்பிப் பார்த்தான்: அவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. ஜமீன்தாருடைய ஏவலுக்காக ஓடி வந்து கைகட்டி வாய் பொத்தி நின்ற கிழவர் வேறு யாருமில்லை; அவனுடைய அருமைத் தந்தைதான்! சத்தியமூர்த்திக்கு மனம் கொதித்தது; வந்து பவ்வியமாக நின்று கொண்டிருந்த அவனுடைய தந்தையிடம், ''உள்ளே சிகரெட் 'டின்' இருக்கும்.... புதிதாக ஒன்று எடுத்திட்டு வாங்க...'' என்று கூறி ஜமீன்தார் கட்டளையிட்டதைச் சத்தியமூர்த்தி தன் இரு விழிகளாலும் கண்டு இரு செவிகளாலும் கேட்டு வயிறெரிந்தான். அந்த நேரத்து உணர்ச்சிகளின் வேகத்தை அவனால் அங்கு வெளியே காட்டிக் கொள்ளவும் முடியவில்லை. அந்த நிலையில் அந்தச் சூழலில் வைத்துத் தன் தந்தையைப் பார்ப்பதற்கே அவன் வெட்கித் தலைகுனிந்தான். இதே வெட்கத்தோடு தான் தந்தையும் அவனைப் பார்க்காதது போல் அங்கிருந்து மெல்ல நழுவிப் போயிருக்க வேண்டும். தன்னை அவமானப்படுத்தித் தலைகுனிய வைக்க வேண்டு மென்றே ஜமீன்தார் இந்தக் காரியத்தைச் செய்திருக்கிறார் என்பதைச் சத்தியமூர்த்தியால் புரிந்து கொள்ள முடிந்தது. ஆனால் புரிந்துகொண்டு அங்கே என்ன செய்ய முடியும்? பூபதியோ அவனுடைய மனப் போராட்டங்களையும் வேதனையையும் உணர்ந்து கொள்ளாமல் எதை எதையோ அவனிடம் உற்சாகமாகச் சொல்லிக் கொண்டிருந்தார். அவனும் பூபதியும் ஹாலில் அமர்ந்து பேசிக் கொண்டிருக்கும் போதே ஜமீன்தார் சிகரெட் 'டின்'னும் கையுமாகக் கண்ணாயிரம் பின்தொடர அவர்களைக் கடந்து பங்களாவின் முன்பகுதிக்குச் சென்றார். அப்படிச் செல்லும்போதே ஜமீன்தார் ஒரு கணம் பின்னால் திரும்பி, ''ஏய் பூபதி! நானும் கண்ணாயிரமும் வெளியில் எங்காவது புறப்பட்டு விட்டோமோ என்று . நினைத்துக் கொள்ளாதே. வெளியே தோட்டத்தில் உட்கார்ந்து கொண்டிருக்கிறோம்..... பேசி அனுப்பிவிட்டு நீயும் வா.... காற்றாடத் தோட்டத்தில் உட்கார்ந்து அரட்டையடித்துக் கொண்டிருக்கலாம்'' என்று பூபதியிடம் சொல்லிவிட்டுப் போனார். ஜமீன்தாருக்கும் பூபதிக்குமிடையே இருப்பதாகத் தெரிந்த நெருக்கமும், நேசமும் சத்தியமூர்த்தியைத் திகைத்துப்போகச் செய்திருந்தன. 'ஏய் பூபதி' என்று போகிற போக்கில் மதயானை நடப்பது போல் நடந்து கொண்டே கூப்பிட்டுப் பேச வேண்டுமானால் மஞ்சள்பட்டி ஜமீன்தாருக்குப் பூபதியிடம் எவ்வளவு உரிமையும் நேசமும் இருக்க வேண்டும்?' என்றெண்ணித் தனக்குள் வியந்தான் சத்தியமூர்த்தி. பூபதியோ அவனிடமே மேலும் மேலும் விடாப்பிடியாய் உற்சாகமாகப் பேசிக் கொண்டிருந்தார்.

இதோ
புத்தம் புதிய வெண்மையான டின்னில்
அதிக நறுமணத்துடன்
"கோகுல்"

# ஸான்டால்

டாய்லெட் பவுடர்

# டி.எஸ்.ஆர் & கோ

மதரூஸ் & கும்பகோணம்



இதர தயாரிப்புகள்:
கோகுல் ஸாண்டல்வுட்
டாய்லெட் பவுடர்
•
'கோகுல்'
டர்மரால் சோப்









''மிஸ்டர் சத்தியமூர்த்தி! ஜமீன்தாருக்கு எல்லாரிட்டவும் அத்தனை கலகலப்பாகப் பழக வராது. உங்களிடம் அவர் அதிகம் பேசவில்லையே என்று நீங்கள் வித்தியாசமாக நினைத்துக் கொள்ளக் கூடாது. நாங்கள் இருவரும் அண்ணன் தம்பி மாதிரி. இந்த ஜமீன்தார் இல்லேன்னா வியாபாரத்திலேயும் தொழில் துறையிலும் நான் இவ்வளவு செழிப்பாக வளர்ந்து முன்னுக்கு வந்திருக்க முடியாது. இவர் பரம உபகாரி. இப்போது நம் கல்லூரி இருக்கிறதே; அந்த இடம் முழுவதும் ஒரு காலத்தில் இவருக்குச் சொந்தமான பழத் தோட்டங்களாக இருந்தன. அவ்வளவு இடத்தையும் காலேஜ் கட்டறத்துக்காகச் சும்மாவே கொடுத்திட்டார். வியாபாரத்திலும் தொழிலிலும் கூட எனக்கு நொடிப்பு வந்தபோதெல்லாம் நிறையக் கை கொடுத்து உதவியிருக்கிறார். நான் இவரை வெறும் 'பிஸினஸ் பார்ட்னரா' மட்டும் நினைக்கிறதில்லே. ரொம்ப ரொம்ப வேண்டிய சிநேகிதராகவே நினைக்கிறேன். நானும் என் பெண்ணும் எப்போது மதுரைக்கு வந்தாலும் இவருடைய பங்களாவில்தான் தங்குவது வழக்கம். இது எங்களுடைய சொந்த வீடு போல. மல்லிகைப்பந்தலிலே நம் ஜமீந்தாருக்கும் அரண்மனை போல் பெரிய பங்களா இருக்கிறது. பாவம்! சின்ன வயதிலேயே மனைவியைப் பறிகொடுத்துவிட்டார். கலைத் துறையில் நிறைய அபிமானம் உடையவர். பரதநாட்டியம்னு உயிர். கர்நாடக சங்கீதம்னுப் பசி தாகமே தெரியாது.''

ஜமீன்தார் புகழ் பாடும் படலத்தில் பொறுமை இழந்த சத்தியமூர்த்தி துணிந்து, பூபதியின் பேச்சில் நடுவே குறுக்கிட்டான்.

''சார்! உங்களுடைய கடிதத்தில் நீங்கள் டில்லிக்குப் புறப்படு முன் என்னிடம் ஏதோ முக்கியமாகப் பேச வேண்டும் என்று எழுதியிருந்தீர்கள். உங்களுக்குக் குடியரசுத் தலைவர் 'பத்மஸ்ரீ' விருது வழங்கப் போவதைப் பற்றி நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். என்னுடைய மனப்பூர்வமான பாராட்டுதல்களை ஏற்றுக் கொள்ளுங்கள்....'' என்று சத்தியமூர்த்தி கூறிக்கொண்டே வந்தபோது பூபதிக்குப் பின்புறமிருந்து வளைகள் கலகலத்து ஒலிக்கும் இனிய ஓசை கேட்டது. சத்தியமூர்த்தி நிமிர்ந்து பார்த்தான். பாரதி வந்து நின்று கொண்டிருந்தாள். தந்தைக்கு முன்னால் விட்டுக் கொடுக்காமல் நடந்து கொள்ள விரும்பிய பாரதி, ''வணக்கம் சார்!'' என்று அவனை நோக்கிக் கை கூப்பினாள். அவனும் பதிலுக்குப் புன்முறுவல் பூத்து அந்த வணக்கத்தை ஏற்றுக் கொண்டு இரண்டு வார்த்தைகளால் பொதுவாக அவளை நலம் விசாரித்து வைத்தான். தந்தை அமர்ந்திருந்த நாற்காலியின் பின்புறத்தைக் கைகளால் பற்றியபடி அவளும் அங்கேயே நின்றுகொண்டாள். சிகரெட் 'டின்' எடுத்துக் கொடுப்பதற்கும், ஒவல் 'டின்' கொண்டுவந்து கரைத்துக்கொடுப்பதற்குமாக உள்ளே எடுபிடி வேலையாள் போல அலைந்து கொண்டிருக்கிறவர் தன்னுடைய தந்தைதான் என்பது பாரதிக்கோ, பூபதிக்கோ தெரிந்திருக்கலாமோ என்ற தவிப்பினால், பொறுமையும் மலர்ச்சியும் இழந்து ஏதோ பொம்மை போல் ஒரு முறைக்காக அங்கே உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தான் சத்தியமூர்த்தி. அப்போது தன்னுடைய கம்பீரமான உருவம் கூனிக்




குறுகி விட்டது போல் அவனுக்கே ஒரு பிரமை உண்டாகியிருந்தது. தன்னைத் தர்மசங்கடமான நிலைமைக்கு ஆளாக்கிவிட்ட தந்தையின் மேல் கோபம் கோபமாக வந்தது அவனுக்கு. தந்தையை அந்த அளவு துணியச் செய்துவிட்ட தன் வீட்டு வறுமையின் மேலும் கோபம் வந்தது. இறுதியாகப் படைப்பின் மேலும் கடவுளின் மேலுமே கோபம் வந்து குமுறியது. ஒருவேளை கண்ணாயிரமோ, ஜமீன்தாரோ தன்னை அவமானப்படுத்த வேண்டுமென்றே அந்த உண்மையைப் பூபதியிடமும், பாரதியிடமும் சொல்லியிருந்தும் அவர்கள் தன்னிடம் அதைத் தெரிந்து கொள்ளாதது போல நடிக்கிறார்களோ என்ற சந்தேகமும் அவனுக்கு ஏற்பட்டிருந்தது. சில இடங்களில் சில மனிதர்களோடு சேர்ந்து இருந்தாலே எதற்கோ அடிமைப்பட்டுவிட்டது போல் அந்தரங்கமாக ஒரு தவிப்பும் தாழ்வு மனப்பான்மையும் ஏற்படும். அத்தகைய

தவிப்புக்கும் குமுறலுக்கும் இப்போது ஆளாகியிருந்தான் சத்தியமூர்த்தி.

''உங்கள் ஆசிரியரைப் பார்த்தாயா அம்மா? ஜமீன்தாரைப் பற்றிச் சுவாரஸ்யமாகச் சொல்லிக் கொண்டிருந்தேன். பாதியிலேயே கேட்பதற்குப் பொறுமை இழந்து விட்டார்...'' என்று பின்புறம் நின்றிருந்த மகளிடம் சொல்கிறாற்போலச் சொல்லிக் கொண்டே சத்தியமூர்த்தியை நோக்கிக் குத்தலாகப் பேசினார் பூபதி. சத்தியமூர்த்தியும் அவரை நோக்கி மௌனமாகப் புன்னகைபுரிந்தான். இல்லை புன்னகை புரிவதாக நடித்தான். அந்தப் புன்னகையும் மனப்பூர்வமாக வரவில்லை. அதே வேளையில் 'சமூகத்தில் உள்ள பலர் அவர்களிடம் இருக்கும் நியாயமான தகுதிகளுக்காகக் கூடப் புகழப்படுவதில்லை. வேறு சிலரோ அவர்களிடம் இல்லாத தகுதிகளுக்காகவும் சேர்த்துப் புகழப் படுகிறார்கள்' என்று அவன் மனம் நினைத்துக் குமுறிக் கொண்டிருந்தது. தமக்கு வேண்டியவர் என்பதற்காக ஜமீன்தாரிடம் இல்லாத தகுதிகளுக்காகவும் சேர்த்து அவரைப் பூபதி புகழ்ந்தது சத்தியமூர்த்திக்குப் பிடிக்கவில்லை. ''மிஸ்டர் சத்தியமூர்த்தி! நான் உங்களைக் கூப்பிட்டனுப்பிய காரியம் ஒருபுறம் இருக்கட்டும். என் நண்பர் என்ற முறையில் நீங்கள் ஜமீன்தாரைப் பற்றித் தெரிந்து கொள்ள ஆசைப்படாவிட்டாலும் மல்லிகைப்பந்தல்-கல்லூரியின் நிர்வாகக் குழு உறுப்பினர்களில் எனக்கு அடுத்தபடி மிகவும் முக்கியமானவர் என்பதற்காகவாவது அவரைத் தெரிந்து கொள்ள வேண்டும். நம் ஜமீன்தார் சமீபத்தில் ஒரு பெரிய வாரப் பத்திரிகையை விலைக்கு வாங்கியிருக்கிறார். இந்த ஊரிலிருந்து வெளிவருகிற 'குத்துவிளக்கு' வாரப் பத்திரிகையை நீங்கள் பார்த்திருப்பீர்களே?..''



''ஏன், சார்! அந்த வித்துவான் சங்கீதத்தை சாதகம் பண்ணினதாகத் தெரியவில்லையே!''

''அதென்னமோ சங்கீதம் அவர் முன்னேற்றத்துக்குச் சாதகமாக இருக்கிறது!''

சத்தியமூர்த்தி இப்போதும் பூபதிக்குப் பதில் ஒன்றும் கூறாமல் புன்னகை புரிந்தான். தனக்கு விருப்பமில்லாத விஷயமானாலும் அந்த விஷயத்தை எடுத்துச் சொல்கிறவருடைய விருப்பத்தைப் புண்படுத்தாமல் புன்னகை புரிந்தபடியே கேட்டுக் கொண்டு மௌனமாயிருந்து விடும் பழக்கத்தை மேற்கொள்வது அவனுக்கு இன்று மட்டும் புதுமையில்லை. சிறிது நேரம் ஜமீன்தாருடைய புகழ்மாலை வளர்ந்த பின் கண்ணாயிரம் என்கிற பிரமுகரின் சாமர்த்தியங்களைப் பற்றியும் யாரோ முன்பின் தெரியாதவனுக்கு எடுத்துச் சொல்வதுபோல் பூபதி அவனிடம் சொல்லத் தொடங்கினார்:

''கண்ணாயிரத்தை என்னவோ என்று நினைத்து விடாதீர்கள். அவர் பெரிய 'ஜீனியஸ்'. இந்த உலகத்தில் அவரால் முடியாத காரியம் என்று எதுவுமே கிடையாது. முன்னால் 'மூன் லைட் அட்வர்டைஸிங் ஏஜன்ஸீஸ்' என்று ஒரு விளம்பரக் கம்பெனி வைத்து நடத்திக் கொண்டிருந்தார். இப்போது 'குத்துவிளக்'கின் ஜெனரல்மானேஜராக இருந்து நிர்வாகம் செய்யும் பொறுப்பையும் ஜமீன்தார் அவரிடமே விட்டிருக்கிறார். மக்களுக்குக் கவர்ச்சியான புதுப்புது அம்சங்களைப் புகுத்திக் 'குத்துவிளக்கை' மிக வேகமாக மின்னச் செய்யப் போகிறார் கண்ணாயிரம்....''

''...எனக்குத் தெரியும்....'' என்று சுருக்கமாகப் பதில் வந்தது சத்தியமூர்த்தியிடமிருந்து. அவன் மனநிலையை உணர்ந்து கொண்டவர் போல் பேச்சைத் திடீரென்று வேறு திசைக்குத் திருப்பினார் பூபதி.

''எனக்குப் பத்மஸ்ரீ விருது கிடைத்ததென்ற தகவல் தெரிந்ததோ இல்லையோ, விடிந்ததும், விடியாததுமாக பிரின்ஸிபால் யானைத் துதிக்கை அளவுக்குப் பெரிய ரோஜாப்பூ மாலையைத் தூக்கிக் கொண்டு வந்துவிட்டார். என் மகளும் நானும் மல்லிகைப் பந்தலை விட்டுக் காரில் புறப்படுவதற்குள் அநேகமாக எல்லா நண்பர்களும், தெரிந்தவர்களும் தேடி வந்து மகிழ்ச்சியைத் தெரிவித்துப் பாராட்டிவிட்டுப் போய்விட்டார்கள். முதலில் என் மகள் பாரதி மதுரை வரை வந்து என்னை வழியனுப்பிவிட்டு மல்லிகைப்பந்தலுக்குத் திரும்பிவிடப் போவதாகத்தான்

சொல்லிக் கொண்டிருந்தாள்: இப்போது என்னவோ திடீரென்று 'நானும் டில்லிக்கு வருகிறேன் அப்பா' என்கிறாள். அவளுக்கும் 'ஏர் டிக்கட்' வாங்கியாயிற்று. நான் உங்களைக் கூப்பிட்டனுப்பிய காரியம்...'' என்று தொடங்கிய பூபதி எதையோ நினைத்துத் தயங்கினார். பின்னால் திரும்பி மகள் பாரதியைத் தேநீர் எடுத்துக் கொண்டு வரச் சொல்லி சாமர்த்தியமாக அவளை உள்ளே அனுப்பிவிட்டுக் குரலைத் தணித்துக் கொண்டு சத்தியமூர்த்தியிடம் மெல்லக் கூறலானார் பூபதி.

''நான் டில்லியிலிருந்து திரும்புவதற்கும் கல்லூரி நவராத்திரி விடுமுறை முடிந்து திறப்பதற்கும் சரியாயிருக்கும். கல்லூரி திறந்து ஒரு வாரத்திற்குள் என்னுடைய பிறந்த தினம் வருகிறது. அதையொட்டி 'ஸ்தாபகர் தின விழாவோ' என்னவோ கொண்டாடப் போவதாகப் பிரின்ஸிபால் சொல்லிக் கொண்டிருக்கிறார். எனக்கு இதெல்லாம் பிடிப்பதே இல்லை.. என்ன கொண்டாட்டம் வேண்டியிருக்கிறது? ஆனால் பிரின்ஸிபாலும் மாணவர்களும் ஆசைப் படுவதைக் கெடுக்க விரும்பவில்லை.... அந்த விழாவுக்கு எல்லா ஏற்பாடுகளும் செய்கிற பொறுப்பு உங்களுடையதாக... இருக்கணும்.... நம்முடைய.... மந்திரியைக் கூப்பிடச் சொல்லி பிரின்ஸிபாலிடம் சொல்லி யிருக்கிறேன். மந்திரிக்குக் கொடுக்கிறதுக்கு ஒரு வரவேற்பு இதழ் நீங்க எழுதணும். அதிலே இந்த விஷயத்தைக் கொஞ்சம் அழுத்தி வற்புறுத்தணும்...'' என்று சொல்லிக் கொண்டே காதருகில் வந்து வரவேற்பு இதழில் வற்புறுத்த வேண்டிய விஷயத்தை இரகசியமாக அவனிடம் கூறினார் பூபதி. வரவேற்பு இதழில் எந்த விதமாகவும் தொடர்புபடுத்திச் சொல்ல முடியாத சொந்த நலனுக்குரிய ஒரு விஷயமாக இருந்தது அது. சத்தியமூர்த்தி திகைத்துப் போனான். பல பெரிய மனிதர்கள் 'ஜெகில் அண்ட் ஹைடாக' இருப்பதும் உள்ளொன்றும் புறமொன்றுமாக வாழ்வதும் அவனுக்குத் தெரியும். பூபதியைப் பற்றி அவன் அப்படி இதுவரை நினைக்கவில்லை. இன்றோ இந்த விநாடியிலிருந்தே அவரையும் அப்படி நினைக்கத் தொடங்குவதற்கு அவன் சிறிதும் தயங்கவில்லை. புகழுக்கும் பெருமைக்கும் சிறிதுகூட ஆசை இல்லாதவர்களைப் போலப் பேசிக் கொண்டே அவற்றுக்காகத் தவித்து மாய்கின்ற பணக்காரப் பிரமுகர்கள் பலரைப் போலத்தான் பூபதியும் இருக்கிறார் என்று அவன் புரிந்து கொள்ளத் தொடங்கி விட்டான்: தர்மத்தையும், பக்தியையும் பற்றி அடிக்கடி பேசுவதன் மூலமாக மட்டுமே தங்களைப் புற உலகுக்கு நல்லவர்களாகக் காண்பித்துக் கொண்டு - வாழ்கிற வாழ்க்கையில் தர்மமோ, பக்தியோ, ஒழுக்கமோ சிறிதுமில்லாத ஆஷாடபூதிப் பிரமுகர்களில் பூபதியும் ஒருவராக இருப்பதைச் சத்தியமூர்த்தி தெரிந்து கொள்ள நேர்ந்து விட்டது. அவன் அப்போது அவர் முகத்தை ஏறிட்டுப் பார்க்கவே அருவருப்பும் கூச்சமும் அடைந்து எங்கோ பார்க்கலானான்.

ஆனால் பூபதியோ கூசாமல் அவன் முகத்தைப் பார்த்து மேலும் ஏதோ சொல்வதற்கு இருந்த நிலையில் பாரதி தேநீர்க் கோப்பைகளோடு அங்கு வந்து விட்டாள். தேநீரைப் பருகிக் கொண்டே சத்தியமூர்த்தி நினைத்தான்: ''தாங்கள் தங்களுடைய மனச் சாட்சிக்காக நல்லவர்களாக இருக்க வேண்டும் என்பதைவிடத் தங்களைப் பிறரிடம் நல்லவர்களாக நிரூபித்துக் கொண்டாலே போதும் என்ற ஆசை தான் இன்று மிகப் பலரிடம் இருக்கிறது. துரதிர்ஷ்டவசமாகப் பூபதியும் அந்தப் பலரில் ஒருவராகத்தான் இருக்கிறார்! ஒழுக்கமும் பண்பாடும் இல்லாத ஜமீன்தாரை வேறு பல சொந்தக் காரணங்களுக்காகப் பூபதி தாராளமாகப் புகழுகிறார். அயோக்கியரான கண்ணாயிரத்தை 'ஜீனியஸாக' வருணிக்கிறார். இவற்றை யெல்லாம் செவிகளில் ஏற்றுப் பொறுத்துக்கொள்ள முடியாமல் நான் மனம் புழுங்குகிறேன். இந்த இடத்தில் இந்த மாளிகையில் இப்படி உட்கார்ந்திருக்கும் போது நான் எதற்கோ அடிமைப்பட்டிருப்பதைப் போல் என் இதயம் குமுறுகிறது. என் தோள்களில் பல்லாயிரம் திமைகளைச் சாடி நொறுக்கும் அவ்வளவு பெருந் துணிவு தினவெடுத்துப் பொங்குகிறது' என்று இவ்வாறு சிந்தித்தபடி வீற்றிருந்த சத்தியமூர்த்தியைப் பூபதி வினவினார்:

''ஏன் இங்கு வந்ததிலிருந்து நீங்கள் என்னவோ போலிருக்கிறீர்கள்? உங்களுக்கு உடம்பு சரியில்லையா?... போய் ஓய்வெடுத்துக் கொண்டு நாளை மாலை விமான நிலையத்துக்கு வாருங்கள். நான் சொன்னதெல்லாம் நினைவிருக்கட்டும். 'ஸ்தாபகர் தினவிழா' நன்றாக நடைபெற்றால் அந்தப் பெருமை எல்லாம் உங்களுக்குத்தானே?''

சத்தியமூர்த்தியும் அங்கிருந்து புறப்படத் துடித்துக் கொண்டுதான் இருந்தான். பூபதி இப்படி வினவியதையே ஒரு காரணமாக வைத்து அவரிடம் சொல்லிக் கொண்டு அங்கிருந்து புறப்பட்டு விட்டான் அவன். (தொடரும்)




அனுசுயா

ரோஜா, மருக்கொழுந்து, வெட்டிவேர், ஜாதி மல்லிகை, கதிர்ப் பச்சை, தாழம்பூ, மனோரஞ்சிதம்... இந்த ஒவ்வொரு பூவைப் பற்றியும் எழுதும்போதே அதனதன் நறுமணம் கம்மென்று வீசுகிறது. இத்தனையும் சேர்ந்துதான் கதம்பம் என்பது. இதை முதன் முதல் கண்டு பிடித்தது நிச்சயம் ஒரு பெண்மணியாகத்தான் இருக்க வேண்டும். இப்போது கனகாம்பரம், காட்டு மல்லிகை, குரோட்டன்ஸ், அரளிப் பூ, காசித் தும்பை முதலியன சேர்ந்த கதம்பமும் கட்டுகிறார்கள். நல்லவேளையாகக் காகிதப் பூக்களையும் நடு நடுவே சேர்க்க இன்னும் ஆரம்பிக்க வில்லை.

நமது தேசத்தில் ரயில் வண்டிகளில் ஒவ்வொரு வருஷமும் கிட்டத்தட்ட எழுபது, எண்பது குழந்தைகள் வரை பிறக்கின்றன. தென்னிந்திய ரயில் வண்டிகளில்தான் அதிகமான பிரசவங்களாம். அந்த வண்டிதான் சௌகரியமாக இருக்கும் என்று மூட்டை கட்டிக் கொண்டு போவார்களா? அல்லது அதில் பிரசவிப்பதென்று ஏதாவது புது முறை வேண்டுதலையாயிருக்குமோ? நன்றாயிருக்கிறது. அப்படியெல்லாம் ஒன்றும் இராது. பின்னே?

ஒரு பையன் மருந்து கடையில் மருந்து வாங்கிக் கொண்டு வந்து குடித்தான். பிறகுதான் மருந்து பாட்டில் மீது ஒட்டியிருந்த சீட்டைப் பார்த்தான். அதில், 'உபயோகிக்கு முன் பாட்டிலைக் குலுக்கு' என்று எழுதியிருந்தது. உடனே அவன் ஒரு சர்க்கார் பஸ்ஸில் ஏறிப் போய் விட்டு வந்தான். மருந்து வயிற்றுக்குள் நன்றாகக் குலுக்கிக் கொண்டு விட்டதாம். இப்படி வேடிக்கையாகச் சொல்வதுண்டு. அது போன்று பிரசவ வேதனை ஏற்பட வேண்டும் என்பதற்காகவே யாரும் ரயிலில் செல்ல மாட்டார்கள்.

கர்ப்பிணிக்கு ரயில் பிரயாணத்தினால் அதிர்ச்சி ஏற்பட்டிருக்கலாம். அதுவும் கீழே சக்கரங்கள் அமைக்கப்பட்டிருக்கும் ஆசனங்களில் அமர்ந்தால் ரயில் ஓடும்போது உடலைத்தூக்கித் தூக்கிப் போடும். இதைப் பற்றி ரயில்வே அதிகாரிகளிடம் புகார் செய்யக் கூடாது. அப்புறம் அவர்கள் 'ரயில் வண்டிகளில் பிரசவிக்கக் கூடாது. அத்து மீறி நடந்து கொள்பவர்களுக்கு அபராதம் ரூபாய் ஐந்நூறு மாத்திரம்' என்று உத்தரவு பிறப்பித்து விடப் போகிறார்கள்!

பல புக்ககத்துக் காரர்களுக்குத் தங்கள் நாட்டுப் பெண்ணை ஒரு நிமிஷம்கூட விட்டுப் பிரிய மனம் இருப்பதில்லை! அவள் கர்ப்பிணியாக இருந்தாலும் சரிதான். அதற்காக அவர்கள், அந்தப் பெண் எப்போது பிரசவிக்கக் கூடும் என்று கணக்குப் பார்ப்பார்கள். அதற்கு இரண்டு வாரத்துக்கு முன் தான் பிறந்தகத்துக்கு அனுப்புவார்கள். அந்தப் பெண் டெல்லியிலிருந்தோ, கல்கத்தாவிலிருந்தோ, பம்பாயிலிருந்தோ வயிற்றைத் தூக்கிக் கொண்டு சிரமப்பட்டுக் கொண்டு வரும். முதல் வகுப்பில் வந்தால் கூட அதிர்ச்சி என்னவோ இல்லாமல் இராது. சிலர் ஒரு கல்யாணம் பாக்கி விடாமல், அழைப்பு அனுப்பியவர் வீடுகளுக்கெல்லாம் போய் வருவார்கள். போகும்போது நிறை கர்ப்பிணியையும் ரயிலில் இழுத்துச் செல்வார்கள். கூடியவரை இந்த மாதிரிப் பிரயாணங்களை எல்லாம் தவிர்ப்பது நல்லது.

சர்க்கார் உத்தியோகங்களுக்கு நியமனம் செய்கிற போது கொஞ்சம் 'பின் தங்கிய வகுப்பினர்' என்றெல்லாம் பார்த்துச் சலுகை காட்டுகிறார்கள். பெண்கள் 'பலவீன வகுப்பினர்' என்று பெயர். ஆனால் அதற்காக ஒரு சலுகையும் காட்டுகிறதில்லை. ஆண்களுடன் அவர்கள் சரிசமானமாகப் போட்டியிட்டாக வேண்டும்.

ஐ. ஏ. எஸ். போன்ற பெரிய உத்தியோகங்களுக்குப் போக முதலில் அதற்கான எழுத்துப் பரீட்சையில் தேற வேண்டும். பிறகு நேருக்கு நேர் போட்டிப் பரீட்சை. இதற்கு டெல்லிக்குச் செல்ல வேண்டும். அங்கே 'பப்ளிக் ஸர்விஸ் கமிஷன்' என்ற கோஷ்டி இந்தப் பரீட்சையை நடத்தும். இந்தக் கமிஷன் கோஷ்டியில் மொத்தம் பதி







ஒரு பேர்கள் இருப்பார்கள். அர்த்த சந்திர வடிவமாகப் போட்டிருக்கும் நாற்காலிகளில் அவர்கள் உட்கார்ந்திருப்பார்கள். நடுவில் கமிஷன் தலைவர் இருப்பார். அவருக்கு நேர் எதிரே பேட்டிக்குச் சென்ற பெண் உட்கார்ந்து கொள்ள வேண்டும்.

அந்தப் பதினொரு பேரும் பழுத்த அநுபவசாலிகள். பெரிய பெரிய உத்தியோகங்களில் இருந்தவர்கள், அல்லது இருந்து கொண்டு இருப்பவர்கள். அவர்கள்....மாற்றி மாற்றிப் பேருக்கு ஒரு கேள்வியாகக் கேட்பார்கள். 22, 23 வயதான ஒரு பெண் தயங்காமல் 'டக், டக்' என்று பதில் சொல்ல வேண்டும். அவர்கள் அத்தனை பேரும் ஆண்கள்.



சென்ற வாரம் ராஜ்ய சபையில் இந்தக் கமிஷனைப் பற்றிய பேச்சு எழுந்த போது ஸ்ரீமதி ராஜகுமாரி அமிர்த கௌரி முதலியவர்கள், கமிஷனில் ஒரே ஒரு ஸ்திரீ அங்கத்தினராவது இருக்க வேண்டும் என்று வற்புறுத்திக் கூறினார்கள். பதினொரு பேருமே பெண்களாயிருந்தாலோ? பேட்டிக்கு வரும் பையன் அவர்கள் கேள்விகளுக்குப் பதில் சொல்லத் திணறிப் போய் விடுவான். அவன் மூளையும் குழம்பிப்போய் விடும்.

சீன தேசத்தில் முன்னெல்லாம் ஒரு பெண் குழந்தை பிறந்ததும் அதன் கால்கள் ஒவ்வொன்றையும்ஒரு துணியினால் இறுகக் கட்டி விடுவார்கள். அதன் பயனாய்க் கால்கள்பூரண வளர்ச்சியடையாமல் சிறுத்திருக்கும். இப்படிச் செய்வதனால் முகம் அழகிடும் என்று நினைத்திருந்தார்களாம். அது அழகிட்டதோ இல்லையோ, சீன ஸ்திரீகள் முதன் முதலில் நடக்க முயலும் குழந்தைகளைப் போல 'தத்தக்க, பித்தக்க' என்று நடந்தார்கள். பெண்கள் வீட்டை விட்டு ஓடி விடாதிருக்க அப்படிச் செய்து வந்தார்கள் என்று சொல்வதுண்டு. அந்த வழக்கம் பல வருஷங்களுக்கு முன்பே நின்று விட்டது.



சீன ஸ்திரீகள் ஆடை அலங்காரப் பிரியர்கள். அதுவும் ஆடைகள் பல வர்ணங்கள் உள்ளதாயிருக்கும். அவர்கள் தேசத்தில் கம்யூனிஸ்டு அரசாங்கம் ஏற்பட்ட பிறகு வர்ணங்களோ, விதம் விதமான ஆடைகளோ எல்லாம் போய் விட்டன.

எல்லாரும் ஒரு நீல நிற நிஜார் அணிந்து, நீல நிற ஷர்ட் போட்டுக் கொள்ள வேண்டும். ஸ்திரீகள், புருஷர்கள் எல்லாருக்குமே ஒரே விதமான வர்ண ஆடை; ஒரே மாதிரியாகத் தைக்கப்பட்ட உடை. ஸ்திரீகளும் தலை மயிரை மழுங்கக் கிராப் செய்துகொண்டு விடுவதால் சில சமயம் ஒரு நபர் ஆணா, அல்லது பெண்தானா என்று சட்டென்று தெரிந்து கொள்ள முடிவதில்லையாம்.

'மாமியார்'களைப் பற்றி எழுதியிருந்தேன் அல்லவா? அதைப் படித்த ஒருவர் "ஆண்களாகிய எங்களுக்குக் கூடத்தான் மாமியார்கள் இருக்கிறார்கள். அவர்களைப் பற்றி மட்டும் ஏனோ ஒன்றும் சொல்ல வில்லை?" என்று கேட்டு எழுதியிருக்கிறார். நியாயமான கேள்வி!

நமது பண்டைய பாரத நாட்டிலே மாமியார், மாமியார் என்றால் ஒரு பெண்ணுக்குக் கணவனாக வரும் பிள்ளையைப் பெற்ற மகராஜி என்றுதான் அர்த்தம். பிள்ளைக்கு மாமியார் என்று சொன்னால்தான் அந்த அம்மாளைப் பற்றிய ஞாபகம் வரும்.

அவள் ஏதோ பெண்ணைப் பெற்று விடுகிறாள். உண்மைதான். அதை யாரும் இல்லை என்று சொல்ல வில்லை. அதை வளர்க்கிறாள். அதை ஏதோ காலேஜ் படிப்புப் படிக்க வைக்கிறாள். பாட்டு, நடனம் இவை எல்லாம் கூடச் சொல்லிக் கொடுக்கிறது உண்டு. ஐயாயிரமோ, பத்தாயிரமோ அவள் குடும்பம் கடன் வாங்கக் கூடிய அளவுக்குக் கடனாக வாங்கிக் கல்யாணத்தைப் பண்ணிக் கொடுத்து விடுகிறாள். அப்புறம் பண்டிகைகளின் போது ஏதோ எவர்சில்வர் பாத்திரம், ஏதோ இரண்டு தங்க நகை, ஏதோ பட்டுப் புடவைகள் வாங்கிக் கொடுக்கிறாள். அப்புறம் பிள்ளை பெற அழைத்துக் கொண்டு வந்து திரும்ப அழைத்துக் கொண்டு போய் விடுகிறாள். உடம்பு சரியா யில்லாதிருந்தால்

அழைத்துக் கொண்டு வந்து வைத்தியம் பார்த்துக் குணப்படுத்தி அனுப்புகிறாள்.

'எல்லாவற்றையும் பெண்ணுக்குக்கொண்டு போய்த் திணிக்கிறாள்' என்று பிள்ளைகளின் மனைவிகள் இவர்களைப் பற்றிக் குறை கூறுவது வழக்கம். பேரன், பேத்தி பிறந்து விட்டாலோ தலை கால் புரிவதில்லை. அவள் அவற்றைத் தன்னுடையதாகப் பாவிக்கலாமே யன்றி அவற்றுக்கு உரிமை கொண்டாட முடியாது என்பது அவளுக்குத் தெரிவதில்லை. பெண்ணின் மாமியார் தன்னை எப்படி 'மூஞ்சியால் அடித்தாலு'ம் அதைப் பொறுத்துக் கொண்டு சிரித்துக் கொண்டு போகிறாள். எல்லாம் பெண் நன்றாய், சந்தோஷமாய் இருக்க வேண்டுமென்பதற்காகவாம். ஆகையினால் தான் பெண்ணின் தாயாரான மாமியார் எனப்பட்டவளை ஓர் அரைப் பைத்தியமாகக் கருதி அவளுக்கு அதிகம் மதிப்புக் கொடுப்பதில்லை.

ஆனால், அதே அம்மாள் தன் பிள்ளைக்குப் பெண் கொடுத்த வீட்டாரிடம் இதே பாடத்தைத் திருப்பிப் படிக்கிறாள்.

வெள்ளைக்கார தேசங்களில், முற்றிலும் வேறு விதம். அங்கே பிள்ளையாண்டான் கல்யாணமான இருபத்து நான்கு மணி நேரத்துக்குள் தனிக் குடித்தனம் வைக்க ஒரு வீடு பார்த்து விட்டே பெண்ணின் விரலில் மோதிரம் மாட்டுவதற்கு மாதா கோவிலுக்குச் செல்வான். அவனது தாயார் அவனிடம் ஒரொரு சமயம் வந்து இருப்பதுண்டு. ஆனால் பெண்ணின் தாயார்தான் அதிகமாக வந்து தங்கியிருந்து, வீட்டில் அதிகாரமும் செய்வாள். உண்மையில் அப்படி நடந்து கொள்கிறாளோ இல்லையோ, பிள்ளையின் அந்த மாமியாரைப் பற்றித்தான் அங்கே அதிகம் பரிகசித்துப் பேசுகிறார்கள்.

முதல் உலக யுத்தத்தில் மார்ஷல் பாஷ் என்பவர் பிரெஞ்சு சேனாதிபதியாக இருந்தவர். அவர் ஒரு சமயம் அமெரிக்காவில் உள்ள கிராண்டு கான்யான் என்ற இடத்துக்குப் போயிருந்தார். அங்கே இரண்டு செங்குத்தான மலைச் சரிவுகளுக்கு நடுவே கீழே பள்ளத்தாக்கு இருக்கிறது. 6000 அடிக்குக் கீழே அந்தப் பயங்கரமான சரிவைப் பார்த்து வியந்து கொண்டே யிருந்த அவர் தம்மை மறந்து கூறினார்:

''ஆஹா! நமது மாமியார்களை உருட்டித் தள்ளுவதற்கு எவ்வளவு சிறந்த இடம்!''

இன்னொரு கதை. ஒரு கிராமத்தில் ஒரு மைதானத்தில் ஒரு பசுமாடு நின்று கொண்டிருந்தது. ஒரு சிறுமி அதன் கழுத்தைப் பிடித்துக் கொண்டு அதைத் தட்டிக் கொடுத்துக் கொண்டிருந்தாள். வேறு சிலரும் அங்கேயே வேலை செய்து கொண்டிருந்தார்கள். அப்போது ஒரு பெரிய முரட்டுக் காளை நாலு கால் பாய்ச்சலில் ஓடி வந்து கொண்டிருந்தது. எல்லோரும் விழுந்தடித்து ஓடி விட்டார்கள். அந்தப் பெண் மட்டும் பசுமாட்டைக் கொஞ்சிக் கொண்டே யிருந்தது. ஓடிப் போனவர்கள், அந்த வெறி பிடித்த காளை அவளை என்ன செய்து விடுமோ என்று தவித்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் அது அந்தப் பெண் இருந்த இடத்துக்குச் சற்றுத் தூரத்தில் வந்ததும் நின்றது. பிறகு திரும்பி ஓடிப்போய் விட்டது. உடனே மற்றவர்கள் வந்து அந்தப் பெண்ணின் தைரியத்தை வியந்தார்கள். அந்தப் பெண் அந்த ''வெறி பிடித்த காளை என்னை ஒன்றும் செய்யாது என்று எனக்குத் தெரியும். ஏனென்றால், நான் தட்டிக் கொடுத்தது அதன் மாமியார் பசுமாடாக்கும்!'' என்று பதில் அளித்தாள்.

## மத்தில்லாமல் வெண்ணெய் எடுக்க

எதிர்த்த வீட்டில் உள்ள சரஸ்வதி என்ற பெண்ணை ஒரு நாள் பார்க்கப் போயிருந்தேன். அவள் இடுப்பில் குழந்தையை வைத்துக் கொண்டு ஒரு கையால் அதை அணைத்துக் கொண்டு இன்னொரு கையால் ஒரு பாட்டிலைக் குலுக்கிக் கொண்டிருந்தாள். அது குழந்தைகளுக்குப் பால் கொடுக்கும் 'பீடிங்' பாட்டில். வளைவாக இருக்குமே, பழைய தினுசு, அது அல்ல. சாதாரண பாட்டில்கள் மாதிரி அதற்குள் வெள்ளையாகத் தண்ணீர் இருந்தது.

''அது என்ன? குழந்தை புட்டி மாவா?'' என்று கேட்டேன்.

''இல்லை'' என்றாள்.

''நல்ல வெள்ளையாயிருக்கிறதே பாலா?''

''இல்லை!''

''மோரா?''

''இல்லை.''

''பின்னே, என்னதான் சொல்லேன்!'' என்று சற்றுக் கோபத்தை வரவழைத்துக் கொண்டு கேட்டேன்.

''வெண்ணெய் எடுத்துக் கொண்டிருக்கிறேன். எனக்கு இதைப் பற்றிச் சொன்னவளும் முதலில் ரொம்பக் கிராக்கி பண்ணிக் கொண்டு அப்புறம்தான் சொன்னாள்!'' — என்று சிரித்துக் கொண்டு கூறினாள். பிறகு விவரம் தெரிவித்தாள்.

தோய்த்த தயிர் மேல் படிந்திருக்கும் ஆடையை மேலாக எடுத்து இந்தப் பாட்டிலில் போட்டேன். முக்கால் டம்ளர் தண்ணீர் விட்டேன். மூடி விட்டுக் குலுக்கிக் கொண்டிருக்கிறேன்.''

''எத்தனை நாழியாக!'' என்று கேட்டேன்.

''நாழியாவது! ஐந்து நிமிஷமாயிற்று. அவ்வளவுதான்'' என்று கூறிப் பாட்டிலைத் திறந்து ஒரு பாத்திரத்தில் கொட்டினாள். மேலாக வெண்ணெய் மிதந்து கொண்டிருந்தது. அதை எடுத்து ஒரு கிண்ணத்தில் போட்டாள்.

கற்சட்டி, மத்து, கயிறு, கடைகிறது என்ற ஆர்ப்பாட்டம் எதுவும் இல்லை. சுலபமாக வெண்ணெய் எடுக்க முடிகிறது. குழந்தைகளை விட்டுக் குலுக்கச் சொல்லலாம். வீட்டுப் புருஷர்கள் செய்தால் அவர்கள் கைக்குத் தேகப் பயிற்சி ஏற்படும். அவர்களுக்குப் படபடப்புக் குறைந்து நிதானம் ஏற்படும்! பாட்டில் பிளாஸ்டிக் மூடியுள்ளதாயிருப்பது நல்லது.

# பால ஜோஸ்யம்

க.ரா



**[வான வீதியில் உள்ள ராசிகளில் புகுந்தும், வெளி வந்தும் கண்ணு மூச்சியாடும் கிரகங்கள், வயதில் பெரியவர்களான அரசியல்வாதிகள், வக்கீல்கள், வியாபாரிகள், டாக்டர்கள் மற்றும் குடும்பஸ்தர்களைத் தான் பாதிக்குமா, என்ன? சின்னஞ் சிறு குழந்தைகளையும், பள்ளியில் படிக்கும் மாணவ மாணவிகளையும் அவை ஒன்றுமே செய்யாவா? எனக்குத் தெரிந்த ஒரு பால ஜோஸ்யரைக் கலந்து கொண்டு இந்தப் பலன்களை யெல்லாம் எழுதியிருக்கிறேன்.]**

**மேஷம்:** கிரகங்களின் நிலையைப் பார்க்கும் போது இந்த ராசியில் பிறந்த குழந்தைகளுக்கு இந்த மாதம் ராசியில்லை என்றே சொல்ல வேண்டும். எதிர்பார்க்கும் அளவுக்கு ஐஸ் ப்ரூட், சாக்லெட் கிடைப்பது சிரமம். பள்ளிக்கூடத்தில் பிரப்பம் பழம் கிடைக்கத்தான் வாய்ப்பிருப்பதால் உபாத்தியாயர்கள், முக்கியமாகக் கணக்கு வாத்தியார் விஷயத்தில் சற்று எச்சரிக்கையாக இருப்பது நலம். முதல் பத்து நாட்கள் அப்பா அம்மா சொல்படி நடந்து விடுவது உத்தமம். சுக்ரன் சிம்மத்தில் பிரவேசித்து விட்டபடியால் இந்த ராசி குழந்தைகளுக்கு இந்த மாசம் சினிமா பிராப்தி கிடையாது. பெண் குழந்தைகள் இந்த மாதம் பச்சை, நீலம், வெப்பு வர்ணங்களில் ரிப்பன்கள் வைத்துக் கொண்டால் நல்ல பலன் ஏற்படும்.

**ரிஷபம்:** இந்த ராசிக் குழந்தைகளுக்கு இந்த மாதம் பாதகமாகவே இருக்கும். கைக் குழந்தைகளுக்கு ஜலதோஷம் அடிக்கடி பிடித்து மூச்சுத் திணறும். தொட்டிலேயோ, தூளியையோ நேராகவோ, குறுக்கிலேயோ ஆட்டினால் கூட இரவு முழுதும் தூங்க மாட்டா. இந்த ராசித் தூளிக் குழந்தைகளினால், பகலில் வீடு நிர்த் தூளிதான். மாதத்தின் 3,8,11,17,21,25,29 தேதிகள் சாதகமற்றவை. 9,19 தேதிகள் மட்டும் சாதகமானவை. மற்ற தினங்கள் இரண்டும் கெட்டான பலனையே தருபவை.

**மிதுனம்:** இந்த ராசியில் பிறந்த இரட்டைக் குழந்தைகளுக்குக் கூட இந்த மாதம் சாதகமாக அமையவில்லை. தின்பண்டங்கள் மிகக் குறைவாகவே கிடைக்கும். அம்மாவோ பாட்டியோ பட்சண அலமாரியின் பக்கமாகவே சஞ்சரித்துக் கொண்டிருப்பார்கள். பெண் குழந்தைகளுக்கு நிறையப் பூ கிடைக்கும். தாழம் பூ பின்னலில் தைத்துக் கொள்வது நல்லது. சிறுவர்கள் காரணமில்லாமலேயே பெஞ்சி மேல் நிற்க நேரிடலாம்.

**கடகம்:** ஏழில் சனியும், ஒன்பதில் குருவும் இருப்பதால் இந்த மாதக் கடக ராசிக் குழந்தைகளுக்கு மிகவும் பிரமாதமாக அமைந்திருக்கிறது. அப்பா போட்டுக் கொடுக்கும் வீட்டுக் கணக்குகளும் அம்மா வரைந்து கொடுக்கும் தேசப் படமும் சரியாக இருப்பதாகப் பள்ளிக்கூட வாத்தியார்கள் பாராட்டுவார்கள். பிறந்து மூன்று மாதங்களுக்கு மேல் ஆகாத குழந்தைகளுக்கு இரண்டு கை நிறைய ரூபாய் நாணயங்களும், ஸில்க் சட்டைகளும் கிடைக்கும். எட்டு, பத்து வயது எட்டிய பெண் குழந்தைகளுக்குப் பரதநாட்டியக் கச்சேரி பார்க்கும் வாய்ப்புக் கிடைக்கும்; ஒன்றிரண்டு பெண்களுக்குப் பரதத்தில் பயிற்சியே கிடைக்கலாம். எதற்கும், 3,13,8,18 தேதிகளில் எச்சரிக்கையாக இருப்பது அவசியம்.

**சிம்மம்:** இந்த ராசியில் செவ்வாய் இருப்பதால் ஓடியாடும் குழந்தைகள் கீழே விழுந்து உதட்டில் பல் பொத்துக் கொண்டு வாயெல்லாம் சிவப்பாகக் காட்சியளிக்க ஏது உண்டு. மற்றக் கிரகங்களின் நிலைமையைக் கவனித்தால் இந்த ராசிச் சிறுவர் சிறுமியர்களுக்கு மிச்ரமான பலனே சொல்ல வேண்டும். பக்கத்து மாணவன் மாணவியைப் பார்த்துக் காப்பி அடிப்பது இந்த மாதத்தில் கட்டாயம் தவிர்க்க வேண்டும். டியூஷன் உபாத்தியாயர்களால், சில குழந்தைகளுக்கு இந்த மாதத்தில் உபத்திரவம் ஏற்படும். 20,29,30 தேதிகள் நல்ல பலனைத் தரும். பெண் குழந்தைகள், ஜடைபில்லை, கைவளை, கம்மல் போன்ற நகைகளைத் தொலைக்கலாம்.

**கன்னி:** மாத ஆரம்பம் பிரகாசமாக இருப்பதைப் போலவே மாதம் முழுதும் இருக்காது. செவ்வாய் கன்னியிலும் பிரவேசிப்பது ஒரு காரணம் என்றாலும் ஐந்தில் உள்ள சனியன் பார்வையும் இதற்குக் காரணம். 'கோழி' சொல்லும் சகபாடிகளிடம் இந்த மாதத்திலாவது ஜாக்கிரதையாகப் பழகுவது உசிதம். பிறந்த போது, வண்டு போல்வளர்ந்திருந்த கைக் குழந்தைகளின் கேசம் பெரும்பாலும் உதிர்ந்து தலை வெள்ளை உருண்டையாகச் சில

குழந்தைகளுக்குக் காட்சியளிக்கும். சில குழந்தைகளுக்குச் சடை போடும். பெண் குழந்தைகள் பல்லாங்குழியும், சிறுவர்கள் கிரிக்கெட்டும், இந்த மாதம் ஆடுவதில் தீங்கில்லை.

**துலாம்:** துலா ராசிக் குழந்தைகளுக்கு நன்மை தூக்கலாகவே இருக்கும் மாதம் இது. 'விளக்கெண்ணெய் சாப்பிடு', 'எண்ணெய் தேய்த்துக்கொள்' என்ற தாயாரின் உபத்திரவம் இந்த மாதம் மிகவும் குறையும். தந்தை அடிக்க வந்தால், தாயார் அணைக்கவும், தாயார் அடிக்க வந்தால் தந்தை தடுக்கவுமாக இந்த மாதம் இந்த ராசிக்குழந்தைகள் பாடு குஷிதான். கிரிக்கெட், கால்பந்து, ஸ்கிப்பிங், பாண்டி ஆடும் சிறுவர் சிறுமியர் தடுக்கி விழுந்து கைகால்களில் காயம் ஏற்பட ஏது உண்டு. மாதத்தின் 10, 20, 30 தேதிகளில் எச்சரிக்கை தேவை.

**விருச்சிகம்:** பெரியவர்கள் வாலை ஒட்ட நறுக்கவும், முதுகில் சரியான சாத்துக் காப்புக் கொடுக்கவும் தயங்க மாட்டார்கள் விஷமம் செய்யும் இந்த ராசிக் குழந்தைகள் விஷயத்தில். பழம் பறிப்பதற்காக மரம் ஏறுவது கூடாது. கைக் குழந்தைகளுக்குத் தினமும் திருஷ்டி சுத்திப் போடுவது நலம். பெண் குழந்தைகளுக்குத் தலை மயிர் உதிர்ந்து போய்ப் பின்னல் தேள் கொடுக்கு போலக் காட்சியளிக்கலாம்.

**தனுசு:** தென்னங் குச்சியை வளைத்து வில்லாகவும், துடைப்பக் குச்சியை அம்பாகவும் உபயோகித்து விளையாடும் ஆவல் இந்த ராசிக் குழந்தைகளுக்கு இயற்கைதான் என்றாலும், கிரகங்கள் இருக்கும் நிலையை ஆராயும் போது இந்த மாதம் இந்த வேடிக்கையைத் தவிர்ப்பது நல்லது. மீறி இதில் ஈடுபடுகிறவர்களுக்குப் பெற்றோர்களிடமிருந்து தண்டனை கிடைக்கும். பளீன் சடுகுடு விளையாட்டு இந்த ராசிச் சிறுவர்களுக்கு ஏற்றது.

**மகரம்:** தாத்தாவின் கைத்தடி, கண்ணாடி, பொடி டப்பி போன்ற பொருள்களைச் சமயத்துக்குத் தேடித் தந்து உதவும் குழந்தைகளுக்குப் பெரியவர்களின் ஆசிகள் நிறையக் கிடைக்கும். சிறு குழந்தைகள் குழாயடியில் நனைவது கூடாது. ராசியில் சனி வக்ரமாவதால், நடக்கக் கற்ற சில குழந்தைகள், நடையை மறந்து மீண்டும் தவழத் தொடங்கலாம். சைக்கிள் விடக் கற்றுக் கொள்ளும் சிறுவர்கள் முழங்காலில் அடிபட ஏது உண்டு. எக்காரணம் கொண்டும் டபிள்ஸ் போவது கூடாது. பெண் குழந்தைகள் மல்லிகை சூடுவது நல்லது. சாமந்தி மலர் அணிவது கூடாது. 2, 12, 22 தேதிகள் முக்கியமானவை.

**கும்பம்:** இந்த ராசிக் குழந்தைகளுக்கு யோகமான மாதம் இது. வீட்டுக் கணக்கு, வியாஸம் போன்ற தலை வலிகள் இல்லாமலே இந்த மாதம் கழியும். நிறைய கூல் டிரிங்க்ஸ் கிடைக்க வாய்ப்பு உண்டு. சிலருக்கு புரூட் ஸாலட் ஐஸ்கிரீம் கூடக் கிடைக்கலாம். புதுச் சட்டை பாவாடை கிடைப்பதற்கான கிரக நிலை அமைந்திருக்கிறது. பச்சை, நீலம் இரண்டு வர்ணங்களும் ராசிக்காரர்களால் விலக்கப்படுவது உத்தமம். 29, 30 தேதிகளில் மட்டும் எச்சரிக்கை தேவை.

**மீனம்:** இந்த மாதத்தில் குழந்தைகளுக்கு நிறைய வேலை செய்யும் தொந்தரவுகள் ஏற்படும். பெண் குழந்தைகளுக்கு அம்மாவின் உடல் நிலை பாதிப்பதால், வீட்டு வேலைகள் அதிகமாகும். சமையல் செய்ய வேண்டிய நிர்ப்பந்தமே ஏற்படலாம். சிறுவர்களுக்குக் கடை கண்ணிகளுக்குப் போய் மளிகைச் சாமான் சுமக்க நேரிடும். குரு ராசியில் சஞ்சரிப்பதால் பள்ளிக்கூடப் பாடங்கள் விஷயத்தில் யாதொரு குந்தகமும் ஏற்படாது. சம்பங்கி மலர் அதிர்ஷ்டமுடையது.

## – – ரொட்டி காட்டிய உறவு! – – – – – – – – – – – – – – – – – – – –

சங்கரலிங்கமும், காபுலிவாலாவும் மிகவும் நெருங்கிய நண்பர்கள். இருவரும் இராணுவத்தில் வேலை பார்த்து வந்தார்கள்.

ஒரு நாள் காபுலிவாலா, தம் நண்பனைத் தம் வீட்டுக்கு விருந்துக்கு வரும்படி அழைத்தார். சங்கரலிங்கமும் சாப்பிடச் சென்றார்.

நண்பர்கள் சாப்பிட உட்கார்ந்தார்கள். காபுலிவாலாவின் மனைவி வந்தாள். ஆனால் சங்கரலிங்கம் அவளைப் பார்க்க முடியவில்லை. ஏனென்றால், பெண் முகத்திரை அணிந்திருந்தாள்.

அவள் கையிலிருந்த தட்டைப் பார்த்ததுமே சங்கரலிங்கம் திடுக்கிட்டார். ஏனென்றால், அதில் சப்பாத்தி ரொட்டி ஏழெட்டு இருந்தது. ஒன்றொன்றும் யானை இரட்டையடி அளவுக்கிருந்தது; தடியாயுமிருந்தது.

அதில் அவள் இரண்டை எடுத்து அவர் இலையில் வைக்க வந்த போது, "பாதி போதும், என்னால் அதற்கு மேல் தின்ன முடியாது" என்று தமது சாப்பாட்டுத் தட்டின் மீது சாய்ந்து கொண்டார்.

நண்பர் கூறியதைக் காபுலிவாலா தமது மனைவியினிடம் புஷ்டு பாஷையில் மொழிபெயர்த்துச் சொன்னார். அந்த அம்மாள் அரைச் சப்பாத்தியைப் போட்டாள். தனது கணவனின் இலையில் இரண்டை வைத்து விட்டுப் போனாள்.

சிறிது நேரம் கழித்து அவள் மறுபடியும் ரொட்டித் தட்டுடன் வந்த போது சங்கரலிங்கம் ஒரு விதமாக அரை ரொட்டியுடன் போராடி முடித்திருந்தார். காபுலிவாலாவின் தட்டு காலியாகி யிருந்தது. அவர் மனைவி அவருக்கு இன்னும் இரண்டு ரொட்டியைப் போட்டு விட்டுப் போனாள்.

அவளைக் கவனித்துக் கொண்டே இருந்த சங்கரலிங்கம் ஆச்சரிய முற்றிருந்தார். ஏனென்றால் இப்பொழுது அவள் முகத்தில் முகமூடியில்லை. அவள் என்ன நம்மை நெருங்கிய உறவினனாகக் கருதி விட்டாளா என்று நினைத்தார். நண்பர் மனத்திலிருந்ததை ஊகித்த காபுலிவாலா சொன்னார்:

"நீ அரை ரொட்டியே அதிகம் என்று சொன்னாயல்லவா? எங்கள் வீட்டுச் சின்னப் பையனும் அவ்வளவுதான் தின்பானும். ஆகையால் உன்னை பச்சா (சிறு பிள்ளை) என்று நினைத்துக் கொண்டிருக்கிறாள்."

# பத்தினிக் கோட்டம்

ஜெகசிற்பியன்

## அத்தியாயம் பதின்மூன்று

## மழையில் வந்த மறலி

சிவிகையின் நூலாக் கலிங்கத் திரையை விலக்கிவிட்டு வெளியே தலை நீட்டிய இளங்கோப்பிச்சி, "இது தவத் துறைச் சாலை அல்லவா? ஏன் இந்தப் பக்கம் போகிறாய்?" என்று கடுகடுத்த குரலில் கேட்டாள்.

"ஆம், அம்மணி! பழையாறைக்குப் போக இதுதான் நேர்ப் பாதை" என்று மூச்சு இரைக்கக் கூறினான் சம்புவராயன்.

"நான் பழையாறைக்குப் போவதாக யார் உன்னிடம் சொன்னது?"

திடுக்குற்ற சம்புவராயன், "என்ன இளவரசி?...." என்று திகிலுடன் வினவினான்.

"பெருவளநல்லூருக்குப் பயணமாகியிருக்கிறேன்; அந்தச் சாலையில் சிவிகையைத் திருப்பிப் போக விடு!"

"தங்களைப் பழையாறை அரண்மனைக்கு அழைத்துச் செல்லுமாறு தங்களின் தந்தையார் எனக்குக் கட்டளையிட்டிருக்கிறார், தாயே!"

"அது அவருடைய கட்டளை; இது என்னுடைய விருப்பம்."

"இளவரசியார் பெருவளநல்லூரில் எங்கே செல்ல விரும்புகிறார்?...."

"சேதியக் கலைஞர் பரவாதிமல்லரின் இல்லத்துக்குப் போக வேண்டும்."

"யுத்தத்துக்கு முன்னதாகவே அந்தக் கலைஞரின் இல்லம் சளுக்கியரால் இடித்துத் தகர்க்கப்பட்டு விட்டதை இளவரசியார் கேள்விப்பட வில்லையா?"

"எனக்கு அது தெரியும்! ஆனால் சேதியக் கலைஞர் அந்த ஊரில்தானே இருக்கிறார்?"

"அப்படித்தான் கேள்விப்பட்டேன், அம்மணி!"

"ஆந்திர இளவரசி உத்தமசீலியும் இப்போது அவருடன்தானே தங்கி இருக்கிறாள்?"

"அந்த விஷயம் எனக்குத் தெரியாது, தாயே!"

"சரி; அங்கு போய்க் கலைஞரின் இருப்பிடத்தை விசாரித்துத் தெரிந்து கொள்ளலாம். புறப்படு."

"மன்னிக்க வேண்டும், இளவரசி!" என்று தயங்கித் தடுமாறினான் சம்புவராயன்.

"பெருவள நல்லூருக்கு என்னை அழைத்துப் போக மாட்டாய்; அப்படித்தானே?" என்று சீற்றத்துடன் வினவினாள் இளங்கோப்பிச்சி.

"இந்த ஏழையைக் கோபிக்காதீர்கள் தாயே! தங்கள் தந்தையாரின் ஆணைப்படி நடந்து கொள்ள என்னை அநுமதியுங்கள் அம்மணி!"

"ஓகோ!.... ம்.... உன் அரசரின் ஆணைப்படியே நீ நடந்து கொள்ளலாம்; ஆனால், என் விருப்பப்படி நான் செல்



வதை நீ தடுக்கக் கூடாது. சோழ இளவரசியின் ஆணை இது. சிவிகையைக் கீழே இறக்கி வைக்கச் சொல்.''

''வேண்டாம், இளவரசி!'' என்று பயந்து நடுங்கிய சம்புவராயன் ஒரு கண யோசனைக்குப் பின், ''ஆகட்டும், தாயே! ஆனால்.... பெருவளநல்லூருக்குப் போய்ச் சேதியக் கலைஞரைப் பார்த்த பிறகு அங்கிருந்து பழையாறைக்குப் பயணமாகி விடுவீர்கள் அல்லவா?'' என்று திணறிக் கேட்டான்.

''அதைப் பற்றி இப்போது ஒன்றும் சொல்ல முடியாது!'' — திரையை இழுத்து மூடினாள் இளவரசி.

கவலையுடன் தலையசைத்துக் கொண்ட சம்புவராயன், பெருவளநல்லூர் சாலையில் திரும்பிச் செல்லுமாறு சிவிகை தூக்கிகளுக்குக் கட்டளையிட்டு விட்டு, ஈட்டியும் தீப்பந்தமுமாக முன்னால் நடக்கலானான்.

இரண்டாம் சாமம் முடிவடைந்து மூன்றும் சாமமும் ஆரம்பமாகி விட்டது. வெறிச்சோடிக் கிடந்த அந்த விசாலமான நெடுஞ்சாலையில் வெகு வேகமாகச் சென்று கொண்டிருந்தது சிவிகை. பெருவளநல்லூரை அடைய இன்னும் மூன்று குரோசத் தூரத்தைக் கடந்தாக வேண்டும்.

ஆனால் அதற்குள்ளாகவே இருண்டு கிடந்த வானத்தில் வரிப் புலிகள் பாய்ந்தன; வேழங்கள் வெருண்டோடின; பல நூறு பொதிய மலைகள் திரண்டு உருண்டு குவிந்தன. கீழ்த் திசை வான்வெளி போர்க்களமாக மாறியது. அங்கே ஒரு நீண்ட நெருப்பு வாளின் வேக வீச்சு!

வானம் குமுறிக் கும்மாளியிட்டது. இடியும் மின்னலும் முட்டி மோதி வெட்டிப் பிளந்தன. சூறைக் காற்று சுழன்றடித்தது.





கடனுக்கு அலைபவர்: "என்ன சார் உங்களை எப்ப வந்து பார்த்தாலும் நீங்கள் வீட்டில் இருப்பதில்லை...... என்ன காரணம்?"

பெரியவர்: "என் அதிர்ஷ்டம் தான் காரணம்."

சற்றைக்கெல்லாம் வருண தேவனின் வயிறு வெடித்து விட்டது! வானம் திடீரென்று பொத்துக்கொண்டு விட்டது! மழை, பலத்த மழை!

சிவிகையின் திரைச் சீலை படபடத்தது. சிவிகை தூக்கிகள் தடுமாறினர். சம்புவராயனின் கையில் இருந்த தீப்பந்தம் மழையில் நனைந்து அணைந்தது.

"சீக்கிரம் போங்கள்! விரைந்து செல்லுங்கள்!" — கீச்சுக் குரலில் கூவினாள் இளங்கோப்பிச்சி.

ஆயிரமாயிரம் அசுரர்கள் அனந்த கோடி ஜலக் கயிறுகளைத் தொங்க விட்டுப் பூமாதேவியை இறுக்கிப் பிணைத்து மேலே தூக்க முயலுவது போன்ற அத்தனை பயங்கரமான மழை பெய்ய ஆரம்பித்தது. அவ்வப்போது இடியும் மின்னலும் வெடித்துப் பிளந்து விண்ணையும் மண்ணையும் கிடுகிடுக்கச் செய்தன. அறுபடாத மழைக் கம்பிகளை அறுக்க முயன்று தோல்வியுற்ற சுழற் காற்று தன் கோபத்தைப் பெரிய பெரிய மரங்களின் மீது காட்டத் தொடங்கியது. எங்கும் சடசடாரென்ற பேரொலி! மளமளாரென்ற முறிவுப் பெருமுழக்கம்!

தெப்பமாக நனைந்து விட்ட சிவிகை தூக்கிகள் மேலே நடக்க முடியாமல் திணறித் தடுமாறினர். வெடவெடத்தவாறு ஓடி வந்த சம்புவராயன், "இளவரசி! மழை வலுத்துவிட்டது. சாலையிலுள்ள மரங்கள் முறிந்து சாய்கின்றன. இனியும் பயணத்தைத் தொடர்வது ஆபத்து" என்று பதறினான்.

திகிலால் பிரமித்து உட்கார்ந்திருந்த இளங்கோப்பிச்சி, "ஆமாம், சம்புவராயா! எங்கேயாவது சற்று நேரம் தங்கியிருக்க இடம் இருக்கிறதா, பார்!" என்று உள்ளார்ந்த நடுக்கத்துடன் சொன்னாள்.

சம்புவராயன் அங்கு மிங்குமாகத் தன் பார்வையைச் செலுத்தினான். சாலையின் வலப் பக்கம், ஒரு புன்னை மரத்துக்குப் பின்னால் ஏதோ கருங் குன்றம் போல் தென்பட்டது. அவன் பரபரப்புடன் அங்கே ஓடிப் பார்த்தான். மின்னல் ஒளியில் அது ஒரு பாழடைந்த மண்டபம் என்பது புலனாகியது. ஆனால் அதிலே மனிதர் தங்கி நிற்க முடியுமா என்ற சந்தேகமும் எழுந்தது.

அவன் அந்த மண்டபத்தை நோக்கி விரைந்து சென்றான். இடிந்து பாழ்பட்டுக் கிடந்த மண்டபத்தின் முன் பகுதி ஓரளவு நல்ல நிலைமையிலேயே காணப்பட்டது. ஐந்தாறு பேர் மழைக்கு ஒதுங்கி நிற்கலாம். அங்கே சோழ இளவரசியை அழைத்து வந்து இருக்கப் பண்ணத் தோதான ஓர் இடத்தைப் பார்ப்பதற்காகப் படிகளில் ஏறிய சம்புவராயன் திடுக்குற்றுப் பின்னால் நகர்ந்தான். காரணம், அந்த மண்டபத் தாழ்வாரத்தில் யாரோ இருவர் சுருண்டடித்துப் படுத்துக் கிடப்பது தெரிந்தது.

வழிப் போக்கர்கள் யாரேனும் மழைக்கு ஒதுங்கியிருப்பார்களோ?

"ஏய், யார் இங்கே தூங்குவது?" என்று அதிகாரக் குரலில் அதட்டினான் சம்புவராயன்.

சட்டென்று அவ்விருவரும் எழுந்து உட்கார்ந்தனர். இச்சமயம் ஒரு மின்னல் பளிச்சிடவே அந்த ஒளியில் அவ்விருவரது முகமும் தெரிந்தன. சந்தேகமில்லை; சளுக்கிய இளவரசன் விநயாதித்தனும், சளுக்கிய வீரன் ஒருவனும் தான் அங்கே குளிரில் நடுங்கிக்கொண்டு உட்கார்ந்திருந்தார்கள்! ஆனால் அவர்களுடைய தோற்றம் இப்போது முற்றிலும் வேறு விதமாக இருந்தது; பஞ்சத்தில் அடிபட்ட ஏழைக் குடியானவர்களைப் போல் காட்சியளித்தார்கள்!

சம்புவராயனுக்கு விநயாதித்தனின் முகம் பரிச்சயமானதல்ல; ஆகவே, அவன் அலட்சியமாக அவர்களைப் பார்த்து, "நான் சொல்வது உங்கள் காதில் விழ வில்லையா? சீக்கிரம் எழுந்து போங்கள்!" என்று மீண்டும் கூவினான்.

"மழைக்கு ஒதுங்கி யிருக்கும் எங்களை ஏனய்யா விரட்டுகிறீர்கள்?" என்று பயப்பிராந்தியுடன் பரிதாபமாகக் கேட்டான் அவ்விருவரில் ஒருவன்.

"எங்கள் சோழ இளவரசியார் இங்கே மழைக்கு வந்து தங்கப் போகிறார்! உடனே வேறு இடம் பார்த்து ஓடிப் போங்கள்!"

காரிருள் கப்பிக் கிடந்த அந்த மண்டபத்தில் இரண்டு நெருப்புத் துண்டங்கள்

பளிச்சிட்டு மறைந்தன. விநயாதித்த னின் கண்கள்தாம் அப்படித் தீக் கங்குக ளாக எரிந்து அனைந்திருக்க வேண்டும்!

அவன் தன் பக்கத்தில் இருந்த வீர னின் முதுகைச் சீண்டி அவனிடம் ஏதோ கெகெகத்துவிட்டு எழுந்து, "அப்படியா ஐயா! நாங்கள் போய் விடுகிறோம்!" என்று முனகினான்.

அதே சமயம், படியில் நின்ற சம்புவராயன் தன் உடம்பைத் திமிறி நெம்பினான். அவனுடைய வாயை ஓர் இரும்புக் கரம் இறுகப் பொத்தியது. சளுக்கிய வீரன்தான் அவனை அவ்வாறு பாய்ந்து சென்று வாயைப் பொத்தி இறுக்கிப் பிடித்துக்கொண்டு அவனது கையில் இருந்த ஈட்டியையும் பந்தக் கோலையும் பிடுங்கி எறிந்தான். விநயா தித்தன் விரைந்து போய் அவனுடைய வாயில் துணியை வைத்து அடைத்து இரு கைகளையும் பின்னுக்குச் சேர்த்து ஒரு தூணில் கட்டினான். பிறகு தன் வீர னிடம் ஏதோ இரகசியமாகச் சொல்லி அவனை மண்டபத்துக்குப் பின் புறமாக வெளியேற்றி விட்டு, சம்புவராயனிட மிருந்து பிடுங்கப்பட்ட ஈட்டியையும் தீவட்டிக் கம்பையும் எடுத்துக்கொண்டு, கொட்டும் மழையில் சாலையில் நின்றி ருந்த சிவிகையை நோக்கி நடந்தான்.

குரல் எழுப்பவும் முடியாமல் மூச்சுத் திணறிய சம்புவராயன் தூணிலே கட்டுண்ட நிலையில் புழுப் போல் நெளியலானான்.

"என்ன சம்புவராயா! தங்குவதற்கு எங்கேனும் இடம் கிடைத்ததா?" என்று அவசரமாக வினவினாள் இளங்கோப்பிச்சி.

இருட்டில் தலையைக் குனிந்து கொண்டு மழையிலே நனைந்து வந்த விந யாதித்தன் சிவிகைக்குச் சற்றுத் தொலை விலேயே நின்று, "இங்கே அப்படி எந்த இடமும் இல்லை, இளவரசி!" என்று அடித் தொண்டையில் கரகரத்தான்.

"பின்னே ஏன் நேரத்தை வீணாக்கிக் கொண்டிருக்கிறாய்? மேலே செல்! வேறெங்காவது இடம் இருக்கிறதா, பார்ப்போம்!" என்று சீறினாள் இளங் கோப்பிச்சி.

சிவிகை புறப்பட்டது. அதன் பக்க வாட்டில் நடந்து வந்த விநயாதித்தன், "ஏன் இளவரசி, நாம் போக வேண்டிய இடத்துக்குத் தானே போகிறோம்?" என்று இருமிக்கொண்டே கேட்டான்.

வெருண்டு நிமிர்ந்த இளங்கோப் பிச்சி, "என்ன சம்புவராயா! இந்த மழையிலும் உனக்குத் தூக்கக் கலக்கமா? நாம் பெருவளநல்லூர் சேதியக் கலைஞ ரைப் பார்க்கப் போகிறோம்! வழியைத் தவறவிடாமல் முன்னே நடந்து செல்!" என்று கூவினாள்.

விநயாதித்தனின் நடையில் திடீ ரென்று ஓர் உற்சாகம் ஏற்பட்டது. அந் தக் காரிருள் கப்பிய சாலையில், கனத்த மழையையும் பொருட்படுத்தாமல், சிவிகையைத் திரும்பித் திரும்பிப்பார்த்த வாறு வேகமாக நடந்தான் அவன்.

## அத்தியாயம் பதினான்கு

# பின்தொடர்ந்த பேய்

**சீ**ல்லடைக் கண்களாகி விட்ட வானம் அன்றிரவெல்லாம் சலிப்பின்றி மழையைச் சலித்துக் கொட்டிக்கொண் டிருந்தது. கடந்த மூன்றாண்டுக் கால மாக நிலக் குழந்தைக்குப் பாலூட்டா மல் மாற்றாந்தாய்க் கொடுமை புரிந்து பட்டினி போட்டுக் காயச் செய்த வானத் தாய், இன்று திடீரென்று அளவு கடந்த அன்பும், அளவுக்கு மீறிய பரி வும் கொண்டு, இறுக்கிக் கட்டி வைத் திருந்த தன் அமுதத் தனங்களைப் பரக்கத் திறந்து ஆவேச கதியில் பாலூட்ட முனைந்ததால், இளைத்துப் பசித்துக் கிடந்த நிலக் குழந்தை அந்தப் பாலமுதத்தை வேகமாக உறிஞ்சிக் குடிக்க மாட்டாமல் திக்கித் திணறி அவஸ்தைப் படலாயிற்று. ஆயினும் வானத் தாய் வலுக் கட்டாயமாகத் தன் குழந்தைக்குப் பாலூட்டிக் கொண்டேதான் இருந்தாள்.

சளுக்கிய ஆட்சியின் கொடுமை களால் மட்டுமின்றி மழையின்மையா லும் வற்கடத்தின் வாய்ப் பட்டுச் சீர ழிந்த பல்லவ நாடு இந்தப் பெருங் கோரப் பேய் மழையால் ஒரேயடியாக அழிந்து ஒழிந்து சூன்யமாகி விடுமோ? விடுதலை பெற்ற மகிழ்ச்சியையும் பூரண மாக அநுபவிக்காமல், 'வருணன் வரு வானா? தங்கள் வாழ்வு மலருமா?' என்று ஏக்கத்துடன் எதிர்பார்த்துக் கொண் டிருக்கும் பல்லவக் குடிமக்களைத் தன் கொடிய பிரளயக் கரங்களை விரித்துக் கூண்டோடு வாரிக்கொண்டு போகத் தான் வருணதேவன் இப்படிக் குதியாட் டம் போட்டுக் கொண்டிருக்கிறானோ?

இல்லை; விடியற் சாமம் நெருங்க நெருங்க, திசை திறந்து அண்டம் கீறிப் பொழிந்து கொட்டிய வானம் வலி யறுந்து ஓய்ந்து நின்றது. அந்த இடை விடாத மழையால் இரவின் கருமை

கரைந்து வெளுப்பது மாதிரி காலைப் போதும் மெல்ல மெல்லப் புலர ஆரம்பித்தது.

தன் வாழ்நாளில் ஒரு புதிய அநுபவத்தை அடைந்த பிரமிப்புடன், பெருவளநல்லூர் சிற்றூற்றங் கரையில் அமைந்த புதர்க் குடிலை விட்டு வெளியே வந்தாள் ஆந்திர இளவரசி உத்தமசீலி.

நேற்று மாலைவரை வெண் மணல் பரப்புக்கிடையே சுருட்டி நீட்டிய நீலச் சேலை போல் சலசலத்து ஓடிய அந்தச் சிற்றூறு இப்போது கரை மட்டத்துக்கு வெள்ளம் உயர்ந்து விசாலித்து, 'ஹோ' வென்ற இரைச்சலுடன் அலைத்து நுரைத்துப் பாய்ந்தோடிக் கொண்டிருந்தது. கரையின் சரிவில் மண்டிக் கிடந்த செடி கொடிகளும், தாழம் புதர்களும், நாணற் போத்துக்களும் நீரில் மூழ்கிப் போயிருந்தன. கரையோரம் வளர்ந்து நின்ற சில பெரிய மரங்கள் வேரோடு சாய்ந்து விட்டிருந்தன.

இந்தக் காட்சிகளையெல்லாம் வியப்பும் பிரமிப்புமாகப் பார்த்வாறு கரை மேட்டில் ஏறி நின்ற உத்தமசீலியின் மனத்தில் பீதி மயமானதோர் எண்ணம் தோன்றியது: 'இன்னும் கொஞ்ச நேரம் தொடர்ந்து மழை பெய்திருந்தால் ஆற்றின் நீர் மட்டம் உயர்ந்து கரையை உடைத்துக்கொண்டு மறுபக்கத்தையும் வெள்ளக் காடாக்கி விட்டிருக்கும்போல் இருக்கிறதே! அப்படி ஒரு நிலைமை ஏற்பட்டிருந்தால் இந்தச் சின்னஞ் சிறு புதர்க் குடிலில் தங்கியிருந்த என் கதி என்ன ஆகியிருக்கும்?'- அவளை அறியாமலே அவள் உடல் நடுங்கிக் குலுங்கியது. பொங்கிப் பிரவகித்து ஓடும் ஆற்றையும், அந்தப் புதர்க் குடிலையும் உள்ளார்ந்த பயத்துடன் மாறி மாறிப் பார்த்தாள் அவள்.

சேதியக் கலைஞர் பரவாதிமல்லர் இப்போது அங்கு இல்லை. பல்லவ மன்னன் தமக்கு அளித்த முற்றூட்டு சாசன ஓலையுடன் அவர் கூரத்துக்குப் புறப்பட்டுப் போய் விட்டிருந்தார். அவளுக்குப் பாதுகாப்பாகவும், அவளது அன்றாடத் தேவைகளைக் கவனித்துப் பணி புரியவும் நாகோதரன் மட்டும்தான் அங்கே இருந்து வந்தான். குடிலின் தாழ்வாரத்தில் முடங்கிக் கிடந்த அவன், விடியலுக்கு முன்பே எழுந்து தன் அலுவல்களைக் கவனிப்பதில் முனைந்திருந்தான்.

பொழுது நன்றாக விடிந்து விட்டது. புள்ளினங்கள் களிரசக் குரலெடுத்துக் காலை ஆராதனை செய்தன. இரவெல்லாம் மழையில் குளித்துத் தம் இலைப் போர்வைகளைச் சலவை செய்துகொண்ட மரஞ் செடி கொடிகள், பசுமை நிறப் பளபளப்புடன் இளங் காற்றில் தலையசைத்து ஈரம் உலர்த்தின. துலாம்பரமாக வெளுத்துக் கிடந்த வானப் பந்தலில் வெள்ளையும் பச்சையும் கறுப்புமான தோரண வளைவுகளைக் கட்டி விட்டாற் போல் கொக்குகளும், கிளிகளும், காக்கைகளும் வரிசை வரிசையாகப் பறந்து சென்றன. கீழ்த் திசைத் துரியத்தில் செவ்வரி படர ஆரம்பித்தது.

இந்த இனிய காட்சிகளின் லயிப்பிலே தன் மனப் பிராந்தியை மறந்து உற்சாகமடைந்த உத்தமசீலி, ஆற்றில் இறங்கி நீராடிவிட்டுத் திரும்பி வந்து புத்தாடை புனைந்து கொண்டு, அன்றொரு நாள் இரவு பரமேசுவரவர்மன் குதூகலக் கிறக்கமிட்டவளாய்ப் படுத்திருந்த அந்தக் கரை மேட்டின் மணற் சரிவுக்குச் சென்று அமர்ந்தாள். அவ்விடத்தில் அமர்ந்ததுமே அவள் மனம் ஏதேதோ இன்ப நினைவுகளில் ஆழ்ந்து மிதவையிடத் தொடங்கியது. அவ்வினிய நினைவுகளின் புறக் கழிப்புகளாக அவளது அழகிய வதனத்தில் நாணச்

சிவப்பு படர்வதும், நளினப் புன்னகை மலர்வதுமாக இருந்தன.

''இளவரசி!''

அவள் மெல்லப் பின்னல் திரும்பினள். தயக்கத்துடன் சற்றுத் தொலைவில் வந்து நின்றான் நாகோதரன்.

''நேற்றிரவு எவ்வளவு பலத்த மழை பெய்திருக்கிறது பார்த்தீர்களா, அம்மணீ?''

''ஆமாம்; விடுதலை பெற்ற பல்லவ நாட்டில் பழைய வளம் கொழிக்கப் பண்ணுவதற்காக இயற்கையன்னை தன் கருணைக் கண்களைத் திறந்திருக்கிறாள்!'' என்று மகிழ்ச்சிப் பரவசத்துடன் சொன்னாள் உத்தமசீலி.

ஒரு கணம் தயங்கிய நாகோதரன், ''இன்றிரவும் அம்மாதிரி பெருமழை பெய்தால் இந்தச் சிற்றாறு உடைப்பெடுத்துவிடுமோ என்று அஞ்சுகிறேன், தாயே!'' என்றான் தணிந்த குரலில்.

உத்தமசீலி அவனை நிமிர்ந்து நோக்கினாள்.

''தங்களைக் காஞ்சி அரண்மனைக்கு அழைத்துப் போவதற்காகப் பல்லவ மன்னரது பரிவாரம் இங்கு வரவிருக்கிறது என்பதை நான் மறந்து பேசவில்லை அம்மணீ! ஆனால் அதுவரையில் இந்தச் சிறு குடிலிலே தங்கியிருப்பது அத்தனை பாதுகாப்பாக இராது என்றே எனக்குத் தோன்றுகிறது.''

''இந்த நிலையில் நான் எங்கே போக முடியும்?'' என்று மெல்லிய குரலில் இழுத்தாள் உத்தமசீலி.

''இப்போதைக்கு இளவரசியார் இருப்பருத்திக் குன்றத்தில் போய்த் தங்கியிருக்கலாம் என்று நினைக்கிறேன். ஏனென்றால், அங்கேதான் நமது ஞானத் தலைவரான சமந்தபத்திரர் தம்முடைய திரமிள சமண சங்கத்தை ஸ்தாபித்திருக்கிறார். சேதியக் கலைஞர் பரவாதிமல்லரும் இப்போது அந்த ஊரில்தான் தங்கி யிருக்கிறார்.''

''சேதியக் கலைஞர் கூரம் என்னும் ஊருக்குப் போவதாக அல்லவா என்னிடம் சொல்லிச் சென்றார்?''

''ஆம், தாயே! ஆனால் கூரத்தில் அவர் தமக்கு ஒரு மாளிகையை அமைத்துக்கொள்ளும் வரையில் இருப்பருத்திக் குன்றத்தில்தான் தங்கியிருப்பாராம். நேற்றுத்தான் அந்த மாளிகைக்கு அஸ்திவாரம் இடப்பட்டதாம். பெருவளநல்லூரிலிருந்து ஏராளமான சிற்பிகளும், சேதியக் கலைஞர்களும் அங்கு பறப்பட்டுப் போயிருக்கிறார்கள். அவர்களில் ஒருவரின் வாயிலாகவே இவ்விவரங்களை அறிந்தேன்.''

சற்று நேரம் சிந்தனையிலாழ்ந்திருந்த உத்தமசீலி, ''சரி; இதைப் பற்றிப் பிறகு என் முடிவைத் தெரிவிக்கிறேன்!'' என்றாள்.



இளைஞர்: ''நாங்க உங்க மாதிரி இல்லே! நாங்க புது சமுதாயத்துக்குப் போயிண்டு இருக்கிறோம்.''

வீட்டுச் சொந்தக்காரர்: ''சரி! என் பழைய வாடகையைக் கொடுத்து விட்டு நீங்க எங்க வேணுமானாலும் போங்கள்.''

அப்பொழுது உத்தமசீலியின் பார்வை சற்றுத் தூரத்தில் சென்று லயித்தது. மறுகணம் அவள் முகத்தில் வியப்புக்குறி தோன்றியது. மிகவும் கவனமாகப் பார்வையை ஒரே இடத்தில் செலுத்திய வண்ணம் நின்றாள்.

இந்தச் சமயம், ஆற்றங்கரை மேட்டின் தொலைதூரத்துக்கு அப்பால் ஒரு சிவிகை வருவது தெரிந்தது.

அந்தச் சிவிகைக்கு முன்னால் வெகு வேகமாக வந்துகொண்டிருந்த ஓர் ஆடவன், சட்டென்று நின்று யாரையோ கூர்ந்து கவனிப்பதுபோல் பார்த்தான். உத்தமசீலியையும் நாகோதரனையும் தான் அப்படி அவன் பார்த்திருக்க வேண்டும். பிறகு பின்னல் திரும்பிப் பார்த்துவிட்டுச் சரேலெனக் கரை மேட்டிலிருந்து இடதுபுறமாக இறங்கிச் செடி கொடிப் புதர்களுக்கிடையே ஓடினான். அப்புறம் அவன் எங்கு சென்றான் என்றே தெரியவில்லை!

இவ்வளவையும் வியப்போடு பார்த்துக்கொண்டு சிலைபோல் நின்றாள் உத்தமசீலி. நாகோதரனே அங்கிருந்து மெள்ள நழுவி எங்கோ விரைந்து செல்லலானான்.

சற்றைக்கெல்லாம் அந்தச் சிவிகை, உத்தமசீலியின் புதர்க் குடிலுக்கு எதிரே வந்து நின்றது. அதிலிருந்து சோழ இளவரசி இளங்கோப்பிச்சி பயத்தால் உடல் நடுங்க அவசரப் பரபரப்புடன் கீழே இறங்கினாள். (தொடரும்)



# சருமப்
# பராமரிப்புக்குத்
# தகுந்த
# ஏற்பாடு
# அவசியம்...
# அதற்குகந்தவை
# 'ஹேஸலின்'
# அழகு
# சாதனங்கள்

## ஸ்னோ * கோல்ட் க்ரீம் * டால்க்

உங்கள் சருமத்துக்குத் தனிப்பட்ட அழகுப் பராமரிப்பு தரும் மூன்று வகை நறுமண அழகுப் பொருள்கள்.

* "'ஹேஸலின்' ஸ்னோ"—மேனியெழிலுக்கு மெருகூட்டி, சருமத்தைப் பாதுகாக்கிறது.
* 'ஹேஸலின்' கோல்ட் க்ரீம் ஊடுருவிச் சுத்தம் செய்து, சருமத்தை மழமழப்போடும், கட்டுத் தளரா இளமையுடனும் இருக்கச் செய்கிறது.
* 'ஹேஸலின்' டால்க் நறுமணமுள்ள சுயமான பவுடர் - பூசிக்கொண்டால்...ஆகா! என்ன குளுமை! என்ன புதுமை! என்ன புது மணம்!









பர்ரோஸ் வெல்கம் தயாரிப்புக்கள்

BWY-10-TAM.

# ஜாம்நகர் சமணக் கோயில்கள்

சைவமும் தமிழும் தழைத்திருந்தது தமிழ் நாடு என்பது உலகறிந்தது. சைவத்துடன் வைஷ்ணவமும் இணைந்து வாழ்ந்தது தமிழகத்தில் என்பதற்கு நாட்டில் அன்று தொட்டு இன்றுவரை பயிலப்படும் தேவார திருவாசகங்களும், திவ்வியப் பிரபந்தங்களும் சான்று பகரும். அப்படி இருந்தும் சைவ வைணவ வேற்றுமைகளை மிகைப்படுத்துவார் கூட்டமும் இருந்து வந்திருக்கிறது. என்றாலும் இவ்விரு பெரிய சமயங்களும் அதிகம் மோதிக் கொண்டதில்லை. அதைப் போலவே வட நாட்டில் பிறந்து இந்திய நாடு முழுதும் பரவியிருந்த சமயங்களும் இரண்டு. ஒன்று சமணம், மற்றொன்று பௌத்தம். இப்படி இருந்தும் சமணத்துக்கும் சைவத்துக்கும் எப்போதும் முரண்பாடு இருந்து வந்திருக்கின்றன. தமிழ் நாட்டுச் சைவர்கள் சமண சமயத்தை வெறுத்தனர். வாதில் சமணர்களை வெல்வதையே வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டனர். அதுகாரணமாக ஞானசம்பந்தர் சமணர்களைக் கழுவேற்றினார் என்றெல்லாம்பெருமையோடு பேசவும் முற்பட்டனர். எல்லாச் சமயங்களும் இறைவனை அடைவதற்குரிய வழிகளையே சொல்கின்றன. எந்த வழியில் சென்றாலும் இறைவனது அருளைப் பெறுவது எளிதானதே என்று எண்ணுகிறவர்கள்நாம். அதிலும் நானோ சைவ வைணவச் சண்டைகளையும், சைவ சமண வேறுபாடுகளையும் அறவே வெறுப்பவன். ஆதலால் எனது வட நாட்டு யாத்திரையில் எல்லாக் கோயில்களுக்கும் சென்றேன். அங்குள்ள தெய்வங்கள் எல்லாவற்றையுமே தொழுது வணங்கினேன். தமிழ் இலக்கியத்தை வளப்படுத்திய புலவர்களில் பலர் சமணர் என்பதை அறிந்த நான் எனது யாத்திரையில் இந்திய நாட்டின் கலை வளர்த்த பெருமையில் சமணர்களுக்கும் மிகுந்த பங்கு உண்டு என்பதையுமே உணர்ந்தேன். ஆதலால் சமண சமயக் கருத்துக்களையும் அவர்கள் கட்டிய கலைக் கோயில்களைக் காண்பதிலும் ஆர்வம் மிகுந்தவனாக இருந்தேன். சரவண பெலகோலாவில் உள்ள கோமதேசுவரர் வடிவம் எப்படி வானுற ஓங்கி வளர்ந்திருக்கிறதோ அப்படியே சமண சமயமும் சமணர்கள் வளர்த்த கலைச் செல்வங்களும் என் உள்ளத்தில் ஓங்கி உயர்ந்துகொண்டே போயின. சமண சமயத்தின் ஆதிகர்த்தர் ஜினன். எல்லாக் கருமங்களினின்றும் நீங்கி, முடிவிலா அறிவும், இன்பமும் பொருந்தி, பரமாத்ம சொரூபனாகி, பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடு என்னும் சம்சார பந்தங்களையெல்லாம் ஜெயித்தவனே ஜினன் என்றும் அறிகிறோம். சர்வஜ்ஞ தயாபரனும் தர்ம தீர்த்தகாரணனுமான ஜினனை ஏனைய ஜீவன்கள் பின்பற்றினால் மீண்டும் பரம சுகம் அடையலாம் என்பதே ஜினனைப் பின்பற்றும் சமணர்களுடைய நம்பிக்கை. கொல்லா விரதமே அவர்களின் மூல மந்திரம். பரமாத்மனே அவர்கள் தெய்வம். எல்லா உயிர்களிடத்தும் அன்பும், தயவும் பூண்டு, அவைகளுக்கு இதமே செய்தல், உண்மை பேசுவதே வேள்வி என்றும் தனக்குள் அநாதி காலமாகப் படிந்து உரம் பெற்றுள்ள கர்மமாகிற களங்கத்தினைத் தியானமாகிற அக்கினியால் எரித்து, ஒழித்து ஆத்ம சோதியைப் பெறுவதே தவம் என்றும் சம்சாரம் அநித்தியமாதலால் வீடே பெறற்பாலது, வீடு பெறும் வழி நற்காட்சி, நல்ஞானம் மூன்றும் தலைப்பட்டு நிற்பது என்றும் உணர்த்தி சத்யாத்வரதம் எனப் பெயர் பூண்டு விளங்கும் சமயமே சமண சமயம் என்றெல்லாம் நாம் அறிகிறபோது அப்படி உபதேசித்த ஜினனை நோக்கி நம் தலை தானாகவே தாழும்.



சாந்திநாதர் கோயில்

**தொ.மு.பாஸ்கரத் தொண்டைமான்**

இன்று நம் நாட்டில் குஜராத் பகுதியில் தான் சமணர்கள் நிறைந்திருக்கிறார்கள். அவர்கள் கட்டிய கோயில்களும் பல இருக் கின்றன. அவைகளில் சிறப்பானவை கும்பா ரிய கோயில்கள் என்கின்றனர். இன்னும் பாலிடானா சத்ருஞ்சயன் என்னும் இடங் களிலுள்ள சமணக் கோயில்கள் எண்ணிக்கை யிலும் அளவிலும் பெரியவை என்றனர். எனது பிரயாணத் திட்டத்திலோ இவை இடம் பெறவில்லை. ஆதலால் அங்கெல்லாம் காரிலேயே செல்வது அவ்வளவு எளிதான காரியமாகவும் இருக்கவில்லை. ஆதலால் சமணக் கோயில்கள் நிறைந்த ஜாம்நகரையே சுற்றினேன்.

அகமதாபாத்திலிருந்து ராஜ்கோட் வழி யாகத் துவாரகை செல்லும் ரயில் மார்க்கத் தில் ஜாம்நகர் ஒரு பெரிய ஸ்டேஷன். ஆதலால் ரயிலிலேயே சென்று அந்நகரை அடையலாம். பம்பாயிலிருந்து செல்லும் ஆகாய விமானம் மூலமாகவும் அவ்வூர் செல்லலாம். ஜாம்நகர் குஜராத்தில் உள்ள பெரிய நகரங்களில் ஒன்று. பழைய சௌராஷ்டிரா ராஜ்யத்தில் உள்ள பல அரச குடும்பங்கள் தங்கியிருந்த இடம் ஆனதால் கட்டிடங்கள் எல்லாம் பெரிய பெரிய அரண் மனைகளாகத்தான் இருக்கும். அங்குள்ள பெரிய அரண்மனையைப் பார்க்க வேண்டு மானால் முன்கூட்டியே எழுதி ராஜப் பிர முகரின் அனுமதி பெறவேணும்.

நகரத்தின் மத்தியிலே ஒரு பெரிய ஏரி இருக்கிறது. அந்த ஏரியின் நடுவிலே இரண்டு பெரிய கட்டிடங்கள். ஒன்று கோத்தாக் கோட்டை; மற்றொன்று லாகோத்தா. கோத்தாக் கோட்டையில் பார்க்க வேண்டியது ஒன்றும் இல்லை. ஒரு பழைய கிணறு இருக்கிறது. அங்குள்ள ஒரு துவாரத்தின் வழியாக வாயால் ஊதியே தண்ணீரை வெளியில் கொண்டு வரவேண்டி யிருக்கிறது. லாகோத்தா கட்டிடத்தை இன்று ஒரு பொருட்காட்சிச் சாலையாக மாற்றியிருக்கிறார்கள். அங்குதான் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டு முதல் பதினெட்டாம் நூற்றாண்டு வரை குஜராத்தில் வளர்ந்த கலைப் பொருள்களைச் சேகரித்து வைத்திருக் கிறார்கள். அங்குள்ள சிற்பக் கலைப் பொருள் கள் பக்கத்தில் உள்ள கும்லி, பச்சாத் தார், பரன்ஸ், சோட்டிலா, பிண்டாரா, காந்தவி என்ற கிராமங்களிலிருந்து கொண்டு வரப்பட்டவை என்று தெரிகிறது. இன்னும் எண்ணிறந்த படங்கள், காசுகள், மட் பாண்டங்கள் அங்கே இருக்கின்றன. நர்மதை நதிக் கரையில் நாகரிகம் எப்படி வளர்ந்தது என்று ஆராய்ச்சி பண்ணுகிற வர்களுக்கு இவை பெரும் துணை புரியும்.

நகரத்தின் பிரதான பாகத்துக்கே முதலில் செல்லலாம். ஆம், இந்த நகரத்தில் பதி னன்கு சமணக் கோயில்கள் இருக்கின்றன. ஒன்றே ஒன்றுதான் ஊருக்கு மேல்புறத்தில் ஓர் ஒதுக்கமான இடத்தில் இருக்கிறது. மற்றவையெல்லாம் நகரின் மத்திய பிர தேசத்திலேயே இருக்கின்றன. இந்தப் பதி னன்கு கோயில்களையும் பார்க்க நமக்கு அவ காசம் இராது. ஆதலால் அங்குள்ள சாந்தி நாதர் கோயில், சோரிவார் கோயில், சேட் மந்திர் என்னும் மூன்று கோயில்களை மட்டும் பார்த்தால் போதும். சாந்தி நாதரைப் பதினாறாவது தீர்த்தங்கரர் என்று சொல் கிறார்கள். அங்கு சாந்திநாதரும் நேமிநாத ரும் கோயில் கொண்டிருக்கிறார்கள். கரு வறை வாயிலில் எல்லாம் வெள்ளித் தகடு பொதிந்து வைக்கப்பட்டிருக்கிறது. கட்டி டம் முழுதும் பளிங்குச் சலவைக் கற்க ளாலேயே கட்டப்பட்டிருக்கிறது. மரம் மிகக் குறைவாகவே உபயோகப்படுத்தப் பட்டிருக்கிறது. இக் கோயில் சுவர்களில் எல்லாம் சலவைக் கல் சித்திரங்கள். இவை மகாவீரரது போதனைகளை விளக்க எழுந்த வைகளே. அவைகளில் ஒரு சிற்பம்—அர்த்த சித்திர வடிவில் அமைந்த சிற்பம்தான்— விளக்கும் வரலாறு சுவையாக இருக்கிறது. ஒரு மனிதனைப் புலி ஒன்று துரத்தி வரு கிறது. அந்தப் புலிக்குப் பயந்து மனிதன் பக்கத்திலுள்ள மரத்தில் ஏறுகிறான். மரத்தில் ஒரு கிளையைப் பற்றத் தொங்கு கிறான். அந்தச் சமயத்தில் மரத்திலுள்ள ஓர் எலி இவன் தொங்கிக் கொண்டிருக்கும் விழுதைக் கடிக்கிறது. மனிதன் கீழே விழு கின்ற நிலையில் இருக்கிறான். கீழே விழுகிற இடத்தில் ஒரு பாம்பு சீறிக்கொண்டு நிற்கி றது. துரத்தி வந்த புலியுமே ஒரு பக்கத்தில் விழுகின்ற மனிதன் பேரில் பாயத் தயாராக நிற்கிறது. இந்த நிலையில் மரத்தில் கட்டி யிருந்த தேன் கூட்டிலிருந்து தேன் சொட்டு கிறது. அந்த அபாயகரமான நிலையிலும் அந்தத் தேன் துளிக்குத் தன் நாவை நீட்டுகி றான் மனிதன். என்ன அற்புதமான கற்பனை! சம்சார பந்தத்தில் சிக்குண்டு பல தாக்கு தல்களுக்கும் உட்படும் மனிதன் எந்த நேரத் திலும் உயிரிழக்க நேரிடும் என்ற நிலையில் கூட சிறு இன்பங்களை அனுபவிக்கத் துடிக் கிறானே. ஆம், அந்தப் பாசங்களில் சிக்கித் தவிப்பவன் புலன் நுகர்ச்சியை அ[illegible]வா விரும்புகிறான். இறைவனை நோக்கிச் சிந் தனையைத் திருப்ப இயலாதவனாக மாண்டு மடிகிறானே என்று மக்களுக்கு அறிவுறுத் தவே மகா வீரர் இப்படி ஒரு கற்பனை பண்ணியிருக்கிறார். அக்கற்பனைக்கு ஓர் உரு வம் கொடுத்துச் சிற்பமாக வடித்து அங்கே நிறுத்தி யிருக்கிறார்கள். இன்னும் இது போன்று மகா வீரர் போதனைகளை விளக்கும் பல சிற்பங்கள் உண்டு அங்கே.

இச் சமணக் கோயிலுக்குப் பலப்பல சிகரங்கள்; அத்தனையும் அழகு வாய்ந்தவை. உள்ளேயோ பூசை பண்ணுவோர் வாயைத் துணியால் கட்டிக் கொண்டே சிறு சிறு பணிகளைச் செய்கிறார்கள். ஆண்களை விடப் பெண்களே நிறையக் கோயிலுக்கு வரு கிறார்கள். தூய வெள்ளை ஆடை அணிந்து அவர்கள் வந்து வணங்கித் தொழும் காட்சி எல்லார் மனத்திலும் பக்தியை ஊட்டுவதாக இருக்கும். நாமும் மெய் மறந்து சாந்திநாத ரையும் நேமிநாதரையும் வணங்குவோம். சோர்வாரி கோயில் ஐந்நூறு வருஷங்களுக்கு முன் கட்டப்பட்டது என்கிறார்கள். ராய் சேஷ, தார்சேஷ என்னும் இரண்டு சகோ தரர் கட்டிய கோயில் அது. கட்டிட

மாங்காய்களைக் கூடை கூடையாக வைத்துக் கொண்டு ஆராய்ந்து அவற்றைப் பற்றி நூல்களை எழுதித் தள்ளினாலும் மாம்பழத்தைச் சுவைத்த தாகுமா? பழுத்த பழம் ஒன்றைப் பறித்துப் புசித்தாலல்லவோ அதன் சுவை தெரியவரும்?

பாரதத்தின் பழக்க வழக்கங்களைப் பற்றிய நூல்களெல்லாம் அதன் ஆத்மாவை விளக்க முடியுமா? மனிதத் தெய்வங்களாகத் தோன்றும் மகான்களே பாரதத்தின் ஆத்மாவுக்கு விளக்கமாவார்கள். நூற்றாண்டுகளை மணிகளாகக் கொண்டு நாகரிக வாழ்வை அளக்கும் பாரத இனம் என்ற தருவின் இயல்மையும், ஆற்றலையும், அதில் உள்ளடங்கியுள்ள தத்துவத்தையும் மகான்களே விளக்குகிறார்கள்.

— ஸ்வாமி விவேகானந்தர்

அமைப்பு, கருவறையில் தீர்த்தங்கரர் அமைப்பு எல்லாம் ஒன்று போலத்தான் இருக்கும். சிறப்பாகச் சொல்லும்படி ஒன்றுக்கொன்று மாறுபட்டிராது. இங்குள்ள மூர்த்திகளை நான் தரிசிக்கும்போது அருகளைப் பற்றிய ஒரு பழம் பாடல் என் நினைவுக்கு வந்தது.

**மண்டித் தடுமாறும்**
**வாழ்விழந்தேன் மா துயரப்**
**பண்டைப் பழவினை நோய்**
**பற்றறுத்தேன் – பிண்டித்**
**திருமாலை முக்குடைக் கீழ்**
**தேவாதி தேவர்**
**பெருமானை யான் அடைந்த**
**பின்**

என்பதே பாட்டு. ஆம். அந்த ஜீநன் வணங்கிய அருக்கனும் தேவாதி தேவனை வணங்கித் தொழுத மகிழ்ச்சியோடு வெளியில் வந்தேன். சமணக் கோயிலின் கட்டிடக் கலை, தீர்த்தங்கரின் வடிவங்கள் எப்படி அமைந்திருக்கின்றன என்பதையும் தெரிந்துகொண்டேன். இக்கலையின் பூரணப் பொலிவை, இன்னும் சில நாட்களில் ராஜஸ்தானிலுள்ள ஆபு சிகரத்தில் உள்ள அற்புதக் கோயில்களைப் பார்க்கும்போது தெரிந்து கொள்ளலாமே என்ற நிறைவுடன் மேலே நடந்தேன்.

எவ்வளவுதான் சர்வ சமய வாதியானாலும் தமிழனாகிய எனக்கு இத்தலத்தில் சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் கோயில்கள் இல்லையா என்று கேட்கவே தோன்றியது. கடைசியில் அங்கு என்னுடன் வந்த சமண நண்பர் ஒருவர் 'ஓ! இருக்கிறதே! வாருங்கள்' என்று அழைத்துச் சென்றார். ஊருக்குள்ளேயே ஒரு சிறு மண் மேட்டில் ஒரு கோயிலுக்குச் சென்றோம். அதனைப் புருஷோத்தமர் கோயில் என்கிறார்கள். அங்கு மகாதேவனான சிவனும், புருஷோத்தமனான விஷ்ணுவும் கோயில் கொண்டிருக்கிறார்கள். கோயில் மிகச் சிறியது. சமணக் கோயில்களில் நூற்றில் ஒரு பங்குகூட அளவோ, அழகோ இல்லாததுதான். இன்னும் ஒரு நூறு ஆண்டுகளுக்குள்ளேயே கட்டப்பட்ட சத்திய நாராயணன் கோயில் ஒன்றும் அங்கே இருக்கிறது. அக்கோயிலில் பிள்ளையார், அனுமார் எல்லோரும் இருக்கிறார்கள். அங்குள்ள இறைவனைப் பீடுபஜன் மகாதேவன் என்று அழைக்கின்றனர். பிரார்த்தித்துக் கொள்பவரின் துக்கத்தை நிவர்த்தி பண்ணி வைக்கிறாராம் அவர். சுற்றுக் கோயில்களில் லிங்கத் திருவுருவங்கள் பல இருக்கின்றன. காயத்திரி தேவிக்குத் தனிக் கோயில் இருக்கிறது. தமிழ் நாட்டு வைத்தீசுவரன் கோயிலைப் போல் வேம்பு வேறு அங்கு தல விருட்சமாக நிற்கிறது.

ஜாம்நகர் சமணக் கோயிலையும், புருஷோத்தமர் கோயிலையும், சத்தியநாராயணர் கோயிலையும் மட்டும் பார்த்துவிட்டால், ஜாம்நகர் முழுவதையும் பார்த்து விட்டதாக ஆகிவிடாது. ஜாம்நகர் ஊருக்கு வடமேற்கே மூன்று மைல் தூரத்தில் சோலேரியம் என்று ஒரு கட்டிடம் இருக்கிறது. சூரிய ரச்மியைச் சில கண்ணாடிகள் மூலம் உடலில் பாய்ச்சுவதால் என்ன என்ன வியாதிகள் நீங்கும் எனத் தெரிந்து அதற்கென ஒரு பிரம்மாண்டமான கட்டிடம் கட்டி வைத்திருக்கிறார்கள். அக்கட்டிடம் ஆகாய விமானத்தைப் போல் ஒரு பெரிய வாலுடன் கூடியதாக இருக்கிறது. அந்த வால் பகுதியிலேதான் சிகிச்சைக்கு வருபவர்களை வைக்கிறார்கள். சூரிய ரச்மி எவ்வளவு படவேண்டுமோ அவ்வளவு படும் வகையில் அந்தக் கட்டிடப் பகுதியே சுழல்கிறது. சூரிய ரச்மி படப்பட நோய் நீங்குகிறது. இப்படிப்பட்ட சோலேரியம் என்ற சூரிய ரச்மியால் ஏற்படும் இயற்கைச் சிகிச்சைக் கட்டிடம் இந்தியாவிலேயே இது ஒன்றுதான் இருக்கிறதாம். நமக்குச் சிகிச்சை ஒன்றும் தேவையில்லை என்றாலும் சிகிச்சை பெறுபவர்களைப் பார்த்து வரலாம் அல்லவா?

இன்னும் ஒன்று — மருத்துவத் துறையில் என்னென்ன முறைகள் எல்லாமோ இருக்கின்றன. எல்லாவற்றுக்கும் தலையாய முறை ஆயுர்வேதம் என்பதையும் அறிவோம். அந்த ஆயுர்வேத வைத்திய முறைக்கு ஓர் ஆராய்ச்சிக் கழகம் இந்த ஜாம்நகரில்தான் இருக்கிறது. இங்கு அந்த ஆயுர்வேத முறையை ஆராய்ந்து வரும் மாணவர்கள் பயிற்சி பெறுகிறார்கள். தோல் வியாதிகள் சம்பந்தமாகப் பல ஆராய்ச்சிகள் நடக்கின்றன. அங்கு சென்றதும் எனக்கு ஒரு மகிழ்ச்சி ஏற்பட்டது. அந்த ஆராய்ச்சி நிலையத்தின் உதவி டைரக்டர் ஒரு தமிழர். அன்போடு அளவளாவி ஆராய்ச்சி விவரங்களை விளக்கினார். ரத்த அழுத்தத்துக்குப் பெரிதும் உதவும் தமிழ் மூலிகை சர்ப்பகந்தி அங்கு பயிராக்கப்படுகிறது. இவற்றையெல்லாம் பார்த்துவிட்டுத் திரும்பும்போது ஒரு கட்டிடத்தின் முகப்பிலே தேஜோமயமான ஒரு சிற்ப வடிவம் நின்றது. அது ஒரு மகாராஜாவின் சிலை. கிட்டப் போய்ப் பார்த்தால் அதுதான் ரஞ்சித்சிங்ஜியின் சிலை என்று அறிந்தேன். ஆம். ரஞ்சித் சிங்தான் கிரிக்கெட் விளையாட்டில் பெரிய புலி என்று புகழ் பெற்றவர் ஆயிற்றே.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan
Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.



"அடேடே. அவளுக்காக வாங்கின
பாரி மிட்டாயில் பாதிக்கு மேல்
நானே சாப்பிட்டு விட்டேனே!"

பாரி மிட்டாய்க்கான ஆசையை அடக்கவே முடியாது. அனைவரும் அதை விரும்புவதின் காரணம் அது ருசி மிக்கதாயும், சத்து நிறைந்ததாயும் இருப்பதால்தான்.

இவ்வகைகளை ருசித்துப் பாருங்கள் — லெமன் பார்லி கோகனட்ஸ்
ஜிஞ்ஜர் காப்ஸ் • மில்க் டாபி
ஹெல்த் ப்ரூட்ஸ்

**பாரி** மிட்டாய்தானா என்று கவனித்து வாங்கவும்.
காகிதஉறை மேல் பெயர் இருக்கும்

*Parry's*

தயாரிப்பாளர்கள்: பாரிஸ் கன்பெக்ஷனரி லிமிடெட், மதராஸ்

JWT/PRS/1987

